சிவமயம்

யாழ்ப்பாணத்திலிருந்த

காசி-அ-வரதராஜபண்டிதரவர்கள்

இயற்றிய

# சிவராத்திரி புராண

## மூலமும்,

பிரமஸ்ரீ

திரு-சிவானந்த சாகர யோகீசுவர ரவர்கள் மாணாக்கராகிய.

மதராஸ் ரிவினியுபோர்ட் ஆபீஸ் (செட்டில்மெண்ட்) கிளார்க்கு

மா-நமசிவாயம் பிள்ளையவர்கள்

இயற்றிய

## அரும்பிரயோகவுரையும்,

வசனமும்

---

சாதாரண௵ ஆடிமீ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவராத்திரி புராணம்.



## காப்பு.

ஓங்குமொரு மருப்பானை யுயிர்க்குயிரா யிருப்பானை யுரகவேந்தன், றாங்குநெடு நிலத்தானை முகத்தானை வதைத்தானைச் சயில மானைப், பாங்குவைத்து மழுத்தானை பரித்தானைற் றளித்தானைப் பக்கமொற் றேட்டுப், பூங்கமல பதத்தானைப் பொருவிலைந்து கரத்தானைப் போற்றல் செய்வாம்.

## கடவுள் வாழ்த்து.

### சபாபதி.

சீர்தந்த கமலமலர்த் திசைமுகனுந் திருமாலுந் தேவர் கோனுங், கூர்தந்த நகப்புலிக்காற் றவமுனியும் பதஞ்சலியுங் குழைந்து போற்ற, வார்தந்த கலசமுலை மலைவனிதை விழிகளிப்ப மன்றுளாடுங், கார்தந்த மணிமிடற்றுக் கடவுடிருவடியிணைகள் கருத்துள் வைப்பாம்.

---

* ஓங்கும் = வளரும், மருப்பு = தந்தம், உரகவேந்தன் = ஆதிசேடன், தாங்கும் = சுமக்கும், நெடுநிலத்து = நீண்ட பூவுலகத்தில்; ஆனைமுகத்தானை = கஜமுகாசுரனை, சயிலமானை = உமாதேவியை, பாங்கு = பக்கத்தில, மழுத்தானை = மழுப்படை, பரித்தான = தாங்கினோனை

(க) தேவர்கோன் = இந்திரன்; புலிக்காற்றவமுனி = வியாக்கிரபாதர், மலைவனிதை = உமாதேவியார், கார்தந்த மணி — இந்திரநீலரத்தினம்

டவுருட்டு புலவனை நினைப்புகதேசம்ப, பாராட்
டுந் தரவடிவேற் படைபணித்த கரனரனைபாய பதிக
குச் செல்வச், சீராட்டுப் பிள்ளையெனுமுருகன் புரு
கவிழ்மலாத்தாள சென்னி சேர்ப்பாம். (௪)

இரங்குன்றன் றருசரமக கென்றுமக வாழ்முக
லோ ரிரப்ப நீண்ட, கரங்குன்றம் படைத்தனைய கரிமு
கத்தோ னரிமுகத்தோன கதங்கொள் சூரன், வரங்கு
ன்ற மயிலுகைத்தங் கயிலெடுத்த மலாககரத்தோன
மஞ்சு துஞ்சும், பரங்குன்றத் திருந்தசெவ்வேளடிக்க
டிச்செம் பதுமமலா பணிதல் செய்வாம். (௫)

ஈரலைவா யரங்கவரப் பிணங்கிடக்குங் களத்தமா
நீத தெய்திநொய்தில, வாரலைவா யுறுபொருமா வரை
யோரொன் றோரிரண்டா வகிர்ந்த வேலோன், வோ
லைவா யழிந்த மென்மேற்ற கவினபடைத்த வாயிதழ
வேழத் தோடு, சீரலைவாய வருமடிக ளடியரடிப்
பொடிமுடியிற் சேர்த்தல் செய்வாம். (௬)

---

(௫) இரங்கு = கருணைசெய், நீண்டகரம் குன்றம்படைத்தனைய = மலையானது கைகளைப்பெற்றதுபோல, கரிமுகத்தோன் = தாரகன், அரிமுகத்தோன் = சிங்கமுகாசூரன், கதம் = உக்கிரகோபம், உகைத்து = செலுத்தி, அயில் = வேல், மஞ்சு = மேகம், துஞ்சும் = தங்கும், கடி = வாசனை

(௬) வாயசம் = காக்கை, அமாந்தது = போரையொழித்தது, எய்தி = நீங்கி, நொய்தில் = விரைவில், வார = நீண்ட, அலைவாய் = சமுத்திரத்தினிடத்து, மா = மாவிருக்ஷமாயிருந்த சூரபதுமனையும், வரை = கிரவுஞ்சகிரியையும், ஒரொன்று = ஒவ்வொன்றையும், ஓரிரண்டா = இரண்டுபிளவாக, வோல = மூங்கிலுக்கு, வாய் = பொருந்திய, ஐ = அழகை, அழிக்க - செய்கக, கவின் = அழகு, சமர்வேழம் = தெய்வயானை

பொருவாவிக் கயனயனக் குறத்திமுகாம் புயமலர்
த்தும் பெட்பினென்று, மொருவாவி னன்குடிலைப்
பொருளவிரித்துத் தாதைதனக் குரைத்தோ னூர்கா,
மருவாவி நன்குடிஞைப் புனன்மலர்த்தேனுடனளவி
வயற்குப் பாயுந், திருவாவி னன்குடிவாழ் செவ்வே
டன் சேவடிகள் சிந்தை செய்வாம். (எ)

பாரகத்தும் விசும்பகத்தும் பயின்முனிவ ரிமைய
வாதம் பழங்கணீங்கத், தாரகத்தொன் மறையுருவாய்
மருவுசிவ சத்திதரு சத்தி யால்வெஞ், சூரகத்தைத்
துளைபடுத்தியொருதோகை யேறியிருதோகைமார்போ,
டேரகத்தி லிருந்தபிரா னென்னகத்தி லிருக்கவிடாக்
கிடமின்றெனபால. (அ)

நீடலுறழ் கருங்கனங்கள் படிந்துமுழ வெனமுழ
ங்க நிரந்துதும்பி, பாடலபுரி தரத்தழைத்த பாசடைச

(எ) முகாம்புயம் = முகமாகியதாமரைமலரை, பெட்பின் = பெருமையானது. என்றுமொருவா = எப்பொழுதும் நீங்காத. இனன் = சூரியனாகியகுமாரவேள், குடிலை = பிரணவம், ஊர் = ஊராவது, காமரு = அழகிய வாவி = தடாகத்துநீரும், குடிஞைப்புனல = நதியிநீரும்

(அ) பார = மண்ணுலகத்தும், விசும்பு = விண்ணுலகத்தும், பயில = வசிக்கும் பழங்கண் = துன்பம், தாரகம் = ஆதாரமாயுள்ள. தொல = பழமை, சத்தியால = சத்தி வேலால. சூரகத்தை = அசுரர்துமாரபை, ஒருதோகை = ஒப்பற்றமயில, இருதோகை = மயிலபோலுஞ் சாயலையுடைய வள்ளியம்மைதெய்வயானையாமிருவா

(கூ) நீடு = மிகுந்த, அல = இருளை, உறழ் = ஒத்த, கருங்கனங்கள = இருண்டமேகங்கள, முழவு = பேரிகை, நிரந்து = விளங்கி, பாசடை = பசுமைபொருந்திய இலைகளையுடைய பனை—சோலை செய்ய—சிவந்த

சந் தனப்பணையிற் படருஞ்செய்ய, கோடலலர்விளக் கேந்தக குலமயிலொ டகமபுரியுங் குனறுதோறு, மாடல புரிமுருகனிரு சரணமலா பரவிவினை யகறறிவாழ்வாம்.

உருத்தணியாய் வருமசுர ருடறுணிகரு நெட்டி லேவே லுரவோய் துன்பக், கருததணியாப பெருவெ யிலுட்டிளைத் திளைத்தகளையகலக கருணைக் கண்டந், திருத்தணியாா கழனிமுறகீ ழென்றுவழி படுமடியா ரிதயத் துள்ளுந, திருத்தணியாம பதியகத்தும் வாழ் குமர குருபரன்றாள் சிரமேற கொள்வாம. (க0)

பொருவினறு மலர்பொதுளுந தண்டலைசூழ் கதி ரைநகாப புனிதன பாத, முருகியுளத தழுததிவினை நீறழுத்து மாறெழுத்து முணாநது நாவின, முருகசர வணபவசண் முகருகவென றனுதினமுமொழிவோர் தங்கண், மருமருவு கமலமல ரடிமுடியின் மீதுவைத்து வணஙகல் செய்வாம. (கக)

நந்திதேவர்

செய்யதழற புரிசடையுந திருநுதலிற் றனிவிழி யுந திண்டோளுனருங், கையதனிற் சுரிகைமழுப பிர மபுகவை யடிசசிறுமான கன்றுங் தாஙகி, வையமுத

(க0) உருததது=கோபிதது, அணியாய=வகுப்பாக, நெடு= நீணட, இலைவேல=இலைபோலும வடிவாகிய வேல்; உரவோய=உடையவனே, துனபககரு = துன்பத தைததரும் பிறவிநொய, திளைதது = அழுநதி; திளைதத = வருநதிய, கருணைக்கணதநது = கிருபா நோககஞ்செயது, இருததுு=இருக்கச்செய.

(கக) பொருவில்=ஒப்பற்ற, பொதுளும = அடர்ந்துள்ள; தணடலைசூழ = சோலைசூழ்நத, கதிரைநகர் = கதிர் காமம, வினைநீறழுததும = இருவினைகளை நீருககும்.

லனைத்துலகுந் தொழுங்கயிலை மலைகாக்க மதியஞ்சூடு,
மையனருள் பெற்றநந்தி யடிக்கமல முடிக்கமல மாக
வைப்பாம். (கஉ)

சரஸ்வதி.

காரதிரும கயிலைமலைக கண்ணுதன்முப் புரமெரி
க்கக் கருது மநநா, ணீரதிகந் தருந்தரங்கத் தடங்கடல்
சூழ்ந் திடம்புடவி நெடுந்தே ரூர்ந்த, சாரதிதன் றிரு
நாவிலடியருளத் தினிலிருக்குந் தவள மேனிய, பாரதி
செம் பதபபதுமத் துணைப்போது முப்போதும பர
வல் செய்வாம். (கங)

சண்டேசுவரர்

ஆளிரண்டு கரத்தெடுத்த நிறைகுடப்பான் முதற்
புனித நீரி லாட்டி, வாளிரண்டு நிகாத்தவிழி மலைமகள்
கேள் வனைவழுத்தி மலர்கள் சாத்தி, யாளிரண்டு பதம
ளித்தென் றருசசிகரு மமையமதி லவனுசெய் தந்தை,

---

(கஉ) செய்ய=சிவந்த, தழல் = அக்கினிநிறம்வாய்ந்த, புரி
சடை=முறுக்கமைந்தசடை, நுதலில=நெற்றியில்,
தனிவிழியும=ஒப்பற்றகண்ணும, சுரிகை = கத்தி,
முடிக்கு=சிரசிற்கு, அமலம=பரிசுத்தம

(கங) காரதிரும = மேகங்களைசப்திக்கும், நீரதிகந்தரும =
மிகுதியான ஜலமபொருந்திய, தரங்கம = அலை,
புடவி=உலகம், ஊர்ந்த=செலுத்திய, சாரதி=பிர
மன, தவளமேனி = வெண்ணிறம, பதுமம =
தாமரை, துணைப்போது = இரண்டுமலர், முப்போ
தும=காலை உச்சி மாலை யென்னு முக்காலத்தும

(கச) பானமுதல் = பால்முதலாக, நீரில் = நீரிறுதியாக;
ஆட்டி = அபிஷேகஞ்செய்து, ஆளிரண்டு பதமளி
த்து = இரண்டு திருவடிகளைத்தந்து அடிமைகொள்,
எறிந்த — [illegible], அவம=[illegible]

தாளிரண்டு மறவெறிந்த சண்டேசர் முண்டகப்பொற் றாளிறைஞ்சுவாம். (கச)

### திருஞானசம்பந்த சுவாமிகள்

வெங்குருவிற் கவுணியர்தங் குலத்துதித்து மீனவன்றன் வெப்புங்கூனு, மெங்குமிசை பெறமாற்றி யமணரெண்ணா யிரர்கழுவி னேறவேற்றிப், பங்கமிலென் பரிவையுருப் படைத்துயிர்பெற் றெழப்பதிகம் பாடி மேன்மை, தங்குமறைத் திருஞான சம்பந்தன் றாட்டுணைக டலைமேற் கொள்வாம். (கரு)

### திருநாவுக்கரசு சுவாமிகள்.

காவரசு மலரயன்மால் கடவுளர்க்காச சென்றமா செய்காமன் றுணைமம், பூவரசு படவிழித்துப் புனவே ஙகை யத்திபத்தழ புணைந்து போர்த்த, தேவரசு மனம கிழத் திருப்பதிக மிசைத்தமிழ்ற சிறக்கப் பாடு, நாவரசு பதம்பரசு நமக்குயர்பொன் னுடரசு நலகு மன்றே. (கசு)

### சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

மங்குனிறத் திருநெடுமால் வளையெயிற்றுப் பெருங்கேழல் வடிவந் தாங்கி, யங்கணில முழுதுமுழு தறி

---

(கரு) வெங்குரு=சீகாழி, மீனவன=பாண்டியன ; இசை= கீர்த்தி, மாற்றி=நீக்கி, ஏற=சமமதிக்க, பங்கமில்= குற்றமற்ற, அரிவை = பெண் : மறை = வேதியர் குலத்து

(கசு) மங்குல் = மேகம, வளையெயிற்று = கோரைப்பல்லை யுடைய, கேழல்=பன்றி, அங்கண் = இடமகன்ற, உழுது=தோண்டி, சேப்ப = சிவக்கும்படி ; சரம் = அம்பு, வை=கூர்மை, பொங்கு=மிகுந்த, ‹ ‹ து — ஆதாக , அரிவை — பாயேசுவரி

வரிய கமலமல ரடிகள் சேபபச், சங்கணிகைக் குதலே மொழிச சரவைவிழிப பரவையென்பா டன்பாலன் பாற், பொஙகிருளிற் சநதரனை நடபபித்த சுநதரனொடா ேபாறறல் செய்வாம். (கஎ)

### மாணிக்கவாசகசுவாமிகள்.

பெருவாத பித்தகபப பிணிகருடையு முடற்சும க்கும் பிறநதை நீககி, யொருவாத சிவகதியி னுரிமை பெற நறவமல ருமிழுஞ சோலே, மருவாத மளோந்து லவு மன்றுடையாற் குககோவை மாலே சாத்துந, திரு வாத வூரடிக ளடிகளபடி யுறவணஙகிச சென்னி சேர் ப்பாம். (கஅ)

### தில்லேமூவாயிரவர்.

செமமையா ரழலொருகை துடியொருகை தரித் துமன்றிற் திருக்கூத் தாடு, மெமமையா ளுடையபி ரான் யாமவரி லொருவரெனறன் றிசைக்கப பெற்ற, மும்மையா யிரமுனிவா பொறபொதுவிற திருப்பணி கண் முயனறு செய்வோா, தமமையா யிரமுறைகை தொழுதனேயோா தாடடுணேக டலேமேற் கொள்வாம.

---

(கஎ) காவரசு=இநதிரன், ஐமபூவரசு = ஐநது புஷபஙகளா லாகிய பாணஙகட்குத தலேவன, புனம = காடு, அததி=யானேயினது, அதழ்=தோல, தேவரசு= பரமேசுவரன, பரசும=துதிககும

(கஅ) குடையும் = துன்பப்படுததும, பிறநதை = பிறப்புக் குரியவினே, ஒருவாத=எனறுஙகெடாத, நறவம = தேன, மரு = வாசனேயை, வாதம = காறறுனது; அளோநது=கலநது, உலவும=வீசும், படியுற = பூமி யிறபொருநத

(கக) செமமை=சிவபபு, துடி=உடுக்கை, பொறபொது= கனகசபை, மனறில—சிதமபரததில

### சிவனடியார்.

பொய்விரவு பவநீறு படப்புரிவெண் டிருநீறு பூசிக் கண்டி, கைவிரவு மணியினராயஞ்செழுத்து முணர்ந்து மனக் களங்க நீங்கி, மெய்விரவு மறைவரம்பி னிலை கடவா தொழுகியருண் மேன்மை பூண்ட, மைவிரவு கண்டர்தொண்டர் மலரடிகள் சிரத்திருத்தி வழுத்தல் செய்வாம். (௨௦)



## பாயிரம்.



கந்தமலர்ப் பொழில்புடைசூழ் தில்லைவனத் தறிஞர் திருக்கடைக்க ணோக்கி, முந்தவுரைத் தனர்பலரு மாயினுநீ யாகமநூன் மொழிவழாமற், பந்தமறுத் திடுஞ்சிவராத் திரிவிரதச் சரிதைதனைப் பாடுகென்னச், செந்தமிழி னியாவிருத்தப் பாவதனாற் றிரட்டியொன் றாய்ச் செப்பலுற்றேன். (க)

வீணிலிவன் றனதுமடம் வெளிப்படையாச் செய்தனனால் வித்தின் பாதி, நாணிலனென் றெனையுலகி னுவலர்க ணகுவரதை நாடிச் சற்றும், பேணிலனின்மல னிரவின் பெருமையெடுத் துரைக்குமிந்தப் பேறுகூறு,

---

(௨௦) பொய்விரவு = அழியுந்தன்மையை (முடிவா)யுடைய; பவம்=பிறப்பு, மணிவிரவுகண்டிகை=உருத்திராக்க மணிகளாற் புனையப்பட்ட கழுத்தணி, மறைவரம்பின்=வேதங்கூறிய விதிப்படி, நிலை = ஒழுக்கம்.

(க) கந்தம்=வாசனை, பொழில் = சோலை, புடை= பக்கம், பந்தம்—இருவினைக்கட்டு

மேணிலனென் சிவபதத்து ளிருத்துமெனும விருப்
புளத்தை யீர்த்த லாலே. (உ)

வேறு

"அரியநற் பரத விதிமுறை வழுவா தாடுநராடல்
கண்டுவப்போர், விரிசினைத தருவின் வாழ்கவிநடமுங்
கண்டுளவிருபபொடுவியப்பார், தெரிதமிழ்ப்புலவரமிழ்
தெனத தெருட்டுஞ் செய்யுள்கேட் டகமகிழ் சிறந
தோ, ருரியரென் புனசொற கவிசெவியேற்றுள்ளுவப்
புறற கென்பதா லுரைத்தேன். (௩)

---

(உ) மடம்=அறியாமை, வெளிப்படை=யாவரும்அறியும்படி;
ஆலவித தின்பாதி=ஆலமவிதையிறபாதியளவேனும,
பேணிலன=கருதினேனில்லை, நினமலன்இரவின்=
சிவராததிரியின, பேறு = பயன, கூறும=சொல்
லுகின்ற, ஏண=உயாவுபொருநதிய, நிலன = இட
மென்று, எண=நிசசயிககப்பட்ட

(௩) சினை=கிளை, தரு=மரம, கவி=குரஙகு

# சிவராத்திரிபுராணம்.

## உற்பவச் சருக்கம்.

திலக வாணுதற் கலைமகள் செறிதலாற் றினமு
மிலகு நான்மறைத் தொனிநனி யிரைத்திடு தலினு
லலகிலா வுயிர் படைக்குநான் முகற்கிணை யாமென்
றுலகுபோற் றுறைநைமிசவன வளஞ்சிறி துரைப்பாம்.(க)

மண்ட லந்தனைச் செங்கனிப் பவளவாய் மடுத்தன்
றுண்ட முண்டகக் கட்புரு டோத்தம னுறைவை
குண்ட மொண்டழற் கண்ணினன் குலவுல கொப்பென்
றண்டர் யாவரும் புகழ்வது நைமிசா ரணியம். (உ)

முனிவர் முன்னைநாண் முண்டகத் தவிசினன் முகனைப்
புனித மாதவம் புரிந்தியாம் வைகிடப் புவியி
லினிய நற்றல மியம்புதி யெனவெண் கமல
வனிதைகேள்வனோ நுண்ணுதித் தருப்பையைவாங்கி.

---

(க) வாணுதல் = ஒளிபொருந்தியநெற்றி, செறிதலால் = வசித்தலால், இலகு = விளங்கிய, நனி = மிக்க, இரைத்தல = சப்தித்தல, அலகிலா = எண்ணிக்கையில்லாத (இச்செய்யுள் பிரமதேவனுக்கும் நைமிசாரணியத்திற்குஞ் சிலேடையாம)

(உ) மண்டலம = பூமியை, மடுத்து = நிறைத்து; முண்டகக்கண் புருடோத்தமன = விஷ்ணு, உறை = வசிக்கிற; ஒள = சிறந்த, தழற்கண்ணினன = அக்கினிநேத்திரமுடைய சிவபெருமான; குலவுஉலகு = விளங்குகின்ற உலகம, அஃதாவது சிவலோகம

(ந) முண்டகத்தவிசின் = தாமரைமலரைப் பீடமாகவுடைய; வைகிட = வசிப்பதற்கு, வெண்கமலவனிதை = சரஸ்வதி; நுண்ணுதி = கூர்மைபொருந்தியநுனி

இருகை யால்வளை ந்த அருட்டியீ திறுத்திடு மிடத்திற்
பொருவின் மாதவம புரிதிரென றுரைததிடபபோனார்
கருது மககுசை தஙகிய கானமற றதனாற்
றிருவு றைநததிடு நைமிச வனமெனச சிறநத. (ச)

துன்று கொனறையாற் பசுஙகொடி விரவலாற் சுடுதீ
யென்று மேவலாற் கடுவிடப பணிகளெய் துதலாற்
கனறு மானுகண் டுறைதலாற் கதிரமணிக் கனக
மனறு ளாடிய பரமபர னிகர்க்குமவ் வனமே. (ரு)

ஆண்டெ டமுநதுயர் சோலைக ளறவருக் கடைகாய்
மாண்ட நறகனி மலாமுதல் வழங்கினஞ் சுராக்கு
மீண்ட ளிததிட வேண்டுமென றெண்ணிவானளவாய்
நீண்ட வன்றடஞ் சினைககையை நீட்டியே நிற்கும்.(சு)

சடையர் குண்டிகை தரிததிடுங கரத்தாகண் டிகையின்
றொடைய ராதப மறைததிடுந தோகைமென் பீலிக்
குடையா செய்யகற றேய்த்திடுங கோடிக மிறைஞ்சி
யுடையர் மாதவத் துறுவாக ளுறுவதவ் வனமே. (எ)

(ச) இறுததிடுமெ=தஙகும, பொருவில=ஒப்பற்ற; குசை=தருப்பைசசககரம, கானம=காடு, மறறு = பின்.

(ரு) துன்று=நெருஙகிய, பசுஙகொடி=பசசைநிறம்வாயநத கொடிபோனற உமாதேவியாா; விரவல = பொருநதல, மேவல்=பொருநதல், பணிகள் = பாமபுகள்; எயதுதல்=பொருநதல்; உகண்டு = துள்ளியுலாவி. (இசசெயயுள் பரமேசுவரனுக்கும் நைமிசாரணியத்திற்குஞ் சிலேடையாம)

(சு) அறவருககு = தபசிகளுககு, அடை = தழையையும்; மாண்ட=பெருமைதஙகிய, சுரர்க்கு=வானோககு; வனதடஞ்சினைக்கை=வலிமையும பருமனும்பொருநதிய கிளையாகிய கை

ஆதபங்தெறு வேனிறு ளம்புதங் துளித்துச்
சீதநீர்பொழி மாரிநா ளிமம்பெயுந் தினங்கண்
மாதவந்தவ முறிழைத் தும்பரு மதிக்கப்
பாதகங்களைக் கடிந்திடும் படிவரப் படிவர். (அ)

உருப்பவெந்தழல் வேட்பவ ரொண்மலா சமிதை
தருப்பை தண்டளி ரெடுப்பவர் தமனியச் சிகரப்
பருப்பதந்தனைத் தனுவெனக் குனிசெய்த பரனை
விருப்பமோடருச் சிப்பவ ரெண்ணிலா விளம்பில். (கூ)

---

(எ) குண்டிகை = பாத்திரம்; கண்டிகையின்தொடையர் = கழுத்தணியெனனும உருத்திராக்க மாலையைத்தரித்தோர்; ஆதபம = சூரியகிரணத்தை; தோகை = மயில்; பீலி = இறகு; குடையா = குடையையுடையவர்; கல் = காவி, கோடிகம = வஸ்திரம்; இறைஞ்சி = மரவுரி; உறுவர் = முனிவர்கள்; உறுவது = வசிப்பது

(அ) அப்படிவர் = அந்தமுனிவர்கள்; ஆதபம் = சூரியகிரணம்; தெறும = தீய்க்கின்ற, வேனிநாள் = வெயிற்காலத்தில் (பஞ்சாக்கினிமததியிலும); அம்புதம = மேகம; துளித்து = தூறி; சீதநீர்பொழிமாரிநாள் = குளிர்ந்த மழைபெய்யுமகார்காலத்தும; இமமபெயுந்தினங்கள் = பனி பெய்யுங்காலத்தும (ஆறு ஏரிமுதலிய நீர்நிலைகளிலும), உம்பருமதிக்க = (மண்ணுலகத்தவர்களும) விண்ணுலகத்தவர்களு மெச்ச, மாதவந் தவமுறிழைத்து = சிறந்த தவத்தைத் தவறுதுசெய்து, பாதகங்களைக்கடிந்திடும = தீமைகளையொழிக்கும; படிவர் = சொரூபத்தை யுடையவர் அஃதாவது தூயமை பொருந்திய அந்தக்கரணத்தையுடையவா.

(கூ) உருப்பம் = சுவாலை; வேட்பவர் = வளாப்பவா; ஒண் = சிறந்த; சமிதை = அரசுமுதலிய மரசசுள்ளிகள, தமனியம = பொன; பருப்பதம = மேருமலை, தனு = வில

இன்ன நைமிச வனத்தியல் பனைத்தையு மெடுத்து
வன்ன மாமணி கிடந்தொளிர் பஃறலை வாயாற்
சொன்ன வூழிகள் பற்பல தொலைந்திடத் துணிந்து
பன்ன காதிபன் பகரினும் பகர்ந்திடற் கரிதால். (க0)

தெருண்ம னத்துயா வியாதன்மா ணாக்கரிற் சிறந்த
மருண்ம னந்தினாக களவிடற் கரியநான் மறையின்
பொருண்மனந்துணா சூதன்முற் புராணநூலவல்லோ
னருண்ம னந்துட னனையநை மிசவனந் தடைந்தான்.

வேறு.

வந்தமாமுனிவன் றனக்கெதிர் புகுந்து வருகென வுரைத்திவண் வரநீ, யெந்தமா தவஞ்செய் தனமென முகம னியம்பியங் கியாவருமிறைஞ்சி, யந்தமா மணிப பொற் றவிசினிலிருந்தி யருந்தியோடருக்கிய முதலா, முந்தவா தரவிற பூசனைவிதியின் முறைறதவ ருவகை முடித்து. (க௨)

(க0) இன்ன = இத்தன்மையுடைய, இயல்பு = சுபாவலட்சணம், வன்னம = நிறமுள்ள, பஃறலை = பலதலை, தொலைந்திட = செல்ல, பன்னகாதிபன = சாப்பங்கட்குத்தலைவன் அஃதாவது (வாசுகி, அநந்தன, தக்கன, சங்கபாலன, குளிகன, பதுமன, மகாபதுமன, கார்க்கோடகன் எனனும அட்ட நாகங்கட்குத் தலைமை பெற்ற) ஆதிசேடன

(கக) தெருள் = தெளிவு, மருள் = மயக்கம்; முன் = முதன்மையாகிய

(க௨) புகுந்து = போய; அந்தம் = அழகு; பொன்றவிசு = பொன்னாற்செய்தபீடம; அருந்தி = உணவு, முந்த அதவில = முற்பட்ட அன்புடன

மழைக்கரு முகின்மின் னிறத்தமெய்ச் சடில மாத
வர் சூதனை நோக்கி, யிழைப்பதற் கெளிதாய்ப் பவக்க
டல்சுவற்றி யிருங்கதிப் பேறுநல் குவதாய்க், குழைக்
கயனடந்து கழிக்கயன் மருட்டுங் கூர்விழிக் கோதைபங்
கிருக்கு, முழைக்கரப் பெருமான் விரதமொன் றெமக்
கினி துரைத்திட வேண்டுமென் றிரப்ப. (கங)

நன்றென முகமு மிதயமு மலர்ந்து நயனநீர்
பொழிதர விருந்தே, முன்றவ மிழைத்த பயனிது கேட்க
முயன்றது நீவிர் முகக் குறும்பைய, வென்றமா தவத்தீர்
விடையுயர்த் தருளும் விமலனுக் குரியநல் விரதம், மொன்
றுளதம ரனைவருநோற்ப துரைக்குவ னுவந்துகேட்
டிடுமின். (கச)

மின்னைநேர் சடிலத் தவிர்மதிக் கொழுந்து மிலேச்
சிய சிவனிராப் பெருமை, யன்னவூர் தியுமோ ராயிரங்
கவைநா வனந்தனு மறைந்திடற் கரிதான், மன்னுமா
தவஞ்சேர் நந்திவா னவற்கு வழுவையு முழுவையு
முரித்தோன், முன்னைநா ளுரைத்த தென்னொரு நா
வான மொழிந்திட முடியுமோ முடியா. (கரு)

---

(கங) சடிலம்=சடை; இழைப்பதற்கு=அனுஷ்டிப்பதற்கு; சுவற்றி=வறறச்செய்து; இருங்கதி = சிறந்தபதவி; குழைக்கு அயல்நடந்து = காதின் குழையளவுஞ் சென்று; உழை=மான, கழி=சமுத்திரக்காலவாய, கயல்=கெண்டைமீன்.

(கச) முகக்குறும்பை=காமம வெகுளி மயக்கமென்னு முக்குற்றத்தை; விடையுயாத்து=இடபக்கொடியைநாட்டி

(கரு) அவிர்=விளங்கும; மிலேச்சிய = தரித்த, கவைநா= பிளந்தநாக்கு, அனந்தன=ஆதிசேடன, மன்னு = நிலைபெற்ற, வழுவை=யானை, உழுவை=புலி

உலகுயிர் பிரமன் படைப்பதுந் திருமா லுயிர்த்
தொகை காப்பது மூலகி, லலகிலா வளமபெற் றியக்க
ர்கோ னளகை யளிபபதுங் களிப்பொடிந் திரன்று,
ளிலகுபொன் னுலகம் புரப்பது மதிய மிரவிசெந் தழ
ற்கிறை யிவர்க, டலைமைபெற றதுவுஞ் சிவநிசி விரதந்
தனையிழைத தெனவுளத் துணாவீர். (கசு)

கூறுநான் மறையோாக கிருநிலம் பசும்பொற்
குவைபசுக கோடிநல் கிடினும, வேறுவே றுரைத்த
விரதநோற் றிடினும விரியுளைப புரவியின் வேள்வி,
நூறுசெய் திடினும் புரளவெண் டரள நுரைததிரை
கொழிததிடுங் கஙகை, யாறுமூழ் கிடினுஞ சிவநிசி
நோற்போா பெறுபய னடைதன்மற் றரிதால். (கஎ)

அந்தண ரரசர் வணிகாவே ளாள ராதியா விழி
குலத துதிதத, வெநதொழி லாள ரநதமா விநத விர
தமே நோற்றிடி லவாதா, மிநதிர னயன்மா லிமையவா
முனிவர் யாவரு மிறைஞ்சிநின் றேத்தக, கந்தடுகளிறன்
றுரித்துமெய் தரித்த கண்ணுதற் கடவுளிற் பொலிவார்.

---

(கசு) இயககாகோன் = யக்ஷர்கட்குததலைவனும குபேரன ; அளகை=அளகாபுரி ; அளிபபது = காப்பது , செந தழற்கிறை=அககினிதேவன்

(கஎ) கூறும்=கொணடாடும , இருநிலம்=விசாலமான பூமி ; குவை=குவியல், விரி=விரிநத , உளை = பிடரிமயி ரையுடைய; வெண்தரளம்=முதது, கொழிததிடும்= ஒதுககிடும ,

(கஅ) இழிகுலத்துதிததோர் = அனுலோமர் பிரதிலோமா அநதராளர் ஆகியமூவர், வெநதொழிலாளர்=கொடிய தொழில்களைப் புரிபவர் ; அநதமா = இறுதியாக , கநது = கட்டுத்தறி , அடு = முறிக்கிற ; கணணுதற கடவுளிற் பொலிவர் = நெற்றிககண்ணையுடைய பர மேசுவரனைப்போல வாழ்வா (அஃதாவது சாரூபபியம பெறுவா )

ஆவினைப்புரிநூ லணிதருமருமத் தருமறைக் கிழ
வரைக் கருங்கண், மாவினை யளித்த கடலமிர் தனைய
மழலைமென் மொழிசசிறு மகாரைக், காவினைப பொரு
வுங் கருங்குழற் செவ்வாய்க் கன்னிய ரிவர்களைச் செகு
த்த, தீவினை யனைத்தும் பரிதிமுன் னிருள்போற் சிவ
நிசி நோற்றிடிற் றீரும். (க௯)

மறைகளிற்சாம மகங்களிற்புரவி மகமலை களின்
மக மேரு, நிறைபுன னதியிற் கங்கையே யா ரைந்தாய்
நிகழ்ந்தபூ தத்தினா காய, முறைதெரி சுரரிற் கருமுகி
லூர்திமுதன்மைபெற் றுயர்ந்தா னென்ன, வறைதரு
விரதமனைத்தினுமுரைக்குமரனிரவதிகமென்றறிமின்.

மற்றொரு விரதஞ் சிவநிசிக் கிணையா மதிப்பது
மாண்டுமீண் டுதித்துப, பெற்றன தொழில்க ளியற்றி
நின் றுழலும் பிரமன்மான் முதலிமை யவரைப, பற்
றலர் புரமோர் நொடியினி லடலை படவட வரைகுனித்
தருளுங், கற்றையஞ் சடிலக் கண்ணுதற் கிணையென்
றறிவிலா ருரைப்பது கடுக்கும். (உக)

---

(க௯) அணிதரும்=அணிகின்ற; மருமத்து=மார்பையுடைய; மாவினை = இலக்குமியை: மகார் = பிள்ளைகள்; காவினை = சோலையை; பொருவும் = ஒத்த; செகுத்த=கொன்ற

(உ௦) மகம்=யாகம், மகமலை=பெரியமலை; நிகழ்ந்த=விளங்கிய, முறைதெரி = நீதிமுறைகளைத் தெரிந்துள்ள; சுரர்=தேவர்; அறைதரும்=சொல்லுகிற; கருமுகிலூர்தி=இந்திரன்.

(உக) பெற்றன = அடைந்தனவாகிய; உழலும் = அலைந்து வருந்தும்; பற்றலர் = பகைவர்; புரம் = திரிபுரம், அடலை=சாம்பல், வடவரை = மேருமலை; குனித்தல்=வளைத்தல்; கற்றை அஞ்சடிலம்=அழகிய சடைகளின் தொகுப்பு, கடுக்கும்=ஒக்கும்.

அன்புளாரன்றி யன்பிலாரெனினு மரனிர வினி லுண வகற்றிப், புன்புலா லுடலம் வருந்திடத் துயில் கண் பொருந்திடா தருச்சனை புரிந்தாற், றுன்பநீள் பிறவிச் சுழிக்கடலழுந்தித் துயருறாதுறக்கமேமுதலா, மின்பமார் பதத்திற் போகமார்ந் தமல னிணைப்பதம் பெறுவரென் றிசைத்தான். (உஉ)

இனையன மொழிகள் கனைகட லமிர்த மெனச்செ விப் புலம்புக முனிவ, ரனைவரு மகிழ்ந்து மெய்ம்மயிர் பொடிப்ப வங்கையாற் றொழுதுபைங் குவளைச், சுனை பயில கயிலைச் சிவநிசி விரதத் தோற்றமு நோற்றிடு மியல்பும், வினையக றவத்துச் சூதமா முனிவ விரித்து ரைத் தருளென விளம்பும். (உங)

பெற்றுயர் கற்ப வீற்றில கீன்ற பிதாமக னுலந் துபே ருலக, முற்றுமற் றொடுங்கிப பிரளயத் துயிர்கண் முடிந்திடுங் கங்குலி னுளத்தன், புற்றுமா மறையா கம விதிப் படிவண் டுழுதுதே னுண்டுபாட் டயரும, பொற் றுணர்க் கடுக்கைத் தொடைமிடை சடிலப் புனிதனை யருச்சனை புரிந்தாள். (உச)

---

(உஉ) அரனிரவு=சிவராத்திரி; துயில்கண்பொருந்திடாது= தூங்காது ; துறக்கம்=இந்திரபதவி

(உங) இனையன = இப்படிப்பட்ட ; கனை = சப்திக்கின்ற ; பைங்குவளை=நீலோற்பலம்நிறைந்த ; சுனை=ஊற்று நீர்க்குளம் ; பயில்=பொருந்திய; தோற்றம=உதிப்பு.

(உச) பெற்றுயர்=பிரமதேவனடைந்துயர்ந்த;கற்பவீற்று= கற்பமுடிவில, பிதாமகன = பிரமன , உலந்து = அழிந்து ; உழுது = கிண்டி , பாட்டயரும் = கீதம் பாடும , பொற்றுணா = பொன்னிறமுள்ள பூங் கொத்துகள் , மிடை=நெருங்கிய

யாமமோர்நான்குஞ் சென்றகன்றுகாந்தத் திருட்பொழு தகன்றபி னிதழித, தாமமா புனைந்த சோமசேகரன்பொற் ருளிணைபபணிந்தவன் றனது, வாமமாரிமய வல்லியின் றனைநான் வழிபடு கங்குல்வா னவரு, நாமநீரவேலி யுலகுளோரெவருஞ் சிவநிசி யெனாவின் றிடவும. (௨௫)

இசசிவ நிசிநோற் றியாவராயினுமுன் னிணையடித் தாமரை கருதிப, பச்சிமத் தடைந்த பரிதிபூ ருவத்திற பருப்பதத அதிததிடு மளவு, நசசிநற் பூசை புரிந்தவர் முத்தி நண்ணவும் வேண்டுமென் றிரப்ப, வுச்சியின் மணிசே ருரகபூ டணனு முமையவட் கவ்வர மளித்தான். (௨௬)

ஆதலாற்சிவராத் திரியெனுநாம மனைவரு மறைந் திட நிகழ்நத, தீதலாற் பரம னிரவினிற் ருேற்ற மின்னுமோர் காரணமுளதென், ருேதவா ரிதிசூ ழுலகுளோா பொருட்டா வுறுவர்கேட் டுவந்துள முருகச், சூதமா முனிவன் வியாதன்முன் மொழிந்த சொற்படி சொல்லுவான் றுணிந்தே. (௨௭)

பின்னுமோர்கற்பவிறுதியினிரசப்பிரசமென்கமல வீட் டிருக்கு, மன்னவாகனனு முலகுமாருயிரு மழிந

---

(௨௫) உகாநதத்து = கற்பாநததநில், இதழி=கொன்றை, தாமம் = மாலை; சோமசேகரன் = சநதிரனைததரித்தோன் (பரமசிவன்), கஙகுல்=இரவு; வேலி=வேலியாகசசூழ்நத; நாமநீா=பெருஙகடல்

(௨௬) பசசிமம்=மேற்றிசை, பரிதி = சூரியன்; பூருவம= கீழ்ததிசை; பருப்பதம = உதயகிரி; நசசி = பகதிவைதது; உரகபூடணன்=சாப்பாபரணன

(௨௭) ஒதம=அலை, உறுவா=தபசிகள்

திடமெற்றைநா ளிருண்ட, வன்னமாமுகில்க ளீண்டி யோ ரேழு மறிகடனீாமுகந் தெழுந்து, முன்னரேபொழிந்த பிரளயப்புனல்வான் முகட்டளவளவிமுட் டியதால். ()

ஊறிலா னுயிருக் குயிரதா யிருக்கு மொருபொரு ளொப்புடனுயர்வு, வேறிலானகண்டபூரணமானவெறு வெளி வெறுத்தெதி ரடக்கு, மாறிலா னிமய மலைமக டனைத்தன் வாமமீ திருத்தினேன் வாழ்நா, ளீறிலா முதல்வன் யாவருமுய்யயோகமுற் றிருந்தன னிபபால்.

கானிமிர்துளபக் கண்ணியு மணியுங் கவின்பெறப் புனைந்திடுங் கரிய, மேனிய னளித்த சராசர மனைத்து மீளவும படைபபதற் கெண்ணி, யூனிமி ருடற்செங் கட்பெருங் கேழ லுருந்தரித் தாழ்ந்தபே ருலகைக், கூனியமருபிற் றுங்கியப் புனலுட் குளித்துமீ தெடுத் துயாந் ததறபின். (௩0)

(உஅ) இரசம = சுவையுளள ; பிரசம் = தேன்பொருநதிய ; இருள் = கருமையாகிய; வன்னமாம்=நிறமபொருந திய; ஈண்டி =சேர்ந்து, மறிகடல் = அலைகளை மடித் தலையுடைய கடல், பிரளயப்புனல் = உகாநதவெள் ளம் ; வான்முகடு=வானவுசசி.

(உகூ) ஊறிலான்=கெடுதி யில்லாதவன் ; வெறுவெளி=சிதா காசசுவரூபன் ; வெறுதது = கோபித்து , எதிா = எதிாதது ; அடக்கும=தன்னையடஙகசசெயயும, மாறி லான்=சததுருவில்லாதவன் ; வாமம=இடப்பக்கம்.

(௩0) கான் = வாசனை ; இமிர்=வீசும் ; கண்ணி = மாலை ; மணி = கவுத்துவமணி ; கவின்பெற = அழகமைய ; அளித்த=காத்த ; ஊன=மாமிசம ; நிமிா = மிகுநத, கேழல்=பனறி , ஆழநதபேருலகை=பிரளயப்புனலா லழுநதிய பெரிய உலகததை , கூனிய மருப்பு = கோரபபல

சரிதிரைக் கிரிக ளெட்டுமெண் டிசையிற் றளம்
பிடா வகைமுத லூட்டி, விரிகதிர்ப் பசும்பொற் கொடு
முடிவிளங்கு மேருவை நிலைபெற நிறுத்திப், பரிவுறு
முயிர்க ளனைத்துமீ ரேழு புவனமும் பண்டுபோற்
படைத்தற், குரியநான் முகத்துக் குரவனை விரவு
முந்தியம் போதினு லுதவி. (௯௧)

பங்கயத் தயனைக் கடைக்கணித் துலகம் பண்டு
போற் படைத்திடப் பணித்துத், துங்கவேற் றடங்
கட் டிருமகள் சுருதி துதித்திடுந் துணைப்பதம் வருட,
வெங்கண்மா மணிச்சூட் டரவணைப் புறத்து வெண்
டிரைப் பாற்கட னடுவெ, ணங்கண்மா ஞால முழுது
முண் டுமிழ்ந்த வமலனங் கறிதுயில் புரிந்தான். (௯௨)

---

(௯௧) சரி = சரிந்த; திசை = திக்கு; கிரி = அஷ்டகுலா
சலங்கள், (அவை கயிலை, இமயம், மந்தரம், விந்தம்,
நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்னும்
எட்டுமாம), தளம்பிடா = அசையாது, விரி = பர
விய; கதிர் = பிரகாசம்பொருந்திய; கொடுமுடி =
உன்னதசிகரம், பரிவுறும் = துனபமுற்ற, பண்டு
போல் = முன்னிருந்ததுபோல; நான்முகக்
குரவன் = பிரம்மதேவன்; விரவும = பொருந்திய;
அம் = அழகிய; உந்திப்போதினுல் = உந்தியில்
மலர்ந்தபுஷ்பத்தால்; உதவி = உண்டாக்கி.

(௯௨) கடைக்கணித்து = கிருபாநோக்காற்பார்த்து; பணி
த்து=ஆஞ்ஞாபித்து; துங்கவேல்=வெற்றியுற்றவேல
னைய; தடங்கண்=விசாலமானகண்; வெங்கண=உக்
கிரமானகணணையும், மணி=மாணிக்கம்பொருந்திய;
சூட்டு = உச்சியையுமுடைய; அரவணை = சேஷசய
னம; புறத்து=மேலே; அங்கண் = அழகிய இடம்;
அறிதுயில = யோகநித்திரை.

உந்தியிலுதித்த நான்மறைப் பிரம னுரைக்குமுக் காலமுமுணர்ந்து, புந்தியிற் றெளிந்தி ரேழுல குட னே புலவர்கந் தருவர்கிம் புருடா, வெந்திற லரகக ரியக்கர்வா ளசுரர் விஞ்சையர் கருடர்பைசாசர், முந்திய சித்தர் மனுடர்கீ டரகர் முனிவரர் முதன்முதற் படை த்தே. (௩௩)

பூதியமைந்தி னனுபவம் பொருந்திய பொருவின் முக்குணங்களிற் றழுவி, யாதியிற் புகனுன் கிருபதின் மேனுன் கமைந்தநா ருயிர பேத, மோதிய யோனி நாலிடத் துதிப்பித் தொற்றையா ழியந்தடந் தேரூர், சோதிவா னிரவி குளிர்கதிர் மதியுந் தோற்றுவித் தன னனத் துவசன். (௩௪)

பாருல கெவையுஞ் சராசரத் தொகையும் படை த்தபின் பண்ணவா முதலாய்ச், சீருல விடமீ ரோன் பது கணமுந் திரண்டிரு மருங்குசே விபபக், கூருல வியவெள் ளுகிர்பபெரும் பெழ்வாய்க் கோளரி சுமந்த பொற் றவிசிற், காருல வியமைக் குழற்கருந் தடங்கட் கலைமகள் கொழுநன்வீற் றிருந்தான். (௩௫)

---

(௩௩) புலவர்=தேவர்கள், வெம்=கொடுந்தொழிற்புரிவதில்; திறல் = வலிமையுடைய, அரக்கர் = இராககதர்; அசுரா = சுராபானஞ்செயயாதவர் (சுரா-அமிர்தம), உரகர்=நாகர்

(௩௪) பூதியம் = பூதம; முக்குணஙகளிற்றழுவி = இராசதம், தாமதம், சாத்துவீகமெனனு முக்குண சமபநதமாய; யோனிநாலிடதது = அண்டசம சுவேதசம் உற்பிசம் சராயுசம் என்னும நான்கினிடதது

(௩௫) பாருலகு = மண்ணுலகம; சராசரம் = அசையும் பொருளும் அசையாப் பொருளும்; சீருலவிடம் = சிறப்புவிளஙகும; குழல்=கூநதல்

பின்னரோர் தினத்திற் முன்வருத் தமைத்த
பேருலகனைத்தையு நோக்கச், சொன்னமா கணங்கள்
சூழ்வர வெழுந்து துலங்குமே லுலகுபா தலங்கள்,
பொன்னவிர் குடுமிப பூதர முதலாப் போயவன் கண்
டுடல் புளகித், தென்னினின் முதல்வ ரினிப்பிற ரொ
ருவ ரிலரெனுமிருஞ்செருக குற்றே. (௩௬)

உளமிகத்தருக்கிக் கொண்டுமண் டலம்பண் டுண்
டவன் றொண்டையங் கனிவாய்த், தளரிடைக் கரிய
கெண்டையந் தடங்கட் டாக்கணங் கின்றவன் சரமாத்,
துளவணிமருமத் தரியரவணையிற் றுணைவிழி முகிழ்த்
தறி துயில்செய், கிளர்நெடுந தமரத் திரைமணி
கொழிக்குங் கீரவா ரிதிமருங் கடைநதான். (௩௭)

விண்ணினின் றிழிநது முதிர்ந்தசூற் காள மேக
மொன்றமிர்தசா கரத்தி, னண்ணிய தெனவே நெட்டு
டற்பகுவாய் நகுமணிச் சுடிகைவா ளரவிற், புண்ணிய
முதல்வன் யோகநித் திரைமுன புரிவது கண்டுளம்
பொறும, லெண்ணிநின் றடர்ந்து கண்படை வளர்
வோன் யாவனீ யெழுநதிரென் றிசைத்தான். (௩௮)

---

(௩௬) பொன்னவிர்=பொன்னிறமமைநத. குடுமி=சிகரத்தை
யுடைய, பூதரம=மேருமலை.

(௩௭) தொண்டை = கோவையினது; தாககணஙகு = இலக
குமி; தவன் = நாயகன்; மருமம் = மார்பு; முகி
ழ்த்து = குவித்து, கிளர் = விளங்கும்; நெடும =
பெரிய. தமரம=ஒலியுள்ள; கீரம்=பால்.

(௩௮) முதிர்நதசூல்=கற்பமநிறைநத; காளமேகம்=கறுதத
மேகம, நகு = பிரகாசிக்கும், சுடிகை = முடி; பகு
வாய=பிளநதவாய், வாள் = கொடிய, அடாநது =
நெருஙகி, கண்படை = நித்திரை, வளாவோன =
செயவோன.

### வேறு.

அகலந்தனி லலர்மின்பயி லமலன்றுயி லொருவி
யிகல்கொண்டிவை பகர்கின்றனை யாரீயென வினவப்
புகலம்பர முலகும்பர்கள் புவனங்கனல் பவனஞ்
சகலந்தனி யுதவும்பொரு டானென்றுரை தந்தான். ()

பூவுந்தியில் வந்தோனிவை புகலப்புய லனையான்
றாவுந்திரை தவழுங்கட றரையெண்டிசை வரைபார்
மேவும்பல வுயிரும்பாகள் விதியிங்குனை முதன்மற்
றியாவுந்தரு பரதத்துவன் யானென்றுரை செய்தான்.

மறைநாலுமென் னுவுற்றது மண்கால்புனல் விண்டீ
யிறைவாகிய பொருள்யாவுமென் னினைவின்படி படை
னிறையாகிய பரதத்துவன் யானல்லது நீயென் [பபே
றறைவாயறி வற்றாயென வயனுங்கழ றற்றான். (சக)

அக்காலையி லிருவோரையு மடர்மாயை மறைக்கப்
புக்காருணர் வில்லாரமா பொருவான்முயல் பொழுதிற்
கைக்கார்முக முனிவுறமெதிர் கண்ணன்குனித திட்டுத்
திக்கானைகள் வெருவும்படி சிறுநாணொலி செய்தான்.

---

(௩௯) அகலம் = மார்பு; அலர்மின் = இலக்குமி, பயில் = தங்குகிற, ஒருவி = ஒழிந்து, இகல் = பகை, அம்பரம் = ஆகாயம, பவனம = காற்று.

(௪0) விதி = பிரமமனே', புயல் = மேகம; தாவும் = கரையோடு மோதும்; தவழும் = அசைந்து செல்லும; உனையும் = நீமுதலாக.

(௪௧) கால் = காற்று; இறை = தலைமைவாய்ந்த; கழறற்றான் = சொனனன.

(௪௨) அடர் = மயக்கததைச்செயகிற; புக்கார் = புகுநதவர்; கார்முகம் = வில், குனிததிட்டு = வளைதது, திககானைகள = ஐராவதம, புணடரீகம், வாமனம, குமுதம, அஞ்சனம், புஷ்பதநதம, சாருவபூமம், சுபபிரதீபம எனனும திசையானைகளெட்டுமாம.

வலிசோடிய நெடுமால்கர மருவுங்கொடு மரநா
ணொலியாலர வரசும்பர்க ளுடனுட்கிட வுவரா
கலியாாகடை யனலகால்கிளா காலந்தனை யொப்பச
சலியாதட லுடனின்றடு சரமாரி பொழிந்தான். (௩௩)

கடுத்தானுருத் தெழுந்தானெனக் காயுங்கத மிகவந்
தடுத்தானமுத லகிலஞ்சுடு மயிலம்புகள் பலவும்
விடுத்தானவை முடுகாதயல் விலகும்படி விரைவிற்
றடுத்தானொரு குசைகொண்டயா சலசத்தவி சுறைவோன் (௩௪)

சீறித்திசை முகனீடிய சிறையோதிம மதன்மே
லேறிப்பல படைமந்திர மெடுத்தோதினன் விடுத்தா
னூறித்தரு கருணைக்கட லுவணப்பு ளுகைத்தே
நூறிச்சிலகணைகொண்டொரு நொடியிற்றுகள்செய்தான் (௩௫)

கண்டந்தண னிவனுக்கொரு கடிகைப்பொழு தளவிற்
றுண்டஞ்செய்வ னென்றேழ்கடல் சுவறச்சுரர் பதறி
வண்டங்கள் வெடித்துட்கிட வசனிக்குல நாணுந்
தண்டொன்றது கொண்டங்கரி தடமார்பி லெறிந்தான் (௩௬)

(௩௩) கொடுமரம்=வில், அரவரசு = ஆதிசேடனும், உம்பர்
களுடன் = தேவர்களும், உட்கிட = நடுங்க, கலி=
சமுத்திரத்தில், ஆர்=பொருந்திய, அனல்=ஊழித்
தீயும், கால்=ஊழிக்காற்றும், கிளர்=எழும், கடைக்
காலந்தனை = உலக முடிவுகாலத்தை, அடல் =
வலிமை, அடு=கொல்லுகின்ற

(௩௪) கடு=விஷம், உருத்து=சீறி, காயும்=எரிகிற (மூளு
கிற), கதம்=கோபம், அடுத்தான்=அடைந்தான்;
அயில் = கூர்மை. முடுகாது = தன்னிடம்வராது,
சலசம்=தாமரை

(௩௫) ஓதினன்=மந்திரமோதி, ஊறித்தரும் = சுரந்தளிக்
கும்,கருணைக்கடல்=அருளாழியாந்திருமால், உவணப்
புள்=கருடனை, உகைத்து=ஏறி, நூறித்துகள்செய்
தான்=நொறுக்கிப்பொடிசெய்தான்

(௩௬) அந்தணன்=பிரமன், சுரர்=தேவர், உட்கிட=அஞ்சிட,
அசனிக்குலம்=இடியக்கூட்டம்

முதிரச்சின மெதிரச்சுதன முடுகுங்கதை கடுகிற்
பிதிரப்பட்டுதிா தரமைப்புயல பிளிறுற்றிடு மொலிபோ
லதிரப்பொரு செருவிற்றின மட்டாட லரக்க
ருதிரப்பிண முடைநாறிடு மோதண்டமு னுய்த்தான (௪௭)

விண்ணுடெரி கதுவத்திரை விரியுங்கடல சுவறத்
தண்ணுாமதி தபனன்றிசை தடுமாறினா திரிய
மண்ணுடழி வுறறுமாரு மடியும்படி மறமுற்
றெண்ணுதமா பொருதிட்டன ரீரைம்பது வருடம் (௪௮)

பொருதிப்படி மலைவுற்றிடு போதிற்றிரு மாாபன
அருதிக்கிறை வன்செனனி துணிக்கும்படி நெஞசிற
கருதித்துணை விழியிற்கனல காலக்கனல காலும
பரிதிப்படை விட்டானது பலியாதுறல கண்டே. (௪௯)

குரமா முகத்து துருமே லினிக் கொளவான் பர
சிவனறன, சரமானதங் கெடுத்தேவினன றனியாடல
விற குனித்தே, திரமாமுக மொருநானகுள செழுநான
மறை பவனும, வரனாகணை விடுத்தானவளா வட
வைக்கனன மான. (௫௦)

---

(௪௭) முதிரச்சினம=கோபமதிகரிக்க, எதிாமுடுகும = எதி
ரிலவிட்ட, கதை=தண்டாயுதததை, கடுகில = கடு
கைபபோல, பிதிாபடு=துகளாய, மைபபுயல =
கரியமேகம, பிளிறுறறிடும=காசசிக்கும, பொருசெரு
வில=தாக்கும்போரில, தினம=நாளதோறும, அட்
டாடல = கொலைசெய்யும, உதிாபபிணம=இரதத
வெள்ளத்திலிருக்கும பிணத்தினது, முடை=மாமி
சம, உயததான=செலுததினன

(௪௮) எரிகதுவ=தீபபறற, தபனன=சூரியன, மறம=வீரம

(௪௯) மலைவுற்று=மாறுபட்டு, பொருதிடும போதில=போா
புரியுங் காலததில; கனலகால = அக்கினிப பொறி
பறக்க, கனலகாலும பருதிபபடை — அக்கினியைக
கக்கும சக்கராயுதம

(௫௦) குரமா = குதிரை, பரசிவன்றனசரம = பாசுபதாஸ
திரம ஆடல = வலிமையுடைய, திரம = ஸதிரம,
[illegible] — சிவன, [illegible] —எழுகினற, மான=ஒபப

பெண்டான்முடிக் கொண்டானிடம் பெற்றுளுஞ் சிற்றீக, கண்டானுறு மெண்டோளிறை கண்டானகல மண்டா, னுண்டாதுறு நண்டாதிதழ் தொண்டாமறை புறைவோன், றண்டானுதி வண்டானமுதிர் சமரம் பொருதமரம். (௫௧)

கடுவெஞ்சின மொடுதன்படை விடுகின்றனர் கடிதின், றடுவெங்கள மிசைதுஞ்சுவ ரியம்புய னெனவே, கடுவெங்கனல் சிகைகொண்டெழு சுடரின்றிரள் வடிவாய், நடுநின்றன மதியம்பொதி நளிர்செஞ்சடை முதல்வன. (௫௨)

மாசிக்குங்குடமாதத்தினில்வரும்பிறை குறைபத், தொடுக்குந்திதி பனுவலெனச் சொல்லுஞ்சதுர்த்தசியில், வடிக்குங்குலி னம்பேரொளி நண்ணுற்றபி னவ னன்றோ, விடுக்கும்படை நீறாயவை வெந்திட்டன மாதோ.

வேறு

நின்மலை தனக்கு மூத்த நீலமா மலைக்கும் வேதப், பொன்மலை தனக்கு நாப்பட் புரைதவிர் பதும ராக, மன்மலை நின்றதென்ன மாறுகொண்டவர்தம் மிருந்தே,

---

(௫௧) அகலமண்டான் = அகன்ற உலகத்தை, நுண்தாது உறு = நுண்ணியமகரந்தங்களையுடைய, தண்டால — தண்டாயுதத்தாலும், நுதி = கூர்மையுள்ள, வண்டால = அம்பினாலும், தமரம் = ஓசை

(௫௨) கடு = கடுமையிருந்த, கடிது = அதிசீக்கிரத்தில; இன்று = இப்பொழுது, அடு = கொல்லுகின்ற, துஞ்சுவர் = இறப்பர், சிகைகொண்டெழு = கொழுந்து விட்டெரியும், பொதி = தரித்த. நளிர் = கங்கை(ஆகுபெயர்)

(௫௩) குடமாதம் = கும்ப (மாசி) மாதம், பிறைகுறையுந் தொடுக்கும் = தேய்பிறையிற் சதுர்த்தசியாகும், நண்ணுற்றபின = தோன்றியபின், அவனன்றோ — பிரம விஷ்ணுவை [illegible]

மருவருந துளவமாலு மலாமிசை வதிகினறோனு
மிருவரு மநதக கால மிறநதுட லிளைததகனறித
திருவரு மழலின செய்ய சேவடி முடிகா ணுமல
வெருவரு மனதத ராகி வெளகினா ரீஙகினறுரால.()

கூடியங கிருவா தாமுங கோலநீ டொளியை நோககி, யாடியி னடங்கும வெறபி னமாநதுய ரனப ருளளத, தாடிருந தருளவோய நினைனை யுணாநதில மெமது சென்னி, சூடியாம வாழவினறன றுணைப பதங காட்டு கென்றா. (ருகூ)

மாசிமா தததிற றேனறு மதிககலை குறைநது தேயு, மாசிலபன னுககாம பககத தரையிருளியாமந தன்னிற, றேசினுல விளஙகுஞ சோதிச செஞசுடராகி நினற, காசிலா றுதறகட பெமமான றனனுருககாட்டி நின்றான (சூ0)

நீலகண் டமுமெண் டோளு நெறறியிற கண்ணு நீறும, காலினைககாயநத காலும கையின மானமழுவுங கணடு, மாலவன வாமந தனனின மலாயன வலபபா னினறு, சூலபா ணியினை நோககித துதிபல சொலல லுற்றா. (சூக)

ஓதியா யறுவா யெண்ணி லுயிாககுயி ராகியென றும, பேதியாப பரம தாகிப பிறப்பிட னிறப்பிலாமற, சோதியா யெழுததாக கேளவிச சுருதியின முடிவா

---

(ருஅ) மரு=வாசனை, வரும=வீசும, வதிகினறோன=வசிப்பவன, இறநது = கடநது, திருவரும = அழகு பொருநதிய, வெருவரும=அசசமுளள

(ருகூ) கோலம=வடிவம, ஆடி=கண்ணாடி, வெறபின=மலையெனன, அமாநது=விளஙகி

(சூ0) பககதது=பக்ஷத்தது தேசினுல=கீர்த்தியினுல; காசிலா=குறறமறற

(சூக) வாமம—இடப்பககம வலபபால—வலப்பககம

யெங்கட், காதியா யநாதி யாகு மடிகணின னடிகள்
போறறி. (௬௨)

விடைக்கொடி யுயாததாய் போற்றி விரிமலாச
செழுமபொற கொன்றைத, தொடைப்புயா சலனே
போற்றி துலஙகு பொற றோட்டிற ருவும, படைக
கருங கடைககட செவ்வாயப பைநதொடி பஙகா
போறறி, சடைபபரம பரனே போறறி சஙகரா போ
ற்றி போறறி. (௬௩)

விரித்துல கனைதது மாககி வீககுநாட சராசரங்கள்
பரிததுள புவன மூனறும் பாலநேத திரததி யூட்டி
யெரிததுநீ றாககிப பூசி யெனபணிந திலங்கு சூலந
திரிததுநின றடிநினபொற சேவடி போறறி போறறி.

இலகொளிக கதிரோன றூகி யீரமபுனற குமபந
தோறும, பலவுரு வாகித தோனறும பானமைபோ
லஙகங காயநின, றுலகுயிாக் கனுப வஙக ளூடடுவித
தொழிநத காலத, தலகிலாக கருணை நலகு மமலனே
போறறி போறறி. (௬௫)

---

(௬௨) ஓதியாய=மலையாய, எழுதா=எழுதபபடாத, கேள
விசசுருதி = வேதஙகள (இருபெயரொடடு), அடி
கள=கடவுளே!

(௬௩) உயாததாய = உயர்ததினவனே, தொடை=மாலை;
புயாசலம = புஜமாகியமலை, படை = வேல, பைந
தொடி=உமாதேவி, (அனமொழிததொகை)

(௬௪) விரிதது=மாயையினினறு விரியசசெயது; வீககும =
அழிககும, பரிததுள = சுமநதுகொணடுளள, புவன
மூன்று = சுவர்ககமததியபாதலம எனனு மூனறும,
பாலம = நெறறி, திரிதது=சுழறறி

(௬௫) கதிர்=சூரியன, ஈரமபுனல = தணணீர, குமபம=
குடம, அனுபவம=சுகதுககஙகளை. ஒழிநதகாலம =
பிராரதத வினையொழிநதபொழுது

அருவமா யுருவ மாகி யகண்டமா யசல மாகி,
யொருபரம் பொருளாய் வண்ண மொப்புட னுவமை யாவு
மின்றி, நிருமல னாகி யெங்கு நிறைந்து நீங்காது நிற்
கும், கருத்தருஞானானந்தக் கருணையங்கடலே போற்றி.

காலனா வீழத் தாக்குங் கனைகழற் காலா போற்
றி, மூலமாம் பொருளுக் கெல்லா முழுமுதற் பொ
ருளே போற்றி, பாலநேத் திரனே போற்றி படர்தி
ரைப் பாலினவேலை, யாலமுண் டிருண்ட கண்டத்
தண்ணலே போற்றி போற்றி. (௬௭)

பொடியெழப் புரமோர் மூன்றும் புன்னகை
கோட்டிச் சுட்டாய், கொடியினமீ னெழுது வேளைக்
குளவிழி யழலிற் கொன்றாய், படி முற்றக் ககன நீராய்ப்
பரந்தியாம் பரிந்து தேடி, யடிமுடி காண்டற் கெட்டா
வத்தனே போற்றி போற்றி. (௬௮)

நீர்வடி வான செய்ய நெருப்புல வுலவை வானம்
பார்வடி வாகத் தோன்றப் படைத்திட முன்ன மன்னுங்
கார்வடி வான கூந்தற் கவுரியு நீயு மொன்றாய்ப்
பேர்வடி வின்றி நின்ற பிஞ்ஞகா போற்றி யென்றே.

எய்ச்சிலை யுண்டென் றோர்தற் கேதுவா மிடை
யாண் மாரன், கைச்சிலைப் புருவ மைக்கட் கவுதமன்
பன்னி கொண்ட, மைச்சிலையுருவமாற்று மலர்ப்பதன

(௬௬) அசலமாய = அசைவற்றதாய, நின்மலவண்ணம = மல
ரகிதவடிவம

(௬௭) கனைகழல = சப்திக்கின்றவீரகண்டை, படர்திரை =
வீசுகின்றஅலை; பாலினவேலை = பாற்கடல்

(௬௮) கோட்டி = செய்து, கொடியில்மீனெழுதும = மீனக்
கொடியையுடைய, வேள = மன்மதன, குளவிழி =
நெற்றிக்கண், படி = பூமி, ககனம = ஆகாயம், பர
ந்து = வியாபித்து

(௬௯) உலவு = சஞ்சரிக்கிற, உலவை = காற்று, பார் = பிரு
திவி, முன்னம் = முதலில், பேர்வடிவு = நாமரூபம்

வடத்தண்டாந்த, பசிலைப்பனி யானுட் பரிவுடன்
பழிச்சி யேத்த. (௭0)

மருவிரி கமலப் போதின் மன்னுநான் முகத்
தோன வெற்பி, லருவிபோல விழிநீர் சோர வாகநெக்
குருகி யன்பாற, றருவிரி மலர்கநீவித் தமனியச் சபை
யி லாடும, பொருவிரி கமலச் செம்பொற் பூவடி போ
ற்றி செய்தான. (௭௧)

வேறு.

நிலத்தானைக் கடுவொடுக்கு மிடற்றானை மழுத்
தானை நீங்காச் செங்கை, வலத்தானை மலைமகளோ
ரிடத்தானை வரிசிலைக்கை மதனைக்காய்ந்த, சலத்தானை
யெண்புயாசலத்தானைப் படைசூழ்த்தருக்கிவாழ்தென,
புலத்தானை யுதைத்தமலர்ப் பதத்தானைப் போற்றி
செய்தார் புலவ ரெல்லாம. (௭௨)

கந்தரனோ நந்தரத்தான கருணைவிழிக் கடையருள்
ளிக் களிப்பி னோடு, மந்தரவா னவாபுகழ்புள வரக்
கைக்குமரத் தனையளிதேனுணர்ந்து, கொந்தவிழ்நா ண

---

(௭0) எய்தது=இளைத்து, இலை=இல்லை, பனனி=பத்னி (மனைவி), மை=கறுத்த, சிலை=கல் வடத்தண்டு=ஆலங்கிளை, பரிவுடன=அன்புடன, பழிச்சு=துதித்து (எய்த்து என்பது எதுகைநோக்கி எய்ச்சு என வாயிற்று)

(௭௧) மருவிரி=வாசனைவீசும, வெற்பில அருவி=மலையினது அருவி, ஆகம=உடலம, தருவிரி=மரத்தில புஷ்பித்த, தமனியச்சபை=பொன்னமபலம, பொருவிரி=ஒப்பில்லாத

(௭௨) நிலம=பூமிக்கு, தானை=வஸ்திரமாகிய (சமுத்திரத்து), செஙகை வலத்தானை=சிவந்த வலதுகரத்திலுடையவனை, வரி=கட்டப்பட்ட, சிலை=வில், தானை=கோபமுடையவனை, தென புலத்

பூதிதரும் பெரும்பாவக் கடல்கடந்து முத்திநெறி பொருந்து வாரால். (௭௬)

ஆவிந்த மறையவர்கட் களித்தாலும் புரவிமக மாற்றினும், மேவிந்தச் சிவநிசிபோற் பலன்றரா வெனவியந்து விண்ணினோங்கு, மாவிந்த நடையயின்று வந்தனைய கரியுரித்த வரதன் வாமக், கோவிந்த னரவிந்தன் கோவிந்தன் முகநோக்கிக் கூறிப்போனான் (௭௭)

உலங்குலவும் புயமுருந்த னிவ்விரத நோற்றுயிர்காத் துடற்றுப் போரிற், சலங்குலவு மரக்கர்குலச் சலதி வடவையிற்சுவற்றுந் தானைப் பெற்றுப், பொலங்குலவு

(௭௬) அளக்க = அளவிட்டறிய, புடைசூழ் = பக்கத்திற் சூழ்ந்த, மோதிவருங்கடல் = அலைகளால் கரையை மோதுங்கடல், போகமுற்றி = அனுபவித்து முடித்து, பூதி = பிறப்பு

(௭௭) ஆவிந்தம் = பசுக்கூட்டம், புரவிமகம் = அசுவமேத யாகம், ஆற்றினும் = செய்தாலும், மாவிந்தம் = பெரிதாகிய விந்தகிரி, மேவிந்த = மேவும் இந்த, வரதன் = வரமருள்வோன் (பரமேசுவரன்); வாமம் = அழகு; கோவிந்தன் = பசுக்களாகிய ஆன்மாக்களுக்குத் தலைவன் (பசுபதி), அல்லது இடபத்திற்குத் தலைவன்; கோவிந்தன் = விஷ்ணு, அரவிந்தன் = பிரமா

(௭௮) உலம் = திரண்ட (உருண்டையான) கல், குலவு = ஒத்த, உடற்று = வருத்துகின்ற, சலங்குலவு = கோபமுடைய, சலதி = சமுத்திரத்தை, வடவையில் = வடவாக்கினிபோல, சுவற்றும் = வற்றச்செய்யும், தானை = ஆயுதம், பொலங்குலவு = பொன்னிறம் பொருந்திய, பொன் = அழகிய, பூவினை = இனிய பூ, வாரிய, இலம் = (இல்லம்) வீட்டில், குலவும் = வசிக்கும், மயிலை = இலக்குமியை

மிதழ்விரிந்து தேன்றுளித்து வழிந்திடும் புயப்
பொற்பூவி, னிலங்குலவு மயிலைமணந் திமையவர்கண்
முதலெவர்க்கு மிறைவனானான். (எஅ)

நல்லுணர்வுற் றயாகமல நான்முகனே றன்றேழு
நால் வகையிற் றோற்றமும், பல்லுயிரு நினைத்தமனப்
படிபடைத்துத் தனதுகரப் படையும் பெற்றுச்,
சொல்லுமறை முழுதுணர்ந்து தூவியனப் புள்ளூர்ந்து
சுணங்கு பூத்த, வல்லுறழ்மைக் கருங்கண்முலை வாணி
தனை மணந்துபெரு வாழ்வு பெற்றான். (எகூ)

சீதரனுந் திசைமுகனுந் தோற்றத்தற்பி னிவ்விரதஞ்
சிறந்த தெங்கு, மோதவரு மாகமதிச் சிவநிசியுற் பவ
மீதென் றுணர்வீ ரென்றே, மாதவத்துச் சவுனகனே
முதலா னைமிசவனத்தோர் மகிழ்ந்து கேட்பச், சூத
முனி வரனிகழ்ந்த சரித்திரத்தை விரித்தெடுத்துச்
சொன்னானமன்றே. (அ0)

---

(எகூ) நல்லுணர்வுற்று = மேலாகிய ஞானத்தையடைந்து, கரம் = கிரணத்தையுடைய, படை = ஆயுதத்தை, தூவி = இறகையுடைய, வல் = சூதாடுகருவியை, உறழ் = ஒத்த, மை = இருள்போலும், கருங்கண்முலை = கருமைநிறம்பொருந்திய நுனியினையுடையதனம்

(அ0) மாகமதி = மாசிமாதம், சிவநிசி = சிவராத்திரி

# வசனம்.

## நைமிசாரணியச் சிறப்பு.

——oo:❀:oo——

வெண்டாமரையாளோடு செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனிடத்து முன்னொரு காலத்தில் முனிபுங்கவர்கள் சென்று பலவாறு துதித்து வணங்கி உலகைப் படைத்த உத்தமனே! நாற்றிசை பரவும் நான்முகக்கடவுளே! யாங்கள் இடையூறிலாது இனிதாக இறைவனை நோக்கித் தவஞ்செய்தற்காகப் புலி கரடி முதலிய மிருகங்களின் உபத்திரவ மில்லாததாய், நல்லரசாட்சியை யடுத்ததாய், குளிர்வெய்யில் முதலியவற்றின் சம்பந்தம் தேகஸ்திதிக்கு இணக்கமாக வுடையதாய், உணவாதிகள் பிரயாசையின்றிக் கிடைப்பதா யுள்ள ஓர் வனத்தைத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதுகேட்டு மனமகிழ்ந்த பிரமதேவன் கூர்மை பொருந்திய நுனியினையுடைய ஓர் தருப்பைப்புல்லை யெடுத்து வளைத்துச் சக்கராகாரமாகச்செய்து பூமியிலுருட்டி இதுபோய்த் தங்குமிடமே நீவிர்சென்று தவம் புரிதற்குரிய இடமாமெனக் கூறியருளினர். அவ்விருடிகள் அந்த நேமி சென்ற வழியே சென்று அது தங்கிய வனத்திலிருந்து தவஞ் செய்வாராயினர். அவ்வனம் நேமி சென்று தங்கிய காரணத்தினால் நைமிசாரணியமெனப் பெயர் பெற்றது.

வைகுண்டத்தையும் சிவலோகத்தையும் ஒத்ததென்று தேவர்கள் புகழும் சிறப்புவாய்ந்த அவ்வனம் சரஸ்வதி வசித்தலானும் (கல்வி பயில்வதாலும்) எஞ்ஞான்றும் வேதாத்தியயனஞ்செய்யப் படுவதானும் பிரமதேவனையும், கொன்றைமர மிருத்தலானும் அதன்மீது பசுங்கொடி படர்ந்திருத்தலானும் யாகாக்கினியிருத்தலானும் சாபமிருத்தலானும் எப்பொருட்கு மிறைவனாகிய பரமேசுவரனையும் நிகர்த்து விளங்கும். அவ்வனத்துள்ள விருட்சங்கள் இங்குள்ள முனிவர்கட்கு இலை மலர் காய் கனி முதலியவற்றை மிகுதியாகக் கொடுக்கும், இவ

வாறே அங்குள்ள விண்ணவர்கட்கும் அளிப்போமென்றெண்
ணி இலை முதலியவற்றைக் காற்றிலேந்தி விண்ணில் நீட்டி
யிருத்தல் போல ஆகாயத்தை யளாவிய கிளைகளை யுடைத்தா
யிருந்தன.

இத்தகைய சிறப்புவாய்ந்த அந்த நைமிசவனத்தில் சடை
முடி, கமண்டலம், உருத்திராக்கமாலை, மயிற்பீலிக்குடை, காவி
வஸ்திரமுதலியவற்றை யுடையவர்களாய் வசிக்கும் அந்த இரு
டிகளிற் சிலர் இடைவிடாது அருந்தவ மியற்றுபவராயும் சிலர்
ஆகவனீயம், காருகபத்தியம், தட்சணாக்கினி என்னு முத்தீ
வளர்ப்பவராயும், சிலர் வாசனைபொருந்திய மலர்களாற் பர
மேசுவரனை அர்ச்சிப்பவராயும் விளங்குவாராயினர்.

## புராண வரலாறு.

இங்ஙன மிருக்கையில் ஒருநாள் வியாசமுனிவரது
மாணாக்கர்களிற் சிறந்த சூதமாமுனிவர் நைமிசாரணியத்தில்
வசிக்கும் இருடிகளைக் காணும்பொருட்டு அங்குவந்தனர். வந்த
பொழுது அவ்விருடிகள் அவரை எதிர்சென்று வந்தனைபுரிந்து
உபசரித்தழைத்துப்போய் ஆசனத்திருத்தி அர்க்கியமளித்துப்
பூசனைபுரிந்து உணவருத்திப் போற்றி எதிர்நின்று சுவாமிகாள்!
அனுஷ்டிப்பதற் கெளிதாயும் வினையையொழிப்பது ஒப்பில்
லாத மோட்ச சாம்ராச்சியத்தைத் தருவதாயுமுள்ள பரமேசு
வரனுக்குரித்தாய விரதமொன்றை எமக்குத் தேவரீர் திருவாய்
மலர்ந்தருளல் வேண்டும் என்று பிரார்த்தித்தனர். சூதமா
முனிவர் அதனைக்கேட்டு மனமகிழ்ந்து அவ்விருடிகளை நோக்கி
மாதவத்தீர்! முன்செய் தவப்பயனா லிங்ஙனம் கேட்டீர்கள்
போலும் நீவிர் கேட்டவாறே வேதாகமங்க[illegible]
கும் மேன்மை பொருந்திய விரதமொன்றுளது [illegible]
னின், வேதங்களிற் சாமமும், யாகங்களில் [illegible]
மலைகளில் மகமேருவும், நதிகளிற் கங்கையும், பூதங்[illegible]
ஆகாயமும், விண்ணவர்களில் இந்திரனும் முதன்மை பெற்
றிருத்தல்போல, சிவபெருமானுக்குரிய விரதங்களில் முதன்
மைபெற்று விளங்குவது சிவராத்திரி விரதமாகும் பரமேசு

வரன் நந்தியம்பெருமானுக்கு முன்னர் உபதேசித்த அந்தச சிவராத்திரி விரத மகிமை பிரமமதேவனாலும ஆயிரமநா வுடைய ஆதிசேடனாலும சொலலுதறகரிதாகும எனின அவ விரத மகிமையை முறறுமுணாநது எனனொரு நாவாற்சொலல முடியாது ஆகலின எனனாற கூடியவரையிற கூறுவேன, ஒரு முகபபடட மனததுடன கேடபீர்களாகவெனறு சொலலவா ராயினா

## சிவராத்திரி விரத மகிமை.

பிரமமதேவன படைததறறொழிறபெறறதும, திருமால காததறறொழிற பெற்றதும, குபேரன் அளகாபுரிக கிறைவ னானதும், இநதிரன பொனனுலகத்திற கிறைவனானதும, சூரியன் சநதிரன அககினி இம மூவரும தலைமை பெறறதும இச சிவராததிரி விரததைதை அனுஷ்டிததத்னாலேயாம பற் பல பூதானம சுவாணதானம கோடி கோதானம் செயதலும புராணஙகளிலுரைதத மறறைப் பலவிரதஙகளை நெடுஙகாலம நோற்றலும, நூறு அசுவமேதயாக மியறறலும, பலமுறை கஙகாஸநானஞ செயதலும, மேனமைபெறற ஒரு சிவராததிரி விரத மனுஷ்டிபபதற்கு மேனமையுடையனவாகா பிரம்ம க்ஷததிரிய வைசிய சூததிரரோயனறி இழிகுலத துதிததுக் கொடுநதொழில் புரிவோரும விதிப்படி இசசிவராததிரி விர ததை நோறபாராயின அவர் தாம விருமபிய போகஙகளை யனுபவிதது இநதிரன முதலியோர் போறறக் கண்ணுதற கடவுளது திருவடியையடைநது விளஙகுவா பசுவையும், அந தணரையும, சிசுவையும, கன்னிகையையும கொனற தீவினை யனைததும சூரியன்முன் இருள்போல இவ்விரதம நோற்றி டிற் றொலையும. இசசிவராததிரி விரததிற் கிணையாக மற் றொரு விரததினையுரைப்பது, செததுப் பிறக்குந தேவர்களை அனாதிமுதத பரமபொருளாகிய பரமேசுவரனுக கிணையென று அறிவிலாருரைப்பது போலாம

## சிவராத்திரி வரலாறு.

இப்படிப்பட்ட பெருமைவாய்ந்த சிவராத்திரியின் வரலாறு எப்படியெனில், உலகங்களும் பிரமனும் அழிந்து பிரளயத்தில் உயிர்கள் மடிந்திடுங் கற்பமுடிவினிரவிலே நான்கு யாமத்தும் உமாதேவியார் பொன்னிறம் பொருந்திய கொன்றை மாலையைத் தரித்த பரமேசுவரரை ஆகம விதிப்படி அர்சசனைபுரிந்து அவ்வுகாந்தத் திருப்பொழுதகன்றபின் அப்பரமேசுவரரது திருவடிகளிற் பணிந்து, சுவாமின்! நும்மைத் தமியேன் பூசித்த இரவை, வானவரும் உலகுளோரும் நுமக்குரிய இரவெனக் கொண்டாடவும், அவ்விரவில் யாவராயினும் சூரியன் மேற்றிசையில் அஸ்தமித்தது முதல் கீழ்த்திசையில் உதிக்குமவரைக்கும் நும்மைப் பூசித்தால் அவருக்கு இந்திராதி போகங்களையும் முடிவில் மோட்சசாம்பிராச்சியத்தையும் அளிக்கவேண்டுமெனவும் பிரார்த்திக்க, பரமேசுவரர் அங்ஙனமே அளிப்போமாகவென்று அநுக்கிரகித்தனர் * அவ்விரவு சிவராத்திரியென வழங்கி யாவராலுங் கொண்டாடப் பெற்றதாயிற்று.

அன்றியும் இச்சிவராத்திரி மேன்மை பெற்றதற்கு இன்னுமோர் காரணமுளது அஃதியாதெனின், பின்னுமோர் கற்பவிறுதியில் பிரளயப் புனல் வானின் முகட்டளவெழுந்தது அதனால் பிரமன்முதலிய தேவரும் உலகமும் உயிரும் அழிந்தன. அற்றைநாள் ஆதியந்தமற்ற பரமேசுவரர் யாவ

---

* பகற்பொழுது சிவபெருமானுக்கும் இராப்பொழுது உமாதேவியாருக்கும் உரியனவாமென்பது நியமமாதலான், அன்றிரவு பெருமானுக்குரியதாயிற்று. உலகினர் அன்பின் மிகுதியால், ஆணைப் பெண்ணாகவும் பெண்ணை யாணாகவும் அழைப்பது போலவும், தமக்குரிய இடமுதலிய வற்றைத் தமது ஆப்தர் பெயரால் வழங்குவிப்பது போலவும், உமாதேவியார் தமக்குரிய இரவை பெருமான் பெயரால் வழங்குவித்தனர். இங்ஙனம் உமாதேவியார் பூசித்த இரவானது மாசிமாதம் கிருஷ்ணபட்சத்துச் சதுர்த்தசி கூடிய யாம

ரும் உய்யும்பொருட்டு யோகமுற்றிருந்தனர். பின்னர்த் திருமா
லானவர் பிரளயத்தழிந்த சராசரங்களை மீளவும் படைப்பதற்
கெண்ணி வராகவுருத்தரித்துப் பிரளயப் புனலுள்மூழ்கி அந்
தப் புனலெழுந்ததால் அழுந்திய பூமியைத் தமது மருப்பினு
லெடுத்துயர்த்தி யிருத்தி அப்பிரளயத்தாற் சரிந்த திசைக்
கிரிகளெட்டையும் அந்தந்தத் திக்குகளில் அசையாது நாட்டி
மேருமலையை நிலைபெற நிறுத்தித் தமது உந்தியம்போதிலுல
நான்முகக் கடவுளைத் தோற்றுவித்து உலகத்துயிர்களைப் பண்
டுபோற் படைத்திடும்படி அப்பிரமதேவனுக்குக் கட்டளையிட்
டுத் திருப்பாற்கடலிற்சென்று அரவணையி லறிதுயிற் புரிந்
தனர். அங்ஙனமே பிரமதேவன், தேவர், கந்தருவர், கிம்புரு
டர், அரக்கர், இயக்கர், அசுரர் விஞ்சையர், கருடர், பைசா
சர், சித்தர், மனுடர், உரகர், சூரியன், சந்திரன் முதலியோ
ரை முதலிற் படைத்து மறைந்த சீவராசிகளை நால்வகை யோ
னியினிடத் துதிப்பித்து விண்ணவர் முதலியோர் சேவிப்பப்
பொற்சிங்காசனத்து வீற்றிருந்தனன்.

பின்னர்ப் பிரமதேவன் மேற்கூறிய விண்ணவர்முதலி
னோர் திரண்டிருமருங்குஞ் சூழப் புறப்பட்டுத் தாம் படைத்த
உலகங்க ளனைத்திலும்போய் உயிர் வர்க்கங்களைப் பார்த்து
நாம் நினைத்தபடி இவ்வளவு உயிர்த்தொகைகளையும் உண்
டாக்கினேமாகையால் நம்மைப்பார்க்கிலும் முதல்வ ரொருவ
ரு மில்லையெனப் பெருஞ் செருக்குற்று, உடல் புளகித்துத்
திருப்பாற்கடலின் மருங்கடைந்து, ஆங்குத் திருமால் ஆதிசே
டன்மீது சயனித்து யோகநித்திரை புரிவதைக்கண்டு, உளம்
பொறுமல் ஆகாயத்தினின்றிறங்கி நெருங்கி, அறிதுயிற் புரி
வோய்! நீயார் எழுந்திரென்று கூறினன். அப்போது திருமா
லானவர் நித்திரையினின்று நீங்கி, பகைகொண்டிங்குவந்த நீ
யாரென்றுகேட்கப், பிரமதேவன் நான் உலகுயிர்களைப்படைத்
த முதற்பொருள் என்றுரைத்தனன். அதனைக்கேட்ட திரு
மால் கடலையும் அது சூழ்ந்த பூமியையும் திசைமலை முதலிய
வற்றையும் மற்றைய பல வுலகங்களையும் பல வுயிர்களையும் பிர
மனென்று சொல்லுமுன்னையும் படைத்தபரத்துவன் யான்

வரங்கடரு கரடகட மாமுகனைப பூமுகங்கொள் வடி
வேற்றனை, கரங்கொள்விறற் சண்முகனைத் தசமுக
னோ டாககாதமைக் காய்நத மாலை. (க௮உ)

பரைசிவரு பமதாகுரு சிவலிங்கந தனைப்பூசை
பண்ணு வோாநல், விரைகமழு நநதவனம வைத்திடு
வோா கறபுடைய மின்னாா மிகக, வுரைபெறுவெண்
டிருநீறு பூசிடுவோா சிவாலயஙக ளுளுற்றுகின்றோா,
திரைபெறிவா ரிதியுலகி லெமதடியாா தமைபபூசை
செய்யு மேலோா (க௮ங)

நின்மலமா மஞ்செழுத்தை யுளததழுததிச செபி
த்திடுவோா நிகரின மாக, நன்மதிநீ ராடிடுவோர் பஞ்
சபா தகந்தவிாநதோா நாள்கடோறும், துனமதியி லாத
துற வநதணருக காடையன்னஞ் சொன்னமீவோா,
மன்மதியாற் குளஙகூவல் கல்லுவிப்போர் நிழல்சாலை
வழியில் வைபபோா. (க௮ச)

காசியிரா மேசசுரமபொற் கனகசபை யாரூாகா
ளத்தி காஞசி, மாசிலகழுக் குன்றமுது குனறமொற்றி
யூாமருதூா மதுரை யையா, றுசினமறைக காடுவெண்
கா டானைககா மாயூர மருணை புள்ளூர், தேசுதருஞ்சிர
புரநற் றிருப்புகலூா முதற்றலங்கள்செகத்திலுண்டால்.

அததலஙக டமையடைநது புனிதநாப படிநதா
டி யமலமாகிச, சிததமகிழ்நதியாமுறையுஞ் சிவலிங்கந்

---

(க௮ங) பரை=சததி, விரை=வாசனை, உளுற்றுகின்றோர் = கட்டுகின்றவர்

(க௮ச) மாகநல்மதி=நல்லமாசி மாதம்

(க௮டு) முதுகுனறம்= விருததாசலம்; புள்ளூா = வைததீசு வான கோயில, சிரபுரம்=சீகாழி

தெரிசனங்கள் செய்தோயாரு, முத்தர்சிவ நிசிவிரத நோற்றவாமற் றிவரெவாககு முத்தபேராகு, மித்தகை ய ருனறாதர்க கெளியரலாதண்டமிவாக கிலலையென் றான். (கஅசு)

கருதியசொற் கேட்டுளததி னச்சமுடன் வீழ்ந்தி றைஞ்சிக காலணைய, தருதிவிடை யெனபபெற்று வை த்திடுமுத திரைதாங்கித தனனூ ரெய்தி, வருதிரெனத னூதாதமை யழைத்தரனசொன் மாற்றமெல்லாம வகு த்துககூறி, யொருதிகிரி தனையுருட்டித தென்புலங காத் தினிதிருந்தா னுவபபிரேஞேடும. (கஅஎ)

இச்சிவராத திரிவிரத சரிதைதனைக் கேட்டோர்ம ற் றினபாய்க கறரேறா, கசசையடுங கொங்கைமஙகை பங்கனுறை கயிலையெயதிக களிபப ரெனமேற,யுசசிதமாய் ச ருதமுனி மாதவாகேட டுள்ளமுற்றுமுருகிவாயான், மெசசிமகிழ்ந திடவேத வியாதமுனி மொழிபபடியே விளமபினனே. (கஅஅ)

(கஅஎ) சொல்மாற்றம=சொல்லியவார்தைதை; திகிரி=ஆகஞா சககரம்



## வசனம்.

### குஞ்சரபுரிச் சிறப்பு.

வாசனை வீசும் தாமரை மலருக்கும் குவளை மலருக்கும் நண்பர்களாகுஞ் சூரியசந்திரர்கள் தவழ்ந்துசெல்லும் சந்தன விருக்ஷங்களடர்ந்த சாரலையுடைய பெரிய மலையொன்றுண்டு. அந்தமலை விந்தமலை யெனப்படும் அம்மலைக்கு வடபால் சமுத்திரம் போன்ற விசாலமாகிய சிந்துவெனப்பெயர் பெறும் ஒரு நதியுளது. அந்நதியானது பற்பலசெய்கைகளால் யானையையும் தமிழ்ச செய்யுளையும் அரசனையும் ஒத்துள்ளது. அந்நதிக்கரையோரத்தில் குஞ்சரபுரியென ஒருநகர மிருக்கின்றது அந்நகரமானது தாமரைமலரில வீற்றிருக்கும் இலக்குமி தேவியாருக்கு அழகிடும் ஆபரணம் போன்றது அன்றியும அது மண்ணுலகத்தவர்களும் விண்ணுலகத தவர்களும் அதிசயிக்க, தருமம், நீதி, செல்வம முதலியன தழைத்தலால், ஒப்பற்ற பெருமை நிறைந்தது. அந்நகரின் அகழியின புறததுள்ள மதில்கள்; சூல்கொண்ட மேகமபோன்ற கருநிறம் பொருந்திய திருமாலானவர் தமது பொன்னுடையை நீககி அழகிய பசுமைநிறம் வாய்ந்த பட்டாடையைத் தரித்து உலகததை யளந்திட நிமிர்ந்தெழுந்ததுபோ விருக்கும். அவ்வகழியானது மிக்கஅகன்று ஆழ்ந்து, மேகக் கூட்டஙகள் சமுத்திரமென்றெண்ணி வந்து நீருண்ணுந்தன்மை வாயந்ததாய் மதிலைச சுற்றியிருப்பது, மிகவும் நீண்ட அடியினையுமுடியினையு முடைய சக்கரவாளகிரியைச் சூழ்ந்து பெரும்புறக்கட விருப்பதுபோ விருக்கும். அம்மதிலினுசசியில கட்டியிருக்கும் கொடிகள், அந்நகரமாகிய மஙகையானவள் தனது நிறைந்த அழகினை எதிர்நோககும கண்ணாடியாகிய சநதிரனிலுள்ள கறையைத் துடைத்திட, கரஙகளைநீட்டியிருத்தல்போ விருக்கும். அமமதிலினுள் பொன்னாற்கட்டிய கூட கோபுரங்கள்; பிரகாசிககின்ற பெருமைபொருந்திய மணிகளிழைதத தெய்வ விமானஙகள் இப்பூவுலகத்தி விருப்பன போலும, பெரியமலைக்கூட்டஙகளை வரிசையாக இணக்கிவைத்ததுபோலும், கதிர்களை விரித்துச செல்லும் சந்திரனது வளைந்த

முதுகை யுரைஞ்சும்படி உயர்ந்து விளங்கும். தனது நிழலைச் சத்துருவாமெனநினைந்து அதனை அடிக்குந் தன்மை வாய்ந்த யானைகள் நெடியவீதிகளிற் செல்லுகையில், அவை விடுகின்ற மதநீரானது பெருக்கெடுத்தோடுவதால் அவ்வீதிகள் சேறாய் நிறையப்பெறும். அச்சேறானது மிகுந்த தேர்களும ஜனங்களுஞ் செல்வதால் உடனேயுலர்ந்து தூளாய்ப்பறந்து ஆகாயத்தை மறைக்கும். உலகத்தையெல்லாம் விலைமதிக்குமாறுவளருந் தனங்களாகிய சுமைவருத்த, அவ்வருத்தத்திலை நையுமிடையினையுடைய ஸ்திரீகள், தத்தம் கணவரோடு புலவிசெய்யுங் காலத்தில் களைந்தெறிந்த களப கஸ்தூரிகளும் முத்தாரங்களும் இரத்தினாபரணங்களும் தெருக்களிற் கிடந்து பிரகாசிக்கும்.

ஒளி பொருந்திய முகத்தினை யுடைய ஸ்திரீகள், மகிழ்வுறுமாறு இளமைப் பருவம் நீங்கப்பெறாத புருஷர்களுக்குத் திருமண மகோத்ஸவ மியற்றுவதா லுண்டாகிய சங்கத்தொனியும், இடையறாத மணமுரசினொலியும, வீதிகளிற்றேர்கள் செலுத்துகின்ற சப்தமும, யானைகள் காசசித்துப் போர்செய்யும் சப்தமும, குதிரைகள் கனைப்பின்சப்தமும் மேகமுழக்கின் மும்மடங்கதிகமாகும வேதங்களின விரிந்த உரையைப் போதிப்போா சத்தமும், அரசிறை செலுத்த வந்துசேர்ந்த சிற்றரசர்களது சேனைகளின் சத்தமும, வழக்கப்படி தேவாலயங்களில் திருவிழா நடத்துஞ் சத்தமும சமுத்திரவொலியினு மிகுந்து விளங்கும்

அந்நகரம் அளவின்றி மிகுந்த உயிர்த்தொகை முதலியவைகளைத் தம்முளடக்கி யிருத்தலால் உலகனைத்து முண்ட திருமாலின் வயிற்றையொத்து விளங்கும அதில்வேதமோதும் பிராமணர் வசிக்கும் விடுதிகளொருபுறமும், அரசர்கள்வசிக்கும் அழகுவாய்ந்த மாளிகைகளொரு புறமும, வியாபாரஞ் செய்து பொருளீட்டுவோ ருறையு மில்லங்க ளொரு புறமும், பயிர்த்தொழிற்புரிவோர் வசிக்கும வீடுக ளொரு புறமும், மேகலையானது, நூல்போலு மெல்லிதாகிய இடை ஒடியுமென்று அழுது வெறுக்கவும், காலிலணிந்திருக்கும் தண்டை நூபுரங்கள் சப்திக்கவும், கையிலணிந்திருக்கும் வளையல்கள் கலீரென ஒலிக்க

வும், நாட்டியப் பெண்கள் நடனஞ்செயயும் சபைக ளொருபுற மும நிலவும். திருமாலானவா திருபபாற்கடலைக கடைநது தேவர்களுக்கு அமுதமளிததது போல மேன்மை பெற்ற இய லிசை நாடகமெனனும முததமிழாகிய கடலை நாவாகிய மததி னல் சுழலும்படி கலககி அதன சுவையைச செவிப்புலததா லுண்ணுமாறு புலவாகள் கறபவருககுக கலைகளையுணர்த்தும கழகமொருபால் நிலவும இந்திரனுதியா விருமபும எல்லாவள ப்பஙகளும் நிறைந்த அநத நகரையாளும பரிபுரஞ்சயனென்னு ம அரசன பரமேசுவரனிடத்து இடையறாத அனபு பூண்டவ ணய வேதநெறி தவருமலும் மாதர்களது கறபெனனுங காபு அழியாமலும தனதரசாட்சியின கீழுள்ளகுடிகள பழிபாதகஞ் செயயாமலும கிருபாநோககஞ செலுததி அனபோடு அறப பயிா வளாதது அரசுபுரிநது வநதனன

## சுகுமாரன் சரித்திரம்.

அவ்வரசனுககு ஆசிகூறும் புரோகிதனொருவனிருநதான். அப்புரோகிதன் வினைகளையொழிதத தேவகுருவை நிகர்தது வெளளிய பூணூல்தரிததமாாபினனுய ஆகவனீயமுதலிய மூன் றககினிகளையுந தவருது வளர்ததுவநதான் அவன் "புத்தென் னும் நரகமணுகாது ஸதிரம்பணணும்" புததிரப்பேறில்லாதவ னுயக கவலையுறறு நெடுங்காலந தவமபுரிவானுயினன. அத தபோபலததால் அநதப் புரோகிதன்மனைவி வயிற்றில் தீமை முற்றும ஒருருககொணடதுபோலவும், திருப்பாற்கடலில் விடமுண்டானது போலவும், பரமேசுவரனது திருவருளிற குப் பாத்திர ணுகுமபடி ஓா புதலவன பிறந்தான இங்ஙனம பிறநத புதல்வனுககு அந்தப்புரோகிதன் சுகுமாரன் எனனும் பெயரிட்டு இரத்தினுபரணஙகளும பொனனுபரணஙகளும் அணிநது நாளொருமேனியும் பொழுதொரு வணணமுமாய வளா ததது வந்தனன். அப்புரோகிதன் தனபுதல்வனுக்கு ஐநதாமாண் டணுகியபொழுது வேதவிதிப்படி உபநயனசசடஙகு முடித் துச சூரியன் வடதிசையணையும் உததராயணதது நலல ஓரை கூடிய சுப தினத்தில் வெண்டாமரைமலரில் வசிககும் சரஸ்வதி யைப்போற்றி வேதாப்பியாசமும செயவிததான். அசசுகுமா

ரன்; பாம்பினுக்குப் பால்வார்த்ததுபோலவும் கபியினிடத்துப் பாலைக்கொட்டியதுபோலவும் இரவும் பகலும் நூல்களையுணர்த்திடவுணர்ந்து மன்மதனது கணைக்கு இலக்காமென வளர்ந்து வந்தான். பின்னர் அவன் யானையைப்போல வருந் தோற்றங்கண்டு நூல்போலு மென்மையாகிய இடையினையுடைய ஸ்திரீகள் பின்றொடர்ந்து காமுறும் பருவ மெய்தி; தாமரைமலர் போன்ற கண்களையும், சந்திரனையுடைத்து நெருக்கி வரிசையாக வைத்தது போன்ற பற்களையும், அழகியமாலைகளோடு மின்னலைப்போற் பிரகாசிக்கும் பூணூலையுடைய மார்பையும், திரண்டு பருத்து மலையை நிகர்த்து விளங்கும் புஜங்களையும், யானையினது துதிக்கைபோல நீண்டு அழகிய கைகளையும், தாமரைமலர்போன்ற கால்களையும் உடையவனாய ஸ்திரீகளது கண்களைக் கவருந்தன்மைவாய்ந்தனன் பின்னர் அவன் தென்றலாகிய தேரையுடைய மன்மதன் விடுத்த புஷ்பபாணங்களைத் தைத்துருவப் பட்டுப் பதைபதைத்து உள்ளமவருந்தி யவ்விருந்த கணிகையரைச் சேர்ந்தும் அவா அடங்கிலனாகி, இடுமருந்து வாசனையால் மயக்குமருந்து பூசுமருந்து முதலியன செய்து கொழுனன்றனறியோர் கடவுளைக் கரங்குவித்துவணங்காத கற்புடை மடந்தையரை மயக்கிப்புணர்ந்து பசுக்கூட்டத்திலுலவும் எவ்வனப்பருவக் காளையை யொத்துச் சஞ்சரித்தனன்

அன்றியும் அவன் பரமேசுவரனை ஒருபொழுதுஞ் சிந்தை செய்யாதவனாய், அப்பரமேசுவரனது திருவுருக்களைக் கல்லெனவும் செம்பெனவும் நிந்தித்தும், சந்தியாவந்தன மியற்றலை மறந்தும், தருமமெனபதைத் துறந்தும், வேதாகம புராணங்களோதுதலை யொழித்தும், மதனநூன் முதலிய காம சாஸ்திரங்களையே வேதமெனக் கற்றும், அருந்ததிக்குச் சமானமாகிய மடந்தையரது கற்பென்னுந்தருக்களை வேரோடுபிடுங்கி யெறியும் சுழல்காற்றாயினன் இந்தவாறு சுகுமாரன் தீயவழியிலொழுகுவதைக்கண்ட அவ்வூரினர் அதனை அவன் தந்தைபால் எடுத்துணர்த்தினர் அதனைக்கேட்ட புரோகிதன் சாஸ்திரமுணர்ந்து அங்குள்ள பெரியோரையழைப்பித்துத் தன் புதல்வனுக்கு நற்புத்தி புகட்டுமாறு பிரார்த்திக்க, அப்பெரியோர் சுகுமார

னுக்கு அங்ஙனமே நன்மதிகூறுவாராயினர். அஃதாவது,மாறு பாடான செய்கைகளை மனததின்கண் உடைத்தா யிருந்தும் அவைகளைமறைத்து மரததினபட்டையைபபோல உயிர் ஒன் றென்று நினைக்கும்படி நடநது நிதிகளைககவரும் விலைமாதரைச சேர்வோர்; இளமை, வனப்பு தயிரியம், ஞானமமுதலியவற்றை யிழநது கொடிய நோயினை யடைநது இமமை யின்ப மொழி ப்பதோடு மறுமையிலும் மீளாநரகிற் காளாவ ரென்பது திண ணமாம். பிறர் மனைவியரைச சேர்வோர்;தருமம், சிநேகம்,புகழ், பெருமை யென்னு மிவறறை யிழநது தீமையைததரும் கொ டும்பாவம், உலகினர்கூறும பழிச்சொல், நீஙகாதஅச்சம், துன் பந்தரும்பகை என்னு மிவற்றை யடைவர். அன்னிய மாத ரை நாடாதவா இம்மையில அளவிலலாக கீர்த்தி, நல்லொழுக கம், ஞானம், திடசரீரம், வைராககியம் முதலியவற்றை யடை வர். அனறியும் இகழ்ச்சி யடையார், மறுமையிலும் நரகததழுந தாது இன்புறுவர் என்பதுமுதலிய நீதிகளைககூறினர் எனப தாம். கோழிக்கு நாள்தோறும் உணவை வாயிலடைத் தூட்டி னும் அதுபோய்க் குப்பை சீய்த்திடல் தவிராததுபோல மே லாகிய வேதாகமஙகளிற்கூறும் அரிய நீதிகளை எவ்வளவு போ திப்பினும் தீயோா தாம்புரியுந தீச்செயலகளை விடாரென்னும் பழமொழிக் கிலக்காய, அபபெரியோா சுகுமாரனுககு எவ்வள வு நீதிகளைக்கூறினும் அவை அவன் ஊழ்வினையின் வலியால் செவிப்புலம் நுழையாது பலஞ்செயது தைக்காத நீண்ட மர முளையெனவாயின வினையின் றொடர்பு பற்றிப்பிரமனுல் எழு தப்படுந் தலை விதியின் வலியை விலக்கவல்லார் எவரே? பின் னர்ச் சுகுமாரன்;களிப்பினும் தேவாமிருதம புசிப்பினும் நீரில மூழ்கிக் குளிப்பினும் குன்றுகளிலுள்ள குகைகளிற்குறுகியொ ளிப்பினும் நீஙகாதுபற்றிச் சுடுந்தன்மை வாயநத காமமானது அதிகரிக்க உழன்று வருந்தி அதனால் அவன குற்றமற்ற பிரா மண குலத்திற்பிறநதும ஊழ்வினை வயத்தனுயப் பற்பலதீமை களைச் செய்து இழிகுலத் தொழிற் புரிநது வநதனன். அத னுல் அவனை; ஞான உணர்ச்சியுற்றோர் உலகப்பற்றைத் துறப் பதுபோல தாயும், தநதையும,சுற்றததினருமதுறந்தனர். பின் னர்ச்சுகுமாரன் இராக்காலத்தில் கன்னியாமாடஙகளிற்கரந்து

சென்றும் மதிற்காவலைக்கடந்தும் அங்குள்ள மங்கையரைச சேர்வான். அம் மஙகையரும் எவர் விலககினும் விலகாது இவனிசசையின்வழியே நடந்து வநதனர். இஙஙனம் நிகழு கையில், அந்நகரததுள்ளாரிற் சிலா தத்த மனைவியரிடத்துப் புலவிசெய்ததற்குரிய அடையாளஙக ளிருககககண்டு அவர்கள் தத்தமக்குரிய சற்பை யிழந்தனரெனச சலிதது கைதத சிந் தையராயினா பினனா அவாகள், காவலையுங கட்டையுங் கடந்து இரவிற்கரவாயவந்து இததீயசெயலைசசெய்பவா யாவரென மனததிலுனனி யாய்ந்து இது படிற்றொழுகக முடைய சுகுமாரன் செயலையெனத் தெளிந்து, சமயம் பாாத திருந்து நாம்பிடிககினும அவன அகப்படான, அவன்மீது கா தலுற்ற ஸ்திரீகளும இனி நமது சொற்கேளாா, நமது இல வாழ்க்கை இஙஙன மாயிற்றென மனமவருந்துவா ராயினர்.

பின்னர் அவர்கள் யாவரும் ஒருஙகு சேர்ந்து இதற்கு எனசெயவதென யோசிதது, வாயககாலின வழியே செலலும நீரைப்போல் யாவரும ஒரேமனதுடையராய அரசனிடஞ் சென்று நககுறையை யுணாததுவதே தகுதியெனத தீாமா னிதது, நீதிநூல்வழியே அந நகரையாளும அரசனது மா ளிகையைக குறுகி வாயிற காவலரைககணடு நமது அரசர் சிகாமணிக்கு எமது வரவுரைததிடுதிா எனறுகூறினர். அக்கா வலா போய, இலலோாககு அனனையையொதத அரசரேற றை வணஙகி நகருடிகளிற சிலா அரணமனை வாயிலில வந் திருக்கின்றன ரெனறு சொல்ல, கல்வியும செல்வமும பொ ருநதிய அவவரசன அவாகளைத தனமுன அழைததுவரச சொன்னன. மானமாகிய வேலினலே துளைககப்பட்ட நெஞ் சததையுடைய அந்ககரினா, அரசன் கட்டளைப்படி வாயிற காவலர் உட்புகுததச சென்று அரசனைககணடு கைகுவித தும் காலிற்றுழ்ந்தும் வணஙகிநிற்க, அரசன அவாகளைக கிரு பா நோககாற பார்தது நுமககுற்ற குறையாது எனவினவ, அவாகள் தருமராஜனையொத்த அரசசிகாமணியே! பூலோக தேவரென்னும் பிராமணர் குலத்துதிதத கினபுரோகிதனது

மைந்தனும், மன்மதனை போன்ற உருவமுடைய சுகுமாரன்
என்பவன் தனது வருணாச்சிரம தருமங்களை யொழித்துச் சண்
டாளத்துவ முற்றுக் களவு வஞ்சகம் சூது முதலிய தீச்செயல்
களைப் புரிவோனாகி அநேகம் ஸ்திரீகளைக் கற்பழித்து வருகி
ன்றனன், தமது வீட்டிலோ பல ஸ்திரீயின் குறைகளை எவரி
டத்துஞ் சொல்ல நாணமுறுதல் உலகாளை முழுகாயிருக்கும் நோயினை
யொழிக்கும் வைத்தியனுக்கு நோயினது காரணம் உற்பத்தி
செய்கை முதலியவற்றை மறைக்காது தெரிவிக்கு நோயாளி
போல நின்னிடமாயுந் தெரிவித்தோம், அற்பராகிய எங்களை
மாண்ட காத்து இரட்சிக்கவேண்டுமென்று கூறினர்

ஒப்பற்ற செங்கோலேந்திய அரசன், அதனைக்கேட்டு இரு
கண்களுஞ் சிவப்ப வாயிதழ் துடிப்ப நெஞ்சம் பதைப்ப உட
லம் வியர்ப்பத் தனது தாமரைமலர்போன்ற இரண்டு கரங்க
ளாலும் செவிபுதைத்து மிக்க மனவருத்தமுற்று நானரசளி
த்தல் நன்றாயிற்று எனக்கூறிச் சிந்தைசெய்து எதிரில் நின்ற
தனது சேனைத்தலைவரைநோக்கி நீவிர் காற்றைப்போல விரை
ந்து சென்று பிராமணகுலத்துதித்த கொடிய பாதகனாகிய சுகு
மாரனை ஓர் கணத்திற் பிடித்துக் கொணருகவென்னக் கட்டளை
யிட்டனன். திருப்பாற்கடலி லுண்டான விடத்தையொத்த
அச்சேனைத்தலைவர் எமதூதரைப்போல அவ்வேளையப்பொழு
திலோடி மேகமுழக்கமென முழங்கி அங்கங்குந் தேடிப் புன்
றொழிற்புரியுஞ் சுகுமாரனைக் கண்டுபிடித்து விரைவா யிழு
த்துவந்து அரசன் திருமுன்விட்டனர். அரசன் துராத்த
னாகிய சுகுமாரனைப்பார்த்து பிராமணர்கட்குரிய செய்கை
களை யொழித்துக் கொடியபாதகத்தொழிற்புரியு மிவனைச் சிர
ச்சேதம் செய்யவேண்டுமென்றனன். அருகிலிருந்த அமைச
சர்கள் வேந்தனைப்பார்த்து அரசரேறே! பிராமணகுலத்தவ
ரைக் கொல்லுதல் நின்மரபினுக்கு அடாதென்றனர். அத
னைக்கேட்ட அரசன் கோபந்தணிந்து யோசித்துப்பார்த்துச்
சேனைத்தலைவரைநோக்கி அங்ஙனமாயின், ஸ்திரீகளது கற்பெ
ன்னுங் காட்டைக் காமத்தீயினாற் சுட்டு அரும்பழி சுமந்த

இந்தக் காமுகனை நமது நாட்டு எல்லைக்கப்புறம் கடத்தி வன்மின் என ஆஞ்ஞாபித்தனன். அரசனது கட்டளையைச் சிரமேற்கொண்ட சேனைத்தலைவர் சுகுமாரனைப்பற்றி யிழுத்துக் கொண்டுபோய் அவ்வரசன ஆளுகையின எல்லையைக்கடத்தி விலைவழி யுனக்குச் சமுத்தமென்று விடுத்து மீண்டனர். பின்னர்ச் சுகுமாரன மனமதனது கணைகள் தைப்பதாலுண்டாகும் புண்ணையுடைய மார்பில தென்றல்புகுந்து அழல்போற் றகிப்பதால் அவன் முன்னாகக்கூடிய மாதர்களை நினைந்து நினைந்து கண்ணீர்விட்டு அழுதுகொண்டு காட்டுவழியே நெடுந் தூரஞ்சென்று கணக்கில்லாத கரடி ஆளி யானை புலி பாம்பு முதலியவை சஞ்சரிக்கும் அக்காட்டின ஓர்புறத்தையடைந்து அலகைபோற்றனித்துத் துன்பத்தோடு உழல்வானாயினன்.

இங்ஙனமிருக்கையில் அவன் அங்குள்ள ஓர் பொய்கையைக் கண்டு அதன்கரையைக் கிட்டினன். அப்பொய்கையானது திரைகளால் கரையைமோதப்பெற்றும் சங்கமீன்றமுத்துக்கள் கரைகளில் ஒளிவீசப்பெற்றும் குளிர்ந்த நீர்நிறையப் பெற்றும் நீளம் அகலம் ஆழம் என்பனவற்றால் சமுத்திரத்தையொத்துமிருந்தது. அன்றியும் முட்கள்பொருந்திய சிவந்த தாமரைமலர் விளங்கும் அந்தப்பொய்கையெங்கும் நிறைந்த மீன்களை இரையாகத்தேடும் முதலையினது வாய்ப்படாது தப்பி, தூணைபோன்ற வாளைமீன் தாவிக்குதிக்கும். அந்தச் சத்தங்கண்டு நீண்ட கயல்மீன்கள் துள்ளியோடும். அக்கயல்மீன்களை நீர்நாய்கள் துரத்திப்போய்ப்பாய்ந்து பிடிக்கும். அன்றியும் அதில், தீமைபுரிவான் தமது கண்ணைமூடிக்கொண்டு பயனற்ற பொய்யோகம் புரிபவர்போல அளவற்ற கொக்குகள், மீன்களைக்குத்தி விழுங்கவேண்டிப் பாம்புபோல்நீண்ட தமது கழுத்தினைச் சுருக்கிக் கண்களை மூடிக்கொண்டிருக்கும். அன்றியும் உலகத்துள்ளோருக்கு,மக்கள் தத்தம்வினையினவலியால் எடுத்திடுந்தேகமானது ஒழிந்து (இறந்து) மீட்டும் வந்து உலகிற்பிறக்குந் தன்மை இத்தகையதெனக்காட்டுவதுபோல அளவற்ற நீர்க்காக்கைகள் நீரிற் குளித்தெழும். அன்றியும் அதன்

மத்தியில் வெள்ளிய சங்கங்கள் சூழவோர்ந்து செந்தாமரை மலர்மேலேறியிருந்து விளங்குந்தோற்றம், ஆயர்கள் தூங்குஞ் சமயம்பார்த்து அவர்களது உறியிலுள்ள வெண்ணெயைத் திருமாலானவர் கைத்தலத்தில் வாரித்திரட்டி வைத்திருப்பது போலிருந்தன. அன்றியும் அத்தடாகத்தில் மீன்குத்தியானது மீனைப்பிடிக்கக் குதித்தும் அதுபெறாமல் வெட்கி ஓர்பால் சிறகை விரித்திருக்கும். அன்றியும் அத்தடாகத்தினோர்பாலுள்ள மணல்மேட்டில் சக்கரவாகப்பட்சியானது தனது இரண்டு சிறகுகளையும் மூக்கினாற் கிண்டிக் கோதித்தனது உயிர்போன்ற பேடையோடு உலாவும். அன்றியும் பனங்கிழங்கைப்பிளந்ததுபோலு மூக்கினையுடைய நாரைகளின் கூட்டம் ஒருபாலும், அன்னப்பட்சிகளின் கூட்டம் ஒருபாலும், கின்னரப்பட்சிகளின் கூட்டம் ஒருபாலும் விளங்கும். அன்றியும் பலவகை மிருகங்கள் அத்தடாகத்துக்குவந்து நீர் குடித்து அருந்தாகம் நீக்கிக் கரையினோர்பால் குதித்துலாவும். அன்றியும் அத்தடாகம் மடித்தலையுடைய அலைகளாகிய வில்லைவளைத்து வண்டாகிய நாணைப்பூட்டி தாமரை குவளை முதலியவற்றின் மலராகிய அம்புகளைத்தொடுத்து, மங்கையரைப்பிரிந்த துயராற்றாத சுகுமாரனோடு மன்மதன் யுத்தஞ்செய்வது போலுமிருந்தது. இத்தகைய பலவளனுமவாய்ந்த அப்பொய்கையில் முகம்போன்றதாமரைகளும், கண்போன்ற நீலோற்பலங்களும், வாய்போன்ற ஆம்பல்களும், கழுத்துப்போன்ற சங்குகளும், கொங்கைபோன்ற சக்கரவாகப்பட்சிகளும், முழந்தாள்போன்ற நண்டுகளும், கணைக்கால்போன்ற வரால் மீன்களும், புறந்தாள்போன்ற ஆமைகளும் இருத்தலால் அது பெண்களினுருவமாகச் சுகுமாரன் கண்ணிற்குத் தோன்றிற்று. அதனால் அணங்கனாமேல் பின்னும் ஆசைபெருகிச் சுகுமாரன் துன்பத்தாழ்ந்தனன்.

இங்ஙனமிருக்கையில் செம்பஞ்சூட்டிய பாதத்தில் பரிபுரஞ்சப்திக்கவும், விஷம்போன்ற விழிக்கடை காதளவுஞ் செல்லவும், யானையினது மருப்பையொத்த இருகொங்கைகள்

குலுங்கவும், நூல்போன்ற இடை துவளவும், மாலைசூடிய கூந்தல் சரியவும், வஞ்சிக்கொடிபோன்ற ஒருபுலைமடந்தை அங்கு வந்தனள். அவளது வாசனைபொருந்திய மலரணியும் கூந்தலுக்கும இனிய தமிழ் மொழிக்கும் மைதீட்டிய கண்களுக்கும் தேககாந்திக்கும் தளிர்போன்ற பாதத்திற்கும் உலகில ஒப்புணடென்றுஎவராலுஞ்சொல்லத்தகாதாம். அன்னமபோனற நடையினையுடைய அந்த நீசஸதிரீயைச் சுகுமாரன்கண்டு இவள் தெய்வலோகத்து ஸ்திரீயோ அலலது நாகலோகத்துப் பெண்ணோ அல்லது மலைகளில் வாழும் வனதேவதையோ என்று ஐயமுற்று எழுந்து அருகிலெய்தி, இவள் கண்ணிமைத்தலானும் நிலமீது அடி படிதலானும இப்பூவுலகத்து மானிடப்பெண்ணேயெனத் தெளிந்து அவள்மீது ஆருககாதலுற்று நின்றனன். இங்ஙனமிருக்கையில் பிறைசசந்திரன்போன்ற நுதலினையுடைய அப்பெணணானவள் மேகம்போற் கறுத்த பிடியானையை நாடிவரும் களிறறியானைபோல இவ்வனத்திற் றனித்து நமது எதிரில் விரைந்துவந்து நிற்பவன அழகுபொருந்திய பருசது மேருமலையெனவிளங்கும் கொஙகைகளையும், இடியையுண்டாக்கும மேகத்தினது வெப்பமுடைய மினனலை நிகாத்த இடையினையுமுடைய ஸதிரீகளைவெல்லும் மன்மதன் போலும என மனதிலெண்ணித் திகைத்து நின்றனள். பின்னா, மண்குடமபோற்றிரண்டும மலைபோல வலிமையுற்றும விளஙகும் சுகுமாரனது புயத்தை யிலக்காய் அப்புலைமடந்தை தனது புருவமாகிய வில்லைவளைத்துக் கணணாகிய அம்பை யெய்தனள். அதனால் சுகுமாரன் அறிவழிந்து மயஙகி விரகக் கடலில அழுந்தினன். இஙஙனமிருக்கையில் எரியுந்தீயில் நெய்யைமுகந்துசொரிவதுபோல மன்மதன பின்னுங்கரும்புவில்லை வளைத்து மலரம்புகளையெய்து அவனது தேகங்களைத் துளைத்தான். அதனாற் சுகுமாரன் அழவிடைப்பட்ட மெழுகெனு மனத்தனாய் அந்தப் பெண்ணைப்பார்த்து ஓ பெணணரசே! நான் சொல்வதைச் சற்றுதத்தையைசெய்து செவிசாய்த்துக் கேட்பாயாகவென்று சொல்வானாயினன்.

மாதே! குவளைமலர்போன்று சாயுந்தென்று நீரும் மைதீட்டிய கண்ணிருகணைகளின் அருள்வழங்குவாயானால், மன்மதன் ஏவும் குவளைமலரம்பினுக்கு அஞ்சேன். அன்றியும் சிவந்த பவளமொத்த வாயிலாரானள் முத்தைப்போன்ற பற்களின்ஞொளி தோன்றும்படி செய்வையேல், மேற்குத்திக்கில் தோன்றி அகலிரிவைப்போற்றிக்கும் சந்திரனது ஒளிக்கு அஞ்சேன். அன்றியும் நெருங்கி இணையாகவளரும் கும்பம் போன்ற தனங்களாகிய பெரிய மதயானைகள் என்கையிலகப்படச்செய்வையேல், மன்மதனது வாகனமாம் இருளாகிய யானையினுக்கு அஞ்சேன். அன்றியும் செவ்வல்லி மலரினையும் பவளக்கொடியினையும் கொவ்வைக்கனியினையும் ஒத்த வாயினிதழ் ஊறல் குடித்து மகிழுவாயேல், தேசத்தினையும் எனுயிரினையும் எரிக்கும் சூரியனுக்கு மிகுந்த பொருந்திய வீரத்தினுக்கு அஞ்சேன். இங்ஙனம் நீ செய்யாயேல் என் உயிர் நிலைப்பது அரிதாம். ஆயபடி இறக்குமுன் என்று உயிர் உனக்கு அடைக்கலம் நிற்கு பொய்யன்று, உண்மையேயாம் என்று சுகுமாரன் இனியசொற் பகர்ந்து கைகளைச் சிரமேற்குவித்து அவள் பாதத்தில் வீழ்ந்து வணங்கினான்.

இங்ஙனம் சுகுமாரன் சொல்லியதைக்கேட்ட அப்புலைமடந்தை சகிக்கமுடியாத மோகமயக்கமும் விரகமுமாகிய துன்பத்திலாழ்ந்து அந்தச் சுகுமாரனுக்கு அறிவிக்குமாறு புன்னகை புரிந்தனள். பின்னர்ச் சுகுமாரன் அவள் புன்முறுவல் செய்ததைக்கண்டு தமதெண்ணம் பூர்த்தியாயிற்றென மனமகிழ்ந்து தாமரைமலர்போன்ற அவள் கரத்தைப்பற்ற, இருவரும் ஏகமனதாகி ஒரு பொதும்பரிற்புகுந்து இன்பம் நுகர்ந்தனர்.

பின்னர்ச் சுகுமாரன் அந்த ஸ்திரீயைப்பார்த்து மாதே! நமது சிநேகம் இன்றோடேயன்று இத்தேகம் உள்ளமட்டும் பிரியாமலிருப்போமென்று சொல்ல அம்மங்கையும் அதற்கிசைய இருவரும் மனமொருமித்து அருகிலுள்ள புலாலநாற்றம் வீசும் ஓர் புலைச்சேரியிற் போய்ச்சேர்ந்தனர்.

அப்புலைச்சேரி எவ்வாறுள்ளதெனின், சுரைக்கொடி படர்ந்த புற்குடிசைகளில்வசிக்கிற பிள்ளைகள், பசுவினது பச்சைத்தோலைக்கௌவியிழுத்துக்கொண்டு துள்ளிக் குதிக்கும் நாயினது சிறிய குட்டிகளின் கழுத்தில் கயிற்றைக்கட்டி யிழுத்து விளையாடவோ அன்றியும் அமுதமொத்த குதலைமொழியும் இளங்குழவியினது பசிக்கிரங்கித் தாய் முலைப்பாலை யூட்டித் தோலாகிய பாயிற் கிடத்திப் பு[illegible]சரியர் தாலாட்டும் இசையானது பாணர்பெருகும் அன்றியும் பாலைக்காலரில் மதுவைக்குடித்துப் பறையடித்துக் களித்தாடிக் களைத்து விழுந்து உறங்கும் பறைப்புருடர் துயிலெழுவான் வைகறையிற் கோழிகள் கூவுஞ்சத்தம் காது செவிபட முழங்கிவிளங்கும்.

இத்தன்மைய புலைச்சேரியில் சுகுமாரனிருந்து உண்மைத் தாயப் புலவுஞ்சோறு மதுபருகி அப்புலைமடந்தையுடன் கூடி இன்பம் புசித்து மனக்களிப்புற்றிருந்தனன். இங்ஙனமிருசின்னாட்சென்றபின் அப்புலைமடந்தை வயிற்றில் ஐந்து புதல்வர்கள் பிறந்தனர். அப்புதல்வர்கட்குச் சுகுமாரன் வேடனையுங் கள்ளையும் ஊட்டிவளர்க்க அவர்கள் பாதகம் நிறைந்தவளர்ந்தனர். பொதிகைமலையானது தென்றலையுந் தமிழையும் நல்கியதுபோல அப்புதல்வர்கட்குப்பின், அரம்பையையொத்த அழகுபொருந்திய இரமணியரை யீன்று சுகுமாரன் மனமகிழ்வுற்றுப் பின்னர் வீரம்பொருந்திய ஐந்து இயமனைப்போல வளரும் தனது ஐந்து புதல்வர்களுடன் சுகுமாரன், வாள், தண்டு, அம்பு, வில் முதலிய ஆயுதங்களையெடுத்துக்கொண்டு காட்டிற்சென்று அக்காட்டுப்பாதையின் வழியேபோகும் பிரயாணிகளை வழிமறித்து அடித்து வருத்தியும், பிராமணர், க்ஷத்திரிகள், வைசியர், விருத்தர், துறவிகள் முதலினோர் அநேகரைக் கொலைசெய்தும், அவர்கள் பொருள்களைக் கவர்ந்துகொண்டு கடல்மீனைக்குத்திய மீன்குத்திப் பறவைபோல ஓடி மறைந்துவிடுவான். அன்றியும் அவன் விசாலமாகிய நீர்க்கரையிற்போய்க் கண்ணியைத்தொடுத்து அங்குக் கயல்மீனை இரையாகத்தேடும் தோலுப்புள், சிறுநாரை, பெரு

கொங்கைகளுண்டாய் விரகமருவும் மங்கைப்பருவ முற்றனர். அன்றியும் அவர்களது விழிகள், தாமரைமலர், நீண்ட கயல் மீன், நீலோற்பலம், பெண்மான், கூரியஅம்பு, கடலின் நஞ்சு, அமுதம் இவைகளையொத்தும், அஞ்சனந் தீட்டப்பெற்றும், நீண்டுசென்று காதைக்கிழிக்குந் தன்மைவாய்ந்தும், வலிமை பொருந்திய மன்மதனது ஆகமங்களைக்கற்றும, வஞ்சனைபொருந்திய கொலைத்தொழில் பயின்றும் மதர்த்தன. அக்காலையில் சுகுமாரன்; தாமரைமுகையானது முறுக்குடைந்து மலருஞ் சமயம்நோக்கித் தேனையுண்ணக் காத்திருக்கும் வண்டைப் போலிருந்து, சந்திரனும அன்றிலும பகைப்ப அனங்கன் அடர்ந்து அம்புகளை யெய்ததால் அக்கினியினுங்கொடிய காமமாகிய விடந்தலைக்கேற அதைச் சகியாதவனாய் மயங்கித் தாம் பெற்ற புதல்வியர்க ளிருவரையு மணந்து இன்பம் நுகர்ந்திருந்தனன். இங்ஙனமிருக்கையில் அந்த மங்கையர்க ளிருவரும் கருப்பமுற்று இரண்டு மைந்தரைப்பெற்றனர். அவ்விரு குழவிகளையும சுகுமாரன் வாரியெடுத்து மடிமீது வைத்துத் தாலாட்டி அமுதமொத்த குதலைமொழிகேட்டு உவப்புற்றுக் களையும் ஊனையுமூட்டி வளர்த்து வந்தனன்.

இங்ஙனமிருக்கையில் சூரியகிரகணகாலம் சம்பவித்ததால் அக்காலையில் அந்நகரையாளும் அரசன் ஆடையாபரணங்களையும பசுக்களையும தானம்பண்ணினன். அநேகம் பிராமணர் அவைகளை வாங்கிக்கொண்டு காட்டுமார்க்கமாய்ச் செல்லுகையில சுகுமாரன் தன் மைந்தருடன் சென்று; சூலம், தண்டு, வாள், வில், அம்பு என்னும் ஆயுதங்களால் அவர்களை அடித்து மனங்கலக்கி அவர் கைப்பொருளை அபகரித்துக் கொண்டு சிங்கமபோற் றனதிருப்பிடஞ் சேர்ந்தனன்.

அந்தப் பிராமணர், பல், கன்னம, புஜம, மார்பு, முதுகெலும்பு, கை, கால் இவைகள் ஒடியப்பெற்றவர்களாய் மனங்கலங்கிப் பேசச் சக்தியற்று நெடுநேரம் வருந்திப் பின் ஒருவாறு மனந்தெளிந்து, பகையாகிய இருளினை யொழிக்கும் அருக்கனும் வேலாயுதத்தைக் கையிலேந்திய அரசன்* வாழும்

அரண்மனையைநோக்கிச்சென்று முறையோமுறையோ வென கூவினார். அரசத்தம அரசனசெவியில பஞ்சலோகங்களையும ஒருங்கே காய்ச்சி யூற்றியதுபோற்பட, அவ்வரசன் வாயிற்காவ லரையழைத்து அவரைக்கொணாமின்னெனக் கட்டளையிட்ட னன் அங்ஙனமே காவலாளா உட்புகுத்த அந்தப்பிராமணா சென்று தத்தம் தேகங்களிலுள்ள காயங்களை அரசனுக்குக் காணபித்தனா. யாவருக்கும அன்னையையொத்த அரசன இரங்கிய மனத்துடன் பார்த்து இங்ஙனஞ்செய்தவர் யாவ ரெனவினவ, அவா தாங்களியங்கு மெகுத்த தானங்கொடுத்த வைகளையெல்லாம, பாவமே வடிவாகிய சண்டாள னொருவன மைந்தருடன காட்டில்வந்து வழிமறித்துப பறித்துக்கொ ணடு அடித்து ஆயுதங்களாலிங்ஙனந் துன்புறுத்தினன், அவன் பெயர் ஊர் முதலியவை யாம தெரிந்தோமில்லை யெனக்கூறி னர். தன்னுயிர்போல மன்னுயிர் காக்கும அரசன அதனைக் கேட்டு வாயிதழ்துடிப்பக் கண்தழற்பறக்கக் கையோடுகையை த்தாக்கி இருகரங்களாலும செவித்துளைகளை மூடிக்கொணடு, அநீதிநடக்கு முன்னமே அதனை யுணாந்து அது நடவாவண ணந்தடுப்பது எனது கடமையாயிருக்க, அங்ஙனமின்றி இத்த கைய கொடுஞ்செயலை நடந்து அதனால் குடிகள் வருந்தி மே மிடமவந்து அறிவிக்குமவரையில் குருடரையொத்து வாளாவி ருந்த எனது அரசாட்சியை மறவாட்சியெனபேனு, மடமாட்சி யென்பேனு, குறையாட்சி யென்பேனு, கொடுமாட்சி யென் பேனு, படுமாட்சி யெனபேனு, பழியாட்சி யென்பேனு, நான அரசனிருந்தல நன்று நன்று எனக்கூறி மனமவருந்தி, எதிரில் நின்ற சேனைத்தலைவரை நோக்கி நீவிர்; பிர காசிக்கின்ற வெற்றிபொருந்திய ஆயுதங்களைக் கையிலேந்திய சிலபடைகளசகிதம கடிதிலோடி, கல்லையொத்த மனத்தனுடைய இங்ஙனந் தீமைபுரிந்த கொடியோனை, சூரியன் மேற்றிசையில அஸதமிக்கு முன்னாக காடெங்குந்தேடிக் கண்டுபிடித்துக கொணடுவாருங்களெனக் கட்டளையிட்டனன் அப்படைத் தலைவா தணடு, சக்கரம, வில, அமபு, வாள, வேல் என்னும் ஆயுதங்களைக்கொண்டு கண்டோர் யமதூதரென

அஞ்சி விரைந்துசென்று காட்டையடைந்து சிங்கம், புலி, யானை, கரடி, முயல் முதலிய மிருகங்கள் சஞ்சரிக்கும் குகைகளை மரப்பொதும்பர்களெங்கும் ஆய்ந்து தேடினர்.

அக்காலையில் கையில் ஆயுதத்தைத்தாங்கிய சேனைக்கூட்டங்கள் தேடிவந்து தன்னையேயெனச் சுகுமாரன் குறிப்பாலுணர்ந்து மருண்டு மனங்கலங்கி மனைவியர் மைந்தரோடு அக்காட்டிலுள்ள எவரும் அறியாத ஒரு குகையில் பகல் முழுதும் மறைந்திருந்து, இரவில் பன்னாடையிற் றீக்கொண்டு அக்காட்டையகன்று பயங்காரணமாக நடந்து பற்பலகாதங் கடந்து சென்று, சூரியன் தனது ஒற்றையாழித்தேரை நடத்திக்கொண்டு கீழ்த்திசை யுதயகிரியின்கண் தோன்றுதற்குச் சற்று முன்னர் அவ்வடையாளங்காட்டுவான் கோழிகள் கூவுங் காலத்தில், வேணவதேயத்தை யடைந்து அங்குள்ள ஓர் மலைச்சாரலில் ஒளித்திட்டனன். பின்னர்ச் சுகுமாரன் பழமையாகிய ஆணவமுதலிய வினைகளின்படியே அங்குள்ள மலைகளிலும் வனங்களிலுஞ் சஞ்சரித்துக் கண்ணிகுத்தல் முதலிய பலதந்திரங்களைச்செய்து, முயல், உடும்பு, பன்றி, மானினங்கள் முதலியவைகளைக்கொன்றுகொணர்ந்து உண்டு தீவினை மேம்பட மறஞ்செலுத்தி வாழ்ந்து வந்தனன்.

சுகுமாரன் இங்ஙனமிருக்கையில், மாசிமாதத்து மகாசிவராத்திரி விரததினம் சம்பவித்தது அன்று; அந்த மலைச்சாரலுக்கு அரைக்காதவழிதூரத்திலுள்ள, தேவர்களது பகைவரை வெல்லும் குலிசப்படையைக் கையிற்றாங்கிய இந்திரன், அயன், மால் முதலினோர் திரண்டுபோற்ற யானையையுரித்த கண்ணுதலோன் வீற்றிருக்கும் நாகநகர் என்னுமோர் பேரூரில் வசிக்கும் பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் முதலினர் அங்குள்ள புண்ணியதீர்த்தங்களில் மூழ்கி மடிவஸ்திரந்தரித்து ஆசாரத்துடன், மகாபாதகங்களை நீறாக்கி யொழிக்குந் திருநீறுதரித்து உருத்திராக்கமாலைகளணிந்து பஞ்சாட்சர ஜபஞ் செய்து; சங்கு, பம்பை, உடுக்கு, மத்தளம், தாளம். சல்லரி மல்லாரி என்னும் வாத்தியங்கள்

கவும் பாதவிதிப்படி நாட்டியப்பெண்களாடவும் விளங்கும், நாகேச்சுரர் ஆலயத்திறசென்று அன்புகூரத்தொழுது முத்து மாலைகளால் அலங்கரித்து நெய்விளக்கேற்றி, அப்பெருமானு க்கு; வலம்புரி, மாதவி, முல்லை, மல்லிகை, செவ்வந்தி, பிச்சி, மந்தாரம், கரவீரம, சாதிமுல்லை, தாமரை, கருங்குவளை முத லிய மலர்களைத்தரித்து அர்ச்சனைபுரிந்துபோற்றி இரவு முழு தும் கண்துயிலாது சிவராத்திரிவிரதம் நோற்கலுற்றனர்.

இதனையறியாத சுகுமாரன் முன்ஜன்மத்திற்செய்த நல் வினை கிஞ்சித்திருந்ததால் அவன் தனதுமனைவியர் கூந்தற்குச் சூட்ட அவ்விரவின் அர்த்தயாமத்தில் திருட்டுத்தனமாய மலர் கொய்வான் நாகேச்சுரர் சந்நிதிக்கு எதிரிலுள்ள நந்தனவன த்திற்குப் போகும்பொழுது அங்குநடந்த புதுமை யெல்லாங் கேட்டு இந்த அர்த்தயாமத்தில் இங்கு நடந்தென்ன அற்புதமெ ன்று அந்தத்திக்கை நோக்க, அக்காலத்தில் அளவில்லாத மாந் தர்கள் அங்குநிறைந்து அரகரசம்போ சங்கராவெனப் போற் றிப் பரமேசுவரனுக்குத் திருவாராதனை செய்தனர். அக்கால த்தில் சுகுமாரன் அந்த நாகேச்சுரரைக் கண்குளிரத் தரிசித் தனன். பின்னர் சுகுமாரன் தான்விரும்பிச்சென்றபடி மலர் களைத் திருடிக்கொண்டு தனதுஇருப்பிடமாய காட்டையடை ந்து மனைவியர் கூந்தற்குச்சூட்டி மகிழ்ந்திருந்தனன். பின்னர் அவன் கொடிய தீவினைகள் பலபுரிந்து மனைகிழத்தியரோடு கூடி வாழ்ந்து பன்னாட்கழித்தகை கொடியநோயாற் பீடிக்கப் பட்டு மத்துறைடைக்குத் தயிர்போல மனஞ்சுழன்று மயங்கி, பாதகமென்பது இந்நாட்டைவிட் டொழிந்ததுபோல இறந் தனன்.

இங்ஙனம் சுகுமாரன் இறந்தவுடன்; இயமதூதர் பலர், அவர்களது பனைமரமொத்த கரங்களில், வில், அம்பு, தண்டு, சக்கரம், சூலம், வாள், வேல், கணிச்சி, கழுமுள், பிண்டி பாலம், பாசம் இவைகளைக்கொண்டு மேவி அநேகம்புலிகள் ஒருபசுவை வளைத்ததுபோல அவனை வளைத்தனர். சால்போ ன்ற பெரிய வயிற்றினையும், பிறைச்சந்திரன்போல் வளைந்த

பற்களையும், வடவாமுகாக்கினியையொத்த குடுமியினையும, இடிபோன்ற குரலினையும, இரத்தம்போற் சிவந்த கண்களையும், மேகம், ஆலகாலம், நீலமலை இம்மூன்றுங் கூடியதுபோன்ற கருநிறம் வாய்ந்த தேகத்தையும் உடைய அககாலதூதாகளிற் சிலா, மகாபாவியாகிய இசசுகுமாரனை ஆவிபதறிப் பதைக்கப்பிடித்து விரிந்தபாறையில் மோதுமென்பர், இவன் நாக கையிழுதது அறுமென்பாசிலா, இவன் கைகால்களை ஒடியுமென்பர் சிலர், அதனைக்கேட்டு அவனைப்புடைப்பா சிலர், அவனது பல்லை யொடிப்பர் சிலர், அவனதுமாாபெனுமபி லுதைபபா சிலர், தனைடையீசி அவன்தேகத்தி விடிப்பா சிலா, பாசககயிறறைநகொணடு அவனது கண்டததையிறுககிக கணகளபிதுஙக இருகைகளாலும் பிடிதது இழுபபா சிலா இஙஙனம் அவவெமதூதாகள அவனைவருததி அவனது விசாலமாகிய புஜட வருந்தி நூறியும்படி வரிநதுகட்டி இயமலோகத்திற்கு இழுததுசசெலலத தொடஙகினா

இங்ஙனமிருககு, திருக்கைலாயமலையின் செமபொற் றிருககோயிலிலே உமாதேவியாரிடப்பால விளஙக வீற்றிருந்தருளும் பரமேசுவரன் நந்திதேவரையழைத்து நமது வாயிலில் வாழுங கணஙகளை ஓாகணத்திலனுப்பிச் சுகுமாரனைக காலநாதர் இயமலோகததிற்குகொண்டுபோகுமுன் ஓா விமானத்தேறறி இக்கைலைக்குக கொண்டுவரப்புரிவாயெனக் கட்டளையிட்டனர். நந்திதேவர் அங்ஙனமே வாயிலையடைந்து அங்குள்ள கணங்களையழைத்து நம பரமேசுவரனது அருள்பெற வந்த சுகுமாரனைக் காலதூதுவர் தென்புலத்தினுக்குப் பிடித்துககொண்டு போவதைத்தடுத்து ஆதரவுசொல்லிப் போற்றி அவனை அன்போடு விமானத்தேறறி ஓர்கொடியில வன்மினென வவினா. திருநீறுதரித்த நெற்றியையும், மிகுந்த ருதிராக்கமாலைகளைத்தரித்த கண்டத்தையும், நீணடு முடியப்பெற்ற சடையையும், பெரிதாகிய மேருமலையை அசைததுதூாக்கவல்லகும் வலிமையுற்ற சரீரத்தையும், பரமேசுவரனது திருவடியை அன்போடு தியானித்து, காமம் வெகுளி மயக்க

மென்னு மூக்குறும்பை யொழித்த ஆயமனத்தையும் உடைய அந்த சிவகணங்களை வேல், சக்கரமுதலிய ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு, வலிமைபொருந்திய காலநாதா சுகுமாரனைக் கட்டியிழுத்தேகு மிடஞ்சேர்ந்து, அக்காலநாதுவரை நோக்கி இந்த மறையவனை விடுமின் விடுமின அங்ஙனம விடாவிடில் நீவிர படையையெடுத்து எம்முடனெதிர்ந்து வெஞ்சமரிய ற்றி முடிபய யிழந்து நமநயிரை யெமதுகைக் கொடுமின் என்று வலிமையாகக்கூறினா அதனைக்கேட்ட காலநாதா சிவகணங்களைநோக்கி ஐய! முனிவாபோல நீறுபூசி சடையை முறுக்கி முடித்து நீதியையொழித்து வெய்ய தீயனைய வாய மொழிகளால் எம்மை பலாத்காரஞ்செயயும நீவிர யாவா எவ லால் இங்குவந்தீரொன்றுகேட்க, சிவகணங்கள் காலநாதுவனை பபாாதது, முன பொன்மலையை வில்லாகவளைத்தவனும், முப் புரந்தழல்கொளப் புனனகை செய்தவனும, மானிடைகன்றைக் காதநிற றரித்தவனும், எதிர்ந்த காமனை நெற்றிக்கண்ணின தீயககு அளித்துப் பினனரவனைத தோற்றுவித்தவனும, துண் டமாமதியையும கங்கையையும சென்னியிற் சூடியவனும, பிர மன முதலிய தேவாகள மடியாதபடி இத்தகையதென்று மன தினால எண்ணக்கூடாத ஆலகாலவிடத்தைத அரவமணிந்த கண்டத்திருததினவனும, காலனை ஒரு காலினற் றுக்கினவ னும, விஷத்தையொதத அநதகாசுரனைக் கூர்மைபொருந்திய முத்தலைசசூலங்கொண்டு மாாபிறகுத்தி வானிலுயாத்தி வாட் டியொழித்தவனும, கைலைமலையை யசைத்த இராவணனது முடிபுனைந்த பததுததலைகளும இருபது கரங்களும் நெரிய ஓா பாதத்து நாயகவிரலா லழுத்தி மிதித்தவனும், தேவர்களு க்கும் மனிதர்களுக்கும் உண்டாகும் விக்கினங்களை விலக்க வும், சிறுமை நீங்கப் பத்திசெய்பவருக்கு முத்தியருளவும், களங் கமில்லாத சந்திரனைப்போல் அழகிய வெண்மையுற்ற மருப் பையுடைய யானைமுகமுள்ள ஓர் புதல்வனைப்பெற்றவனும், நனமதியையொழித்து இகல்புரிந்த தக்கன் தலையைவெட்டி அவனசெய்த யாகததை யழிப்பதற்கு ஒப்பற்ற வீரபத்திரனை நல்கினவனும், தாரகன் சிங்கமுகன் சூரபதமனுதி தானவரை, வடித்த வேலாயுதத்தைக்கொண்டு கொன்று, பொன்மயமாய்

விளங்கும் விண்ணுலகைக் காப்பதற்கும், இக்கலியுகத்திலும் அடியார்கள் அன்போடு நினைத்தவுடனே அங்கணுகி அவர்து வினைகளை யொழித்து அருள் தருதற்கும் ஆறுமுகத்தனை நல்கினவனுமாகிய பரமேசுவரனது ஏவலால் வந்தனம் என்று பொறுமையோடு புகன்றனர். அதனைக்கேட்ட காலதூதர், பரவசாசுரமான இப்பிராமணனைப் பல நாகினவாய் மேவ விடுவதேயன்றி நாமபால விடுதல் நியமமன்றாகலின் அவனை விடோமென வலிபேசினர். அதனைக்கேட்ட சிவகணங்கள் கனலனிற் றீப்பொறிபறக்க பல்லைக்கடித்து வில்லையெடுத்து வாய்விட் டழைத்து ஒயவறறுத்து மேகம் வருஷிப்பது போல கணக்கிலலாத அம்புகளை யெய்தனர். அதனுல் காலதூதர் கரமுறிந்தும, காலொடிந்தும, கன்னமுடைந்தும, சிரமுடைந்தும, சூல முதலிய ஆயுதங்களையிழந்தும வருந்தினாபலர். மற்றுஞ் சிலர் பெலங்குறைந்து தெனபுலத்தினில் ஓடிவிட்டனர்.

பின்னர் சிவகணங்கள் சுகுமாரனது, வினைகட்டை யறுத்து ஒழிப்பதுபோல புயக்கட்டை யறுத்தொழித்து அவனை இரத்தினங்களிழைத்த விமானத்திருத்தி, வித்தியாதரர்கள் வீணையைமீட்டி இசைபாடவும், இடியொலியினு மிகவதிரும அந்தர துந்துபி முழங்கவும், இருபுறமும் கொடி குடைகள் விளங்கவும், கற்பக பூமழை பொழியவும், கவரி வீசவும், அரம்பை முதலிய ஸ்திரீகள் பலலாணடிசைபபவும், தேவர்கள் போற்றவும், அழைத்துச்சென்று வெள்ளி வெற்பை யடைந்தனர். பின்னர் சிவகணங்கள் சுகுமாரனை, அழகிய விமானத்தினின்றிறக்கி நந்திதேவர்பால் விடைபெற்று, செம்பொற்றிருக்கோயிலினுள்ளே அழைத்துக்கொண்டுபோய்ப் பரமேசுவரன் முன் விட்டனர் சுகுமாரன், மலையரயன்பெற்ற மாடப்பாவை யிடப்பாக மருவச் சிங்காசனத்தில் வீற்றிருக்கும் கண்ணுதலைக் கண்குளிரக் கண்ணுற்று, வீட்சணணிய விசேஷத்தால் நலலறிவுபெற்று அக்கண்ணுதலை வணங்கிப் பெருமானே! கருமையாகிய இரும்பைப் பொனனாக்குமபடி புரிந்த தன்மையைப்போல நீதி, பொறை, இரக்கமமுதலிய நற்குணங்களை இந்

சித்தேனுமில்லாத அடியேனை நல்லறிஞருடன்கூட்டி இரட்சி த்த கருணைக்கடலாம் பரம்பரனே! போற்றி போற்றியென்று துதித்து வீழ்ந்து வணங்கினின்றனன். பின்னர், பரமேசுவரன் சுகுமாரனைப்பார்த்து நீ எமது சாரூப்பியம்பெற்று இங்குள்ள சிவகணங்களுடன் இருக்கக் கடவாயெனத் திருவாய் மலர்ந்த னர். அந்தக்ஷணத்திலே சுகுமாரன் அரனுருப்பெற்று சிவகண ங்களுடன் கூடிவாழ்ந் திருந்தனன்.

இங்ஙனமிருக்க அமரிற்றோற்றுத் தென்திசையிலோடிய எமதூதர் காலனிடஞ்சென்று தொழுது, கபாலத்திற் பிச்சை யெடுப்பானது கணங்கள் மேகக்கூட்டம்போல வந்து எம்மை யடித்து வருத்தி, நாங்கள் பிடித்துக் கட்டிக்கொண்டுவந்த மாபாவியாகிய பிராமணனைக் கைலைக்குக் கொண்டுபோயினர் என்று கூறினர். அதனைக்கேட்ட காலன் கோப மதிகரித்து வெய்ய கையோடு கையைத்தாக்கிக் குலுங்க நகைத்து என் னதிகாரம் நன்று நன்று என்று சொல்லிச் சித்திரகுத்தனை யழைத்து, சுகுமாரன் செய்த புண்ணியம் யாதேனுமுளதோ வென்பதை விரைவிற்றெரிந்து சொல்லென்றான். அங்ஙனமே சித்திரகுத்தன் ஆராய்ந்து சுகுமாரனென்னுங் கொடியோன் ஜனித்தது முதல் இன்றளவும் தீமையேசெய்து திரிந்தா னன்றிச் சிறிதேனும் புண்ணியம் செய்தானில்லை என்ற னன். அதனைக்கேட்ட அந்தகன் கோபத்தோ டெழுந்து நான் கைலைக்குச் செல்லுகின்றே னென்று சொல்லி, சித்திர குத்தனும் தூதர்களுஞ் சூழ்ந்துவர அக்கினியைப்போற் சிவந் த கண்களை யுடைய எருமைக்கிடாவின்பேரில், நீலமலையின் மீது முகிலுறைதல்போல ஏறிப்போய்க் கைலையையடைந்து பிரமாதி தேவர்கள்போற்ற, நந்திதேவர் கையிற் பிரம்புபற்றி அவர்களை ஒதுக்கி நிறுத்தும் பரமேசுவரனது சந்நிதியிற் புகு ந்து ஒதுங்கினின்று, ஆதிநடுவீறில்லா வமலனேபோற்றி ஆண் பெண்ணலியலா வண்ணலேபோற்றி உருவமருவம் உருவாரு வமாய ஒளிரும் நிகரில லுத்தமபோற்றி சொல்லுதற் கெட் டாச் சுகனேபோற்றி மேவுபூதி மேனியபோற்றி என்று துதி த்து நமஸ்கரித்து எழுந்து வாய்புதைத்துத் தனது பாசம்,

இருண்டு பெய்த மழைத்தாரைகளையும், கடலோரங்களிலுள்ள
அழகுற்ற ஒளிபொருந்திய வெண்மணல்களையும், ஆகாயத்திலு
ள்ள நட்சத்திரங்களையும் கணக்கிடினும்விடலாம், அத்தீயோன்
புரிந்த கொடும்பாதகங்களைக் கணக்கிடலரிதாகும் அந்நோன்
நினைப்பதும் பெறவும் நீதியுள்ளதோ? ஈதென்னது குறையாரு
மென்று அந்தகன் கூறினன்.

பரமேசுவரர் அந்தகனைக் கடைக்கணித்து பிராமணர்,
பசுக்கள், ஸ்திரீகள், பாலர், இவர்களைக் கொல்லுதல், மீன்,
மிருகம், பறவை, இவைகளைக்கொன்று விற்றல், அவைக
ளைத் தின்றல், தந்தை, குரு, தாய், பிராமணர், சந்நியாசி
ஆதிய பெரியோரை யிகழ்தல், சதுர்வேதங்களை நிந்தித்தல்,
நீதிதவறி நடத்தல், பொய்ச்சாட்சிசொல்லிப் பொருளைப்பக
ரித்தல், கன்னிகை, விதவை, குருபத்தினி, கணிகை, தாசி,
அயலான் பெண், அன்னை, அன்னையுடன் பிறந்தவள், தன்
து புதல்வி, மாமன் பத்தினி, சகோதரி, தூரஸ்திரீ, பதிவிர
தை, நீசஸ்திரீ இவர்களைச் சேர்தல், மிருகங்களைப்புணர்தல்,
விரதபங்கஞ்செய்தல், குளம், கிணறு, நந்தவனம், கோயில்,
மடம் இவைகளை யழித்தல், குதிரை, யானை, எள், எண்
ணெய், நெய், பொன், உபயகோமுகி இவைகளைத் தானம்
வாங்குதல், உயிர்மரங்களை வெட்டுதல், முகை விரியாதமலர்
களைக்கொய்தல், ஆலயம், தீர்த்தம் நந்தவனம் இவைகளில்
மலசலங்கழித்தல், மனமறிய உச்சிட்டமிடுதல், பொன்திருடு
தல், வர்ணவிறக்குஞ் சாதியாருடனுண்ணுதல், சூதகவீட்டி
லுண்ணுதல், தூர்த்தரது அன்ன முண்ணுதல்; கிரகணகால
த்திலும், ஏகாதசி கூடியநாளிலும், தசமி, அமாவாசை கூடிய
நாட்களினிரவிலும் அன்னமருந்துதல், இடக்கரத்தாலுண்
ணுதல், அனாசாரஞ்செய்தல்; குதிரை, பசு, உருத்திராக்கம்,
மந்திரம், தேவவிக்கிரகம், விபூதி, யானை, அடிமையாள்,
அவுடதம், கன்னிகை, பருத்தி, எள், நெய், தயிர், பால்,
எண்ணெய், கள், இவைகளை விற்றல் ஆகிய இவைகளாதி
எண்ணறுந் தீவினைபுரிந்த கொடியவராயினும் அவர் ஒரு

சிவராத்திரி விரதமிழைத்து அன்றிரவு நான்கு யாமத்தும், விக்கினமின்றி எம்மைப் பூசிக்கின் அவர் செய்த மகாபாதகங்களெல்லாம் ஓர் தீப்பொறிபட்ட பஞ்சுப்பொதிரளெனவாம். இப்படிப்பட்ட சிவராத்திரியில் நாகேச்சுரமென்னுந் தலத்தில் எம்மையும் உமையையும், அந்தமறையோன் தரிசித்தனனாதலின் சூரியன் முன்பனிபோல் அவன் செய்த பாவமனைத்துந் தொலைந்தது. ஆகையால் அவன் எனது கணங்களுடன் கூடி வாழும் பேறுபெற்றனன் என்று கூறினர். அந்தகன் மீட்டும் பரமேசுவரனை நோக்கி, அவன் கள்ளைக்குடித்துத் திரிந்து மனைவியர் கூத்தற்குச் சூட்டப் பலர் திருட வந்தனனேயன்றி நினைந்து தரிசிக்கவேண்டுமென்று கருதி அன்போடு வந்திலனே யென்று கேட்க, எள்ளளவும் அன்பிலரேனும் அச்சிவராத்திரியில் எம்மைக் கண்டாலும் பூசித்தாலும் அவர் நற்கதியடைவரென்பது திண்ணமாம். ஆகையால் நந்தொண்டர் தம்மைக் கோரரூபத்தோடு பாசம்வீசிப் பிடித்துத் தண்டமிழைத்தலைத் தவிர்ப்பாயாக என்று பரமேசுவரர் கூறினர்.

பின்னும் அந்தகன் பரமபதியைப் பணிந்து சுவாமீ! யானும் எனது தூதர்களும் அறியாது நின்னடியவரைத் தண்டமிழைக்க நேரிடுமாகையால், எமது தண்டத்திற்குட்படார் தவரிலக்கணங்களைத் தெரித்தல் வேண்டுமென்றிரக்க, பரமபதியானவர் அங்ஙனமே பணிப்பாராயினர்.

சிரம், கழுத்து, காது, தோள், மார்பு, கை, இவ்விடங்களில் உருத்திராக்க மணிகளணிந்தவர், உருத்திர மந்திரம் சபித்தவர், விநாயகர், சண்முகர், திருமால், இவர்களைப் பூசித்தவர், சத்திசிவ ரூபமாகிய சிவலிங்கபூசனை புரிந்தவர்; நந்தனவனம் வைத்தவர், சிவாலயங் கட்டினவர், அன்போடு திருநீறு தரித்தவர், எமது அடியவரைப் பூசித்தவர், பஞ்சாட்சரசபஞ் செய்தவர்; மாசிமாதத்தில் உதயகால ஸநானஞ் செய்தவர், பஞ்சமா பாதகங்களை யொழித்தவர்; நாள்தோறும் துறவிகளுக்கும், அந்தணருக்கும், ஆடையாபரணம், பொன், உணவு இவைகளையளித்தவர், தடாகம், கிணறு

வெட்டுவித்தவர், சாலைவழியில் நிழலவைத்தவர், கற்புடைமட நகையர், காசி, இராமேசுவரம், சிதம்பரம், திருவாரூர், திருக் காளத்தி, காஞ்சீபுரம், திருக்கழுக்குன்றம், விருத்தாசலம், திருவொற்றியூர், திருவிடைமருதூர், மதுரை, திருவையாறு, திருமறைக்காடு, திருவெண்காடு, திருவானைக்கா, மாயூரம், திருவண்ணாமலை, புள்ளிருக்குவேளூர், சீகாழி, திருப்புகலூர் என்னுந் தலங்களையடைந்து விதிப்படி தீர்த்தங்களிற்படிந்து ஆங்காங்குள்ள யாமுறையும் சிவலிங்கதரிசனம் செய்தவர்; முத்தர், சிவராத்திரி விரதம் நோற்றவர் ஆகிய இவர்கள், உன் தூதருக்கும் உனக்கும் [illegible] நின் தண்டம் இவர்கட் கில்லையென இறைவர் பணித்தனர்.

அந்தகன் பரமபதி கூறியதைக்கேட்டு அச்சமுற்று வீழ்ந்து பணிந்து அப்பெருமானிடத்து விடைபெற்று, முன்னர் வைத்த பாசம், தண்டம், முத்திரை முதலியவைகளை யெடுத்துக்கொண்டு புறப்பட்டுப் பகட்டினமீதேறித் தன்னுடையதி, தனது தூதரையழைத்துப் பரமபதி பணித்தவைகளைக் கூறித் தென்புலங்காத் தினிதிருந்தனன், என்று சூதமாமுனிவர் சொல்ல, நைமிசாரணிய வாசிகள் கேட்டு மகிழ்வுற்றனர்.

## சூசனை

### வினாவிடை

**வினா** இச்சருக்கத்தினாற் பெறப்பட்டதென்னை?

**விடை** சுகுமாரன் பிறந்தது முதல் இறந்ததுவரையில் கிஞ்சித்தேனும் புண்ணியஞ் செய்யாது கொடும்பாவமே புரிந்திருந்தும் ஒரு சிவராத்திரி தினத்தில் விருப்பமின்றிப் பரமேசுவரனைத் தரிசித்த காரணத்தால் அவன் சிவசாரூப்பியம் பெற்றானென்பதேயாம்.

**வினா.** ஆனால் (அசுவமேதயாகாதி புண்ணியங்களைச் செய்த இந்திராதி பதவிகளை யடைந்து அவ்வப்

புண்ணியங்கட்குரிய காலம்வரையில் அவ்வப்பதவி
களை யனுபவித்துப்பின்னர் இவ்வுலகில்வந்து எஞ்
சிய வினைகட்கீடாகிய பிறவியை யெடுத்து அவ்வி
னைகளை நுகர்வர் என்ற விதிப்படி) சுகுமாரன் சிவ
ராத்திரிதினத்தில் பரமேசுவரனைத் தரிசித்ததற்
காக, சிலகாலம்வரையில் மேற்சொல்லிய சாரூப
பிய பதவியை யனுபவித்துப்பின்னர் இவ்வுலகில்
வந்து முன் தானீட்டிய தீவினைக்கீடாகிய பிறவி
யை யெடுத்து அவ்வினையை யனுபவிப்பனென்
பது நியதியா?

அல்லது,

(சிவசாரூப்பியம் பெற்றவர் பதிபுண்ணியங்களைச்
செய்திருந்து சிவசாயுச்சிய மடைவரேயன்றி, கீழ்ப்
பதவிகட்கு வாரார் என்ற விதிப்படி) அச்சுகுமாரன்
அந்த சாரூப்பியப்பேற்றை யனுபவித்துப்பின்னர்
சாயுச்சியமடைவனென்பது நியதியா?

**விடை.** புண்ணியமென்பது காம்யபுண்ணிய மெனவும் நிஷ்
காம்ய புண்ணியமெனவும் இருவகைத்தாம். ஆத
லின் அசுவமேதயாகாதி புண்ணியங்களைச் செய்த
வர் காம்யமாக (ஒன்றை விரும்பி)ச்செய்துள்ளாரா
கலின் அவர் தாம்விரும்பியபடி அந்தந்தப்பதவிகளை
யனுபவித்துப்பின்னர் இவ்வுலகில் வந்து பிறந்து
வினைகளை நுகர்வர் என்பது திண்ணமே. ஆனால்
சுகுமாரன் சிவராத்திரிதினத்தில் ஒன்றையும்விரு
ம்பாது பரமேசுவரனைத் தரிசித்தனனாதலின் அது
நிஷ்காம்ய பதிபுண்ணியமாயிற்று (அன்றியும்வெ
ள்ளிவெற்பிறகயிலாயபதியைத்தோத்தரித்துவண
ங்கியகாலத்தும் யாதொருவிருப்பமுமின்றி இருந்
தனனாதலால் அதுவும்நிஷ்காம்ய பதிபுண்ணியமா
யிற்று) இவ்விசேடத்தால் சிவசாரூப்பியம் பெ
ற்றனனாகலின் அவன் அப்பதவியிலிருந்து அங்கு பதி

புண்ணியங்களைச் செய்து சிவசாயுச்சிய மடைவ னென்பதே நியதியாம

**வினு.** இன்று சிவராத்திரியென்றும் பரமேசுவரனைத் தரிசிக்கவேண்டுமென்றும சுகுமாரன் நினைத்துப்போகாது திருடுதற்றொழிற்புரிவானபோனகாலத்துப பரமேசுவரனைப் பார்த்தது நிஷ்காமிய பத்திபுண்ணியமாவது எப்படி?

**விடை** நெருப்பானது தெரிந்து மிதித்தாலும் தெரியாது மிதித்தாலும சுடுவதுபோலவும், விஷமானது தெரிந்து புசித்தாலும தெரியாது புசித்தாலும புசித்தவரைக் கொல்வதுபோலவும, அமுதமானது தெரிந்து புசித்தாலும தெரியாது புசித்தாலும் புசித்தவரது மரணத்தை யொழிப்பதுபோலவும, நினைத்துப்போய்த் தரிசித்தாலும நினையாமற்போய்த்தரிசித்தாலும அவை ஒரே பயனை நல்குவனவாம்

**வினு** அங்ஙனமாயின சுகுமாரன செய்த தீவினைகளனைத்தும யாதாயின?

**விடை** அவனது தூலசரீரத்தோடு பிராரத்துவ வினையொழிந்தது எஞ்சிய இரண்டில ஆகாமியம் சஞ்சிதத்தோடு சேரவும, உத்தமோத்தமகால நிஷ்காமிய சிவதரிசன விசேடத்தால் ஒருதீப்பொறி பட்ட அநேகம் பஞ்சுப்பொதிகள்போல அச்சஞ்சிதமும நசித்தொழிந்ததாம மேற்சொல்லிய சிவதரிசனத்திற்குப் பின்னா அவன எய்திய ஆகாமியம் கயிலாயபதியினது கடாக்ஷவீக்ஷணயம பட்டமாத்திரத்தில அங்ஙனமே நசித்தொழிந்ததாம்

**வினு.** சிவதரிசன விசேடத்தால் அனுபவியாது வினைகள்நசித்தொழியும் என்பதற்கு நூற்பிரமாணமென்னை?

**விடை.** திருமந்திரம் மூதற்றந்திரம் "........................ பதியணுகிற் பசுபாசநிலாவே" எனக் கூறியதும், ஸ்ரீமத் குமரகுரு சுவாமிகள் "ஊழ்வினையை

மாற்றி புலவாதபேரின்ப வாழ்வுதருஞ்செய்ய மதி முகமும்" எனக்கந்தரகலிவெண்பாவிற கூறியதும், சிவஞானசித்தியார், "மூன்றுதிறத்தணுக்கள் செய் யுங் கன்மங்கட்கு முன்னிலையா மூவிரண்டா மத் துவாவி, ஞான்றமுறை யவையருத்தி யறுத்து மல முதிர்வித் தருமபருவமடைதலுமே யாசானாகித், தோன்றிநுக ராதவைமுற்செய்கன்மத் துகளறுத் தங் கதத்துவாத் துட்ககறவே சோதித்த, தேன்ற வுடற் கன்மமனு பவத்தினெ லறுத்திங் கினிச்செய் கன்ம மூலமல ஞானத்தாலிடிப்பன்" எனக்கூறிய தும, சிவப்பிரகாசம் "எல்லையில பிறவிநல்கு மிரு வினை யெரிசேர் வித்தின், னிலையினைக்லுமேனற வுடற்பழ வினைகளூட்டுங், தொல்லையின வருதல் போலத்தோன்றிரு வினையதுண்டே, லலலொளி புரையுஞானத் தழலுறவழிந்து போமே" எனக் கூறியதுமேபோநிய பிரமாணங்களாம அன்றியும இன்னின்ன பாவங்கள, இன்னின்ன பரிகாரங்களை அஃதாவது கங்காஸ்நான முதலியவைகளைச் செய் தாறறீருமென வேதத்திலே பிராயச்சித்தங் கூறு தலால் வினைகள் அனுபவியாமலும நசித்தொழியு மென றேறபடுகின்றது வினைகளையனுபவித்தே ஒழிக்க வேண்டுமெனின் வேதத்திலே யிங்ஙனம பிராயச் சித்தங்கூற வேண்டியதில்லையாம

**வினா** சிவராத்திரி விரதமிருந்து எத்தகைய பாவத்தினையும ஒழித்து விடலாமென ஒருவன நினைத்துத் தம மனம விரும்பியவாறு பொய, கொலை, களவு முத லிய பாவங்களைத் துணிந்து செய்துவிட்டுப பின் னர் அவன் இச்சிவராத்திரிவிரத மிழைக்கின் அந் தப்பாவங்களொழிந்து விடுமோ?

**விடை.** பாவமானது புத்திபூர்வமாகச்செய்த பாவமெனவும, அபுத்திபூர்வமாகச்செய்த பாவமெனவும இரண்டு

வகைத்தாம இவ்விரண்டிலஒவ்வொன்றும மகா பாவமெனவும உபபாவமெனவும இருவகைததாம் இவைகளில், அபுத்திபூாவ மகாபாவம, அபுததிபூாவ உபபாவம, புததிபூாவ உபபாவம என்னும மூவகைப்பாவஙகட்கே வேதமுதலிய நூலகளிற் பிராயசசிததம விதித்ததாம் புததிபூாவ மகாபாவம் எவ்வகைப் பரிகாரததாலும நீஙகாதாகையால (அஃதாவது நரகததையனுபவிததே யொழிகக வேண்டுமாகையால) அதற்குப்பிராயச சித்தம விதிககவில்லையெனக ஆனதால் மேற்சொல்லியபடி மனமறியததீமை செயயின அது புததிபூாவ மகாபாவமாகையால ஒருவன் அஙஙனம மகாபாவஙகளைச செயதுவிட்டு இச்சிவராத்திரிவிரதம் நோற்கினும அல்லதுவேறு எவவகைப் பிராயசசிததஞ செய்யினும அப்பாவம நீஙகப்பெறுது நரகததையடைவன் என்பது திணணமாம

வினு அஙஙனமாயின மனதாரபபுரிநத சுகுமாரனது மகாபாவ விீனயொழிநத தெபபடி?

விடை. சுகுமாரன செய்தது அபுத்திபூாவ மகாபாவ மாகையால அது நிஷகாமிய சிவதரிசனமாகிய பிராயசசித்ததா லொழிநததாம

வினு சுகுமாரன மனநதுணிநது கொலை முதலிய மகாபாவஙகளைச செயதிருகக அப்பாவஙகளை அபுததிபூாவ மாகசசெயதன னெனலெப்படி?

விடை. அவன கொலைமுதலியமகாபாவஙகளை மனந்துணிநது செயதனனுயினும நாம செய்வது பாவம் இதுபற்றிப்பின்னா இறைவனுற்றண்டிக்கப் படுவோம என்னும உணாசசியுற்றுச செய்தானில்லை யான தால அது அபுத்திபூாவ மகாபாவமேயாம்

இன்னும இவைபோனற விஞவிடைகளும், அவைகட்கு நூற்பிரமாணஙகளும், மேறகூறியவைகட்கு நூற்பிரமாணஙகளும் பலவுள அவைகள் விரிவஞ்சி விடுககப்பட்டன.

சுகுமாரச் சருக்கம் முற்றிற்று

# அங்குலச் சருக்கம்.

இன்னு மாசியிற் சிவநிகிப பெருமையொன் றிசைபபேன், மின்னு வாசடைத் துறவிர்கா ளுமக கென விழைவாற, றுன்னு நான்மறைப பொருடெரி வியாதனைத தொழுது, பினனு மாதவச சூதமா முனி வரன் பேசும். (௧)

களங்க மாய்க்குறு முயலுறு கதிாமதி தவழு, விளங்கு மிஞ்சிசூழ்ந தளகைமா நகரினை வென்று, வளங கொள் சாகர புரததயல் வளாவரை வனததி, லுளங் கொளோகையோ டுறைபவன் றோலுடை யுடை யோன் (௨)

வெண்ணி ணததடி முடைகமழ் வெடிககுரல வாயா, னெண்ணில வேட்டுவக் கிளைஞரோ டினபமுற் றென்று, நண்ணி வாழ்பவன் காதினி னுலநால் வா யின், றண்ணி லாமருப் பரிநதது குழையெனத் தரிப் போன் (௩)

---

(௧) விழைவால் = விருப்பததினால்; துன்னும் = நிறைநத;

(௨) குறுமுயல்=குறுகிய முயல்போன்ற; தவழ=ஊர்ந்து செல்ல; இஞ்சி=மதில்; ஓகை=மகிழ்வு; தோலு டையுடையோன்=தோலை ஆடையாகத்தரித்த வே டன

(௩) வெள் நிணம்=வெண்மையாகிய கொழுப்புள்ள; தடி= மாமிசம்; முடை = துர்நாற்றம்; வெடிக்குரல்=வெ டிபோன்ற பெருந்தொனியுடைய; நண்ணி=கூடி; நால = தொங்கும்படியாக; நால்வாயின் = யானை யின்; தண்ணிலாமருப்பு=குளிர்ந்த பிறைச்சந்திரன் போன்ற வளைவும் வெண்ணிறமுமுடைய கோட் டினை; அது=அதை; குழை=குண்டலம் (காதணி).

தேனு நீடணில் வாற்குரற் செந்தினை மாவுங்,
காளி னீயலுங் கபித்தநற் கனிகளுங் கங்குன், மானு
மேனமான் மரைமுயன் முதலிய மாவி, னூனு மைவ
னத் தூண்டியு முண்டிகொண் டுவப்போன் (௪)

பொங்கு வெஞ்சினத் தழல்விழிப் பொறிப்புலி
போல்வான், கங்கு லஞ்சனக் கிரிமுழக் கொடுமழை
காலு, மங்கு லோருருக் கொண்டுவந் தாலென வடி
வந், தங்கு மங்குலி னென்றுள னொருதனிச் சவரன் ( )

பொன்றி கழ்ந்திடு மவ்வரைக் கருகொரு புனத்
திற், குன்றி யின்வடக் குடமுலைக் குழைக்கலை யுடுக்கு,
மின்றி ருந்திடைக் கொடிச்சியோர் கொடிச்சியை வே
ட்டாங், கன்றி லுஞ்சிறைச் சேவலு மாமென வணைந்
தான் (௬)

---

(௪) நீடு அணில் வால் = நீண்ட அணிற்பிள்ளையினது வால் போன்ற; குரல்=கதிர்; ஈயல் = ஈசல்; கபித்த நற்கனி=நல்ல விளாம்பழம்; கங்குல்=இருளை; மானும்=ஒத்த; ஏனம்=பன்றி; ஐவனத்து உண்டி= மலைநெல் உணவு; உண்டிகொண்டு = உணவாக அருந்தி

(௫) பொங்கு=எழுகின்ற; பொறி=புள்ளி; கங்குல்=இருளையும்; அஞ்சனகிரி = நீலமலையையும்; முழக்கொடு=இடியோடு; மழைகாலும்=மழையைப்பொழிகின்ற, மங்குல்=மேகமும்; ஒருதனிச்சவரன்=ஒப்பற்ற ஒருவேடன்

(௬) பொன்=அழகு; புனத்தில்=புன்செய் நிலத்தில்; குன்றியின்=குன்றிமணியின்; வடம் = மாலை; குழைக்கலை = தழையாடை; மின் = மின்னல் போன்று; திருந்து = அழகிய; இடைக்கொடிச்சி = கொடி போன்ற இடையையுடையவளாகிய; ஓர் கொடிச்சி=ஒரு வேடப்பெண்; வேட்டு=மணம்புணர்ந்து

கொடிய கோளரிப் பிணவுவெங் குருளையின்றென்னப்
பிடிநடைக்குறப பேதையங் கிருமகப பெற்றாள்
கடிய புல்லுகிரச சுட்டியோ டரைமணிக கவடி
வடிவு சோதரு புதல்வருக் கணிந்துள மகிழ்வான் (எ)

உரையிந நீரமையிற் களிபபுறு மெயினனங கொ
ருநாள், வரையி னீண்மரத துரிததிடுமெ வற்கலே வா
ஙகி, யரையி னீததுயான ரேறுறசெருப படிகளிற
ரொட்டு, விரையி னீடிருட் குஞசிமென் கயிற்றினுல்
விசித்து (அ)

துரக்குட வெஞசரத தூணிதன் வெரிநிடைத
தூககித, தரக்கின் ரேலுறைச சுரிகைசோத தஞசன
சயிலத, துரக்குந தோளிலவார் விற்றரித துயாஙவா
வினஙகொண், டிரகக மரசமொன் றிலலவன வேட
டமே லெழுந்தான் (கூ)

---

(எ) கோளரிப்பிணவு = பெணசிஙகம; வெஙகுருளை = கொ
டிய சிஙககுட்டி; கடிய = கொடிய; புல்உகிர் = புலி
யின்நகம்; மணி = அழகிய; கவடி = சோழி (பலக
றை)

(அ) உரை = சொல்லுகின்ற; எயினன் = வேடன், வரை
யின் = மலேயிலுள்ள; வற்கலே = மரவுரி, ஈாதது =
இழுததுககட்டி; அடிகளிற்றொட்டு = கால்களிற்றரி
தது; விரையின் = வாசனையுள்ள; நீடு = நீணட;
குஞ்சி = குடுமியை; விசித்து = கட்டி

(கூ) துரககும் = எய்யும்; வெம்சரம் = கொடிய அம்பு;
தூணி = அம்புவைக்கும்பெட்டி; வெரின்இடை =
முதுகில்; தரக்கின் = புலியின்; தோலுறை = தோலி
னுற் செயத கவசம்; சுரிகை = கததி; அஞ்சனசயில
த்து = நீலமலேபோன்ற; உரககும் = வலிமையுறும்;
சுவா = நாய்; இல்லவன் = இல்லாதவன்; வேட்ட
மேல் = வேட்டைக்கு.

இலவு தேக்ககி லிரத்திவே லெட்டிபுன் னாகங,
குலவு கூவிளங் கொன்றைபூங் குரவசோ கீரப, பலவு
பாடலம் வன்னிசண் பகம்பட ரழிஞ்சி, னிலவு பாலை
பைந் தாதுபொன் னிறத்தநீள் வேங்கை (க0)

விரித டஞ்சினைச சநதனம பொரியரை வெள
ளில், பெரிய வாகைபிப பிலம்பிசு மநதமுட் பிடவங்,
கரிய காதிரங் கழையிருள் மதுமலாக கடம்பம், வரி
கொ ளார்பதஞ் செறிதரு மராமரம வகுளம (கக)

மரவ நாகநல வழைமுதன் மாஙகளா னெருங்கி,
யிரவ லாற்பக லில்லையாங கிலங்குமா யிரஞசெங், கரவ
ரோதயன் கதிரொளி புகுநதிடாக கறங்கு, மரவ மாரு
தம புகுநதிடா வனததிலங் கடைநதான் (கஉ)

(க0) இரத்தி = இலநதை; புன்னாகம் = புன்னை; கூவி ளம் = வில்வம்; குரவு = குராமரம; ஈரப்பலவு = வேர்ப்பலா; பாடலம் = பாதிரி; பொன்னிறத்த பைந் தாது = பொன்போன்ற பசியமகரந்தப் பொடியினை யுடைய.

(கக) தடம் = பருதத; பொரி = பரணி; அரை = மரத்தின் மத்தியபாகம்; வெள்ளில் = விளா; பிப்பிலம் = அரசு; பிசுமந்தம = வேம்பு, பிடவம் = பிடவமரம்; கரிய காதிரம் = கருங்காலி; கழை = மூங்கில்; இருள் = வெளிச்சமின்றி அடர்ந்த, ஆபதம் = வண்டுகள்; செறி தரு = நெருங்கியிருக்கிற; வகுளம் = மகிழமரம்.

(கஉ) மரவம் = குங்குமமரம்; வழை = சுரபுன்னை; ஆயிரஞ் செங்கர = சிவந்த ஆயிரங்கிரணங்களையுடைய; வர உதயன் = மேன்மையுள்ளசூரியன்; கறங்கு = சுழலு கிற; அரவம் = ஒலியையுடைய; மாருதம் = காற்று.

புட்ட ருக்குலந் தொறுமபயில பொங்கிருட
புனததிற, கட்ட முறபொறிக கூருகிரக கவிழ்தலை
யுளிய, மட்ட றசசித லெடுத்துயா பாழிவன மீகந,
தொட்ட கழ்நததிற சோறுக ளருநதுமங் கொருபால்,

துறுமயிரசெறி மடிசெவித துடிககுஙுற செநநாய்
தெறுசி னததுடன சிலீமுகஞ செலகதி யினிற்சென்
றுறுசெ விததுணை நிமிர்ததுகள குமிழிநீ ரொண்கட்
குறுமு யறசிறு குருளையைத துரததிடுமொருபால ( )

வளைநத வாலுளை மடஙகலகைம மாவினறத தக
த்தைப, பிளநது கோடுகள பிடுஙகியே கறிததிடத தெ
றிதது, விளஙகு நிததிலஞ சோரியிற றுவண்டதால
விரிமா, துளஙகு செழுஙகனி விரையெனத துளஙகுமங
கொருபால (கரு)

---

(கங) தருககுலம் = விருக்ஷவாககம; புளபயில = பட்சிகள் வசிககிற; கூாஉகிா = கூரியநகம; கவிழ்தலை = குனிந்ததலை; உளியம = கரடி; மட்டற = அளவற்ற; சிதல = கறையான், பாழி = பெரிய, வன்மீகம = புற்றில், தொட்டுஅகழ்நது = தோண்டி; சோறு = உணவு

(கச) துறுமயிா = நெருஙகியமயிர்; செறி = உடைத்தாயிருக்கிற, மடிசெவி = மடிப்புற்ற காது; துடிக்கும் = அசையும; தெறு = கொடிய; சிலீமுகம் = அம்பு; செல்கதியினில் = செலவதுபோலவேகமாய; உகள் = துள்ளிக்குதிககும், குமிழிநோ = நீாககுமிழிபோன்ற; ஒணகண் = ஒளியுள்ளகண; சிறுகுருளை = சிறுகுட்டி.

(கரு) வால் = பளபளப்புள்ள; உளை = பிடரிமயிர்; மடங்கல் = சிம்மம்; கைமமாவின் = யானையினது; கறித்திட = கடிததிட; தெறித்துவிளங்கும = (அதிலிருந்து) சிதறிப்பிரகாசிககும; நிததிலம் = முத்துக்கள்; சோரியில் = அவ்வியானையினது இரத்தத்தில்; துவண்டதால = புரண்டதால; துளஙகும = விளங்கும்.

இடிமுகிற் குரற் றழைசெவித் துணைமருப் பேய்ந்த
கடிசினப் புழைக் கரக்கடக் கவுட்பெருங் களிறு
துடியடிக் கயமுனிகளபினொ டொருங்கிடத் துன்னும்
பிடிநதிப் புனல் படிந்துடன் பிளிறுமங் கொருபால் ( )

முழைக்கட் டுஞ்சிடு கொடுவரிப் புலியின முழங்கி, உழைத்த பேரொலி கேட்டுவல் லுளிமரை வரையாடு, உழைத்த காரிரும் பொன்னவே நீண்டகோட் டிரலை, உழைக்குலம் பயந் தொதுங்கியே யொடுங்குமங் கொருபால் (கள)

நீடு வேற்கரக் குமரவே ணெடியமா குலங்க
ளூடு வைத்தபல் லாயிரங் கடாவிளக் கொப்ப

(கசு) இடிமுகில் = மேகத்தினது இடிபோன்ற; குரல் = தொனியையும்; தழைசெவித்துணை = தொங்குகின்ற இரண்டுகாதுகளையும்; மருப்பு = தந்தங்களையும்; ஏய்ந்த = பொருந்திய; கடிசினம் = அதிககோபத்தையும்; புழைக்கரம் = துவாரமுள்ள துதிக்கையையும்; கடக்கவுள் = மதம்பொழிகின்றகன்னம், துடியடி = உடுக்குப்போன்றகால், கயமுனி = கரடி; துன்னும் = நெருங்கும், பிடி = பெண்யானையானது; பிளிறும் = கத்தும்.

(கள) முழைக்கண் = குகையினிடத்தில்; துஞ்சிடும் = தூங்கும்; கொடுவரிப்புலியினம் = வளைந்தகோடுகளையுடைய புலிக்கூட்டம், முழங்கிஉழைத்த = காச்சித்துச்செய்த; பேரொலி = பெரியசப்தம்; வல்லுளி = பன்றி; வரையாடு = மலையாடுகள், உழைக்குலம் = பெண்மானின் கூட்டம்

(கஅ) நெடிய = நீண்ட; மா = பெருமையுற்ற; குலங்கள் = மலைகள்; ஊடு = இடையிடையே; பாடு = பெருமை; உயிர்ப்பெறிந்து = பெருமூச்சுவிட்டு, படி = பூமி; நாகம் = பாம்பின்; அவிரும் = பிரகாசிக்கும்.
ஈண்டு குலம் என்பது வடசொல் குன்றுதோறாடிய வரும் குறிஞ்சி நிலக்கிழவரும் முருகக் கடவுளாதலால் குமரவேளுக்குச் சொந்தமாகிய மலையெனக் கூறினர்

பாடு சோபட்டம் விரித்துயிரப் பெற்றெழுந்தனர் படிநின்
றாடு நாகரன் மணிகிடந் தவிருமங் கொருபால (௧௮)

வேறு

இத்திறம் நிகழும் வனத்தில் வைவேட னிருஞ்சிறைப்
புட்குலம் படுக்குங், குத்திரக் கண்ணி பற்பல வூன்றிக்
குலவுமா வினங்கொலை புரிவான், புத்தியி னியற்று
மியந்திரப் பொறிகள் புடவியிற் புதைத்துய ரடவிப்,
பத்திர மரத்தி னடிகளிற் றொடுத்தும் பலவலை வளைவு
றப் பூட்டி (௧௯)

மடிசெவி வளைவால் ஞாளிக ளேவி வாளிக டொடுத்
துமின் குறிப, தடிகளி னெறிந்து கற்றிர ளிருத்துத்
தட்டைகள் கற்றியே வீசிச், செய்வளர் வனத்தில்
விலங்குகள் கலங்கச் செய்தவன் றாத்தலும் வலையி,
னடிகளிற் பிணிக்கப் புதைத்திடும் பொறியி லகப்பட்டா
தகன் றுவங் கனைத்தும் (௨0)

புனபுல வருத்தந் தந்தவாய் திறந்து பொத்தும்
பரிற புகுந்துமா வினங்கண், பெருஞ்சிறைப் பறவைக்
குலமெலா மருளா விளிசத்தை போலின றழைக்கும்,

(௧௯) இருஞ்சிறை = பெரியசிறகு; புள் குலம் = பட்சிசாதி
களை; படுக்கும் = பிடிக்கும்; குத்திரக்கண்ணி = தந்
திரமாக வைத்திருக்கிற முடிகயிறு; மாவினம் =
மிருகவர்க்கங்களை; யந்திரப்பொறிகள் = சூத்திர யந்
திரங்கள்; பத்திரம் = இலை

(௨0) மடிசெவி = மடிப்புப்பெற்ற காதுகளையும்; வளை
வால் = வளைந்தவாலையும்; ஞாளிகள் = நாய்கள்; கல்
திரள் = உருண்டையான கல்; தட்டைகள் = கவண்
கற்கள்; பிணிக்க = சிக்கிக்கொள்ளச்செய்ய.

துன்புட னுழையின் கவையடி மிதித்த சுவடுகண் டந்
நெறி தொடரு, மென்செய்கே னினியென் றஙகைகள்
வங்கி விடும்புகு முடம்பு நேடற்கே (உக)

வார்சிலை வணங்கி விடுத்திடும வயிர வாளியான்
ஞாளியால் வயஙகுங, கோரவெங குந்தப படையினூற
றிரண்ட கொடுங்கடுங் கதையினூற குணிலா, லோபெ
றும் பெருங்கண் வலையினூற புதைத்தவ வியந்திரப
பொறியினூ லெதிர்ந்தங, கோவிலங்கோ புட் கொன்றி
டக்கிடையா துளஞ்ஞுற கவலையுற றடைந்தான் (உஉ)

இன்னணம வேட்டத் துலைந்தவன் மேனி யிளைத
திடத தழைத்த கடடெழுந்து, துன்னரு முதாத
தழலசுடமெலிந்து சோகமோடிருந்தபின் பரமன், பன
னரு மிரவி தென்றறிந் தவன்போற பதங்கனோ பதங
கொடோ கடவி, மன்னெடுங் கயிலை மலைவலங் கொள
வான பச்சிம திசையதின மறைந்தான். (உ௩)

---

(உக) விளித்து = கூவி; துன்புடன = துன்பத்துடன்;
உழை = பெண்மான்; வஙகு = வளை அல்லதுபொந்து.

(உஉ) வார்சிலை = நீண்டவில்; வணக்கி = வளைத்து; வயிர வாளி = பராக்கிரம அம்பு; வயஙகும் = விளங்குகிற; கோர வெம குந்தப் படையினூல் = பயங்கரத்தினை யுண்டாக்குங் கொடிய சூலாயுதத்தினூல்; கொடுங் கடுங்கதை = மிகக கொடிய தண்டம்; குணில் = குறுந்தடி; உடைந்தான் = வருந்தினுன்

(உ௩) இன்னணம் = இவ்விதம்; வேட்டது = வேட்டைத் தொழிலில்; உலைந்தவன் = வருந்தினவன்; அகட் டெழுந்து = வயிற்றிற்றேன்றி; உதாத்து அழல் = ஜாடராக்கினி; பதங்கன் = சூரியன்; ஓர்பதங்கொள் = ஒற்றைச் சக்கரமுடைய; கடவி = செலுத்தி; பச்சிம திசை = மேற்குத்திக்கு

கொய்யுளைப் பரியேழ் கொளுவுமோ ராழிக் கொடிஞ்சியந் தேரொடு குடபால், வெய்யவன் கற்றைக் கதிர்க்கரஞ் சுருக்கி விரிதிரைப் புணரிவீழ்ந் திடலுஞ், செய்யகோ லோச்சி யுலகினி தளிக்குந் திறனமிகு மரசர்போ யொதுங்க, வையமா ளுதற்குக் குறுநில ரேவந்து வந்தபோல் வந்ததான் மாலை (௨௪)

ஒருருட் டேரோன் குடதிசைக் கடலி லொளித்துறக் குளித்தற் பின்னர், வாருறு வரிவிற் றடக்கை யங்குலன்றன் வடிவுநன் கற்றிவெந் தீமை, கூருறு மவன்றன் செய்கைக்குத் திரங்கள் குடிகொளு முள்ளமும் போற் கருகிடப், பேருலகனைத்தும் விழுங்கிமா திரம் விண் புதைத்தது காரிருட் பிழம்பே (௨௫)

குனிசிலைச் சவரர் குலத்தினி லுதித்துக் கொடுங் கொலை புரிந்தவங் குலனுந், தனியிருந் தாண்டு மீண்டியா மெய்தச் சரிதெரி யாதிவண் டாக்கி, லினியவு ணின்றி மனைவியுஞ் சிறுவ ரிருவரும் பசிப்பரென் றிரங்கித், துனியுற லொழிந்து தெளிந்துளந் தேறிச் சொல்லருஞ் சூட்சியொன் றுணர்ந்தான் (௨௬)

---

(௨௪) கொய்=கத்திரித்த; உளை = பிடரிமயிர்; கொளுவும்=பூட்டிடும்; குடபால்=மேற்குத்திசை; வெய்யவன் = சூரியன்; புணரி = சமுத்திரம்; செய்யகோல்=செங்கோல்; மாலை =அந்திப்பொழுது

(௨௫) ஒளித்து=மறைந்து; உறக்குளித்தன்பின்=பொருந்த முழுகியபின்; வடிவும்=தேகமும்; நன்கற்றி=நன்மையையொழித்து; கூருறும=நிறைந்த; செய்கை=பாவம்; சூத்திரம்=வஞ்சனை; மாதிரம்=திசைகள்; புதைத்தது=மறைத்தது.

(௨௬) சவரர்=வேடர்; மீண்டியாம் = நாம்திரும்பிப்போக; எய்த சரி=வந்தவழி; துனி = வருத்தம்; சூட்சி= உபாயம்.

பாவியேன வாளா வெறுங்கையோ டெய்திற பய
னிலை பனியிருட பொழுதில், வாவிக டுருவிக குளிர
புனல பருக வருமிரு கங்களுக காிலம, பேவியே வதை
தது தடி கொடு போத லியலபென மதிததுட னெழு
நது, தூவியரு சிறைபபுட குலாாயின றிடுமோா சூழி
யின் கரைககணுற் றனனே. (உஎ)

முறுகிய சினககோ வாிவயப புலிவெம முமமதக
கரடமால யானை, குறுகு மெனறருசிப பாழிநீாச
சூழிக் கோடடுறா கூவிளங கோடடி, லுறுவ னென்றே
றிச சுாிகையான் மறைககு முலவைக ளாிநதாிந தொ
துக்கி, மறுகிய மனததா னேனமான மாைகள வரு
மென வரவுபாாத திருநதான (உஅ)

வடிசெயது வகுதத வைதிகசைவ வழிமொழி
வழாமனமந திரததாற, படியின் முறபகலோர் முனி
வரன பூசை பண்ணிய தெண்ணிய படியே, கடியவெந
தொழிறசெய் கிராதனுங காணான் கவடுவிட் டுயருமா
லூரத, கடியினுக கருகிற புராதன விலிஙக மடாநதினி
திருநதொன றனமேற (உகூ)

---

(உஎ) துருவி=தேடி; அயில் அம்பு=கூரியஅமபு; தடி=
மாமிசம; தூவி=மிருதுவாகியமயிர்; அமசிறை=
அழகியசிறகு; பயின் றிடும=தஙகும; சூழி=குளம்

(உஅ) முறுகியசினம்=முதிர்நதகோபம்; வயம் = வெற்றி;
கரடம=மதசசுவடு; குறுகும = வரும்; பாழிநீர்ச்
சூழி=அகன்று நீரபொருநதிய குளததின; கோட்டு
று = கரையிலுள்ள; கூவிளஙகோடு = விலவமரக்
கிளை; சுாிகை = கத்தி; உலவை=கொமபுகள்; மறு
கிய=பொஙகிய

(உகூ) மொழிவழி = சொல்லுகிறநெறி; வழாமல் = தவறா
மல்; படியின் = பூமியில; முற்பகல் = முன்நாளில;
முனிவரன்=ஓர் இருடி; கடிய வெம்தொழில்=மிகக
கொடுநதொழில்; கிராதன்=வேடன்; மாலூரம்=
வில்வ மரம்.

அன்றர னிரவென் றறிந்திலன் றெருக்கு மப
பிடை தடுக்குமென் றரிந்து, தன்றடங் கையா லெறிந்
தலைந் தழையுந் தனியிருந் திடற்றுயில் வருமே,
யென்றது விலக்கி யிருட்பொழு தகற்றற் றெண்ணி
னன கொய்துவிட் டெறிந்த, மென்றழை முழுதும
பழுதில்வ் விலிங்க வியன்முடி மீதுவீழ்ந் ததுவே (௯௰)

குறுந்துளித் திவலைப் பனிநனி மூழ்கிக் கொடும
பசிக் கருந்திடா தொழிந்தா, னுறுந்துயி றறந்து
புராரிசந் நிதியி லூறின்மா வூரவெண் டழையாற், றெ
றுந்தழ னுதற்கட் சிவநிசி யதனிற் சிவார்ச்சனை புரிந்த
வெந் தீமை, யறந்தவ முடையோ ரொத்தனன் வே
டன கொடிச்சிதன் றிறமினி யறைவாம் (௯௧)

வேறு.

உன்ன ருமபெருங் காட்டினில் வேட்டமே லூறுருவ
வன்ன வாரிசிலை வலவனென் னுயிர்த்துணை மகிழ்ந்
தின்ன மெய்திலனென் கொலோ வென்மனத் திகண்ணி
யன்ன மென்னடைக் குறத்திகண் டுயின்றிடா தாற்றும.

---

(௯௰) தனியிருந்திடல் = ஒன்றியாயிருந்தால்; துயில் = நித்திரை; வியன்முடி = பெருமையுள்ள முடி

(௯௧) குறுந்துளித் திவலை = சிறிய துளிகளாலாகிய சொட்டு, (இருபெயரொட்டுப் பண்புத்தொகை); பனி = பனியில்; நனிமூழ்கி = மிகநனைந்து; உறும்துயில் = அடையும் நித்திரை; புராரி = திரிபுரமெரித்தோன்; ஊறு இல் = குற்றமற்ற; வெண்டழை = தூயமையாகிய இலை; தெறும் = அழிக்கின்ற; கொடிச்சி = வேடச்சி

(௯௨) வேட்டமேல் = வேட்டைத் தொழிலில்; வன்னம் = அழகு; வலவன் = வல்லவன்; ஆற்றும் = அழுவாள்.

தஞ்ச மொன்றிலன் றமியனுய்ச் சென்றனன் றகைசா
லஞ்ச னக்கிரி யாமென வுருத்தெதி ரடாந்து
மஞ்செ னப்பொழி மதசதுப் பதத்துணை மருப்புக
குஞ்ச ரக்குலங் கொன்றதோ வென்றுளங் குலையும் (கூ௩)

கரிய நீண்மயிரக் கூருகிரக் கவிழ்தலைக் காடி
சரியில் வந்துயிர் சவாந்ததோ வென்னமெய் தளரு
முரிய வெஞ்சினக் கொடுவரி கறுத்தொறுத் துடலைப
பெரியவாயினிறபெய்ததுகொல்லெனப்பிதற்றும் (கூச)

அளையு றமபணி விடங்கலுழ்ந் துமிழ்நதிடு மகல்வாய்த்
துளையெ யிறறினே றுண்டது வோவெனச் சோருங
கிளையு டன்றிரி கரிவழிப பகையதாங கிளாவா
லுளைம டங்கலா லுயிருலந தனனகொலென் றுன்னும்

(கூ௩) தஞ்சம் = ஆதரவு; தமியனுய் = ஒன்றியாய்; தகைசால = பெருமை நிறைந்த; உருததது = கோபித்து; மஞ்சுஎன=மேகத்தைப்போல; சதுப்பதம்=நான்கு பாதம, (சதுா பாதம் என்னும்வடமொழியின்திரிபு); குஞ்சரம் = யானை; உளமகுலையும் = மனம் நடுஙகுவாள்

(கூச) சரி=வழி; உரியவெஞ்சின=கோபத்தினை உரிமையாகவுடைய; கொடுவரி = புலி; கறுத்து = கோபித்து; ஒறுதது=வருததப்படுததி

(கூரு) அளை=வளை; பணி = பாம்பு; கலுழ்ந்து = பெருகி; துளையெயிற்றின் = (விஷம்வெளிப்படும்) துவாரமுள்ள பலலினுல்; எறுணடதோ = கடிபட்டனனே; கிளையுடன்=தன்னினத்தோடு; கிளர்வால் = விளங்கும் வால்; மடங்கல் = சிம்மம்; உயிர் உலந்தனன்= உயிரிழந்தனன்.

நாட்ட மன்னநின் புதல்வர்வெம் பசியினு னலிந்து
கோட்ட முற்றனர் கொழுந்தசை கோற்கொளீஇ வெதுப்பி
யூட்ட வந்திலை யுன்றனக் குரிமையா மெனது
வாட்ட நோக்கிலை யென்கொல்செய் தாயென மயங்கும். ()

என்றி ருந்தரு ந்துயருழந் திடைகக்கொடிக் கொடிச்சி
குன்றி யின்வடங் கிடந்தொளிர் கொங்கைகள் குளிப்ப
வென்றி யங்கதிர் வேலவிழி நீருகுத் திடும்பை
யன்றி யொன்றில ளயர்ந்தன ளிருந்திடுமமையம் (கள)

பரவி யந்தணா வந்தனை புரிந்துமுன் பழிச்ச
விரவி யம்புயம் பொறகதிர்க் கரங்களால் விரிந்துப்
புரவி யேழ்நுகம் பூட்டிய பொற்றடந் தேரூ
ரிரவி யுங்குண புலத்துய ரிரவியி லெழுந்தான் (கஅ)

புலவு வாய்க்கம முங்குலன் றினந்தொறும் புரிந்த
வலகில் பாவவல் லிருள்களைத் துரந்தகற றுதலா
னிலவு நீறணி நீள்புரி சடைச்சிவ னிசியு
முலகி னீடிருட்கடிபகற் கதிருமொத் துளதால (கக)

---

(கசு) நாட்டம் அன்ன = கண்ணையொத்த; கோட்டம் = தளர்ச்சி; கோற்கொளீஇ = கொம்பிற்கோத்து.

(கள) கொடிச்சி = வேடச்சி; குன்றியின்வடம் = குன்றி மணிமாலை; வென்றி = வெற்றி; இடும்பை = துன் பம்; அமையம் = வேளை

(கஅ) அந்தணர்பரவி = பிராமணர்கூடி; முன்வந்தனை புரிந்து = எதிரில் நின்றுவணங்கி; பழிச்ச = துதிக்க; விரவி = தோன்றி; பொன் = அழகிய; புரவிஏழ் = ஏழுகுதிரை; நுகம்பூட்டிய = நுகத்தடியிற் கட்டிய; இரவியில் = உதயகிரியில்.

(கக) அலகில் = அளவில்லாத; இருள்கடி = இருளைத்துரத் தும்; பகற்கதிர் = பகற்காலத்திற் குரிய சூரியன்; இது சிவராத்திரிக்கும் சூரியனுக்குஞ்சிலேடை.

மேவி ளங்கதிர் விரிந்திட விடிந்ததன் பின்னர்
வாவி ளஞ்சிறு மான்விழி யெயிற்றிதன் மைந்த
னாவி ழந்தகன் றனவரென் றங்குல னினைந்து
கூவி ளம்பணி னின்றிழிந் தனன்வழி கொண்டான் (சo)

ஊறி லாத்துய ருற்றிடு மெயிற்றிதன் னிதயந்
தேறி வேட்டினைத் தேடுவா னடந்துறு செப்பத்
தூறி லானவரல் கண்டெதிர் தோகையிற் றழுவி
மாறி லாத்துயர் புற்குடின் மேவினர் வந்தார். (சக)

வந்து செந்தினை மாவுடன் வம்புமா வரைத்தின
முந்து புற்பதம் மேவுநீ வாரவெண் மூரல்
னந்து நற்றசை நறவுக ளொடுற நாடித்
தந்து மற்றவ னோடுபன் னாளவண் சார்ந்தான் (சஉ)

முருந்தி யற்றரும் பற்கழன் றிடநரை முதிர்ந்திட்
டருந்து தற்கரி தாயுடல் பலங்கெடு மந்நாட்

(சo) வாவு = தாண்டிச்செல்லுகிற; ஆவிழந்த கன்று = பசுவையொழிந்த கன்றினைப்போல; கூவிளம் பணை = வில்வமரக்கிளை; வழிகொண்டான் = பிரயாணப்பட்டான்.

(சக) உறு செப்பத்து = அடைந்த வழியில்; ஊறிலானவரல் = கெடுதியில்லாதவனாய்வரக்கண்டு; குடில் = குடிசை; மேவினர் வந்தார் = விரும்பி வந்தார்.

(சஉ) வம்புஅமா = வாசனைபொருந்திய; புற்பதம் = புல்லரிசிச்சோறு; நீவாரம = நீவாரமென்னும் புல்லரிசியினாலாகிய; வெண்மூரல = வெண்மையாகிய சோறு; நந்து = மிகுந்த; நல்தசை = மாமிசம்; நறவு = வாசனையுள்ள; கள = மலர்த்தேன்; நாடி = தேடி; சார்ந்தான் = சேர்ந்திருந்தான்.

பெருந்தி ரைக்கடற் கடுவுறழ் பெரும்பிணி பிணிக்க
வருந்திமற் றவன் சடந்துறந் திறந்தனன் மன்னோ (௨௩)

வேறு

சூலமொடு வாளிசிலை தோமர முலக்கை
பாலமயில் வேல்விசிறு பாசமவை கொண்டே
வாலமதி போலெயி றிலங்கவட வைத்தீ
யாலநிகர் தூதுவர்க ளவ்வயி னடைந்தார். (௨௪)

பற்றினர் புயத்துணைகள் பாசமத னாலே
சுற்றின ரடித்தனர் துடித்திட விடித்துக்
குற்றின ருடற்சவி குறைத்தவச மேனமே
லுற்றிட வுதைத்துவழி யொல்லைபட ரெல்லை (௨௫)

மங்கையொரு பங்கனமழு மான்மறி மரைப்பூஞ்
செங்கையி லிருத்திறை சிலாதரன மகற்கூய்ச்
சங்கைபெறு மங்குல னெனுஞ்சவ னைத்தம
மங்கைகொள் கயிற்றினிடை யாத்தியம தூதர் (௨௬)

---

(௨௩) முருந்து = பட்சிகளினிறகின் அடிபோன்ற; இயல் தரும=அழகுபொருந்திய; அருந்துதற்கு=சாப்பிடுதற்கு; கடுவுறழ்=விஷத்தையொத்த; பிணிக்க = பற்ற; சடம=தேகம

(௨௪) தோமரம் = எறிந்து கொல்லும ஆயுதம்; உலக்கை= இருப்புத்தண்டம்; பாலம்=மழு; அயிலவேல்=கூர்மையான வேலாயுதம; வால மதி = இளஞ்சந்திரன்; ஆலம்=விஷம;

(௨௫) இடித்து=மோதி; சவி=பெலம; அவசம்=அறிவழிதல; ஒல்லை=சீக்கிரம்; வழிபடர்=வழிச்செல்லுகிற; எல்லை=பொழுது.

(௨௬) மான்மறி = மான்கன்று; சிலாதரன்மகன்=சிலாதர முனிவரது புதல்வராகிய நந்திதேவரை; கூய்=கூப்பிட்டு; சங்கை=பெருமை; அங்கை=அழகிய கை; யாத்து=கட்டி.

சென்றன ரிலக்கியொளிர் செம்பொனணி தேர்மே
லின்றவனை யேற்றியொ ரிமைப்பி னிவணெய்தக்
குன்றன புயத்துவலி குன்றமரு வாரை
வென்றகண நாதரை விடுத்திடுதி யென்றான். (சஎ)

நாதன்விடை கொண்டுகண நாதரை யழைத்தே
யேதமறு மங்குலனை யின்றுகொடு போகுந்
தூதர்தமை வென்றுவிரை விற்சுடர் விமான
மீதினி லிருத்தியிவண் மேவவிடு கென்றான் (சஅ)

நந்திமொழி கொண்டுகண நாதர்கள் விரைந்து
வந்தியம தூதரை வருத்திவலி செய்தே
முந்தியவன் மொய்ம்புகண் முரிக்கவிசி பாசஞ்
சிந்திமணி மொய்த்தொளிகொ டேரினமிசை வைத்தார்

யாவர்பணி கொண்டிவ ணெதிர்ந்திது புரிந்தீர்
போவதிவ னெங்ஙனமொர் புண்ணிய மிலாதான்
மேவவுவ ணுமினி விடோமென வெகுண்டு
காவல்புரி காலபடர் நாயகரெதிர் கதித்தார் (ரு0)

உங்கடலை வன்றன துரத்திடை யுதைத்தோ
னெங்கடலை வன்பணியி னென்றுமுர லைத்தார்

---

(சஎ) இன்று=இப்பொழுது; இமைப்பில் = இமைப்பொழுதில்; எய்த=அடையும்படி; மருவார்=பகைவர்.

(சஅ) ஏதம் அறும்=குற்றமற்ற; மேவ=அடைய

(சகூ) வலிசெய்து = பலாத்காரமாய்; மொய்ம்புகள்=புஜங்கள்; முரிக்க = நொறுக்க; விசி = கட்டி; சிந்தி= அறுத்து; மொய்த்து=அடர்ந்து.

(ரு0) பணி=ஏவல்; உவன் மேவ=அவன்அடைய; எதிர் கதித்தார்=கோபித்து எதிர்த்தார்.

செங்கடலை நோகுருதி சிநதவெம தூதா
தஙகடலை மோதினா தரிததில ரகனமுரா (ருக)

வென்றிதரு வானவா விரைததருவி னறபூப
பொனறிகழ் செழுநதுணா பொழிநதனாகள வாழ்தத
லனறியர மஙகையாக ளஙகிரு பருஙகு
நினறிணைகொள வெணகவரி நேசமொடு வீச (ருஉ)

விண்டல முதிககூடி வெணகுடை நிழறறப
பண்டரு மிசைபபனுவல கநதருவா பாடக
கொண்டலிடி யொததகிர குரறகுட முழாநற
றொண்டகம தோடமா துநதுபி முழஙக (ருந)

போயமலன முனபுக விடுததபொழு தெமபா
லேயகண மாயிவ ணிருநதிடுதி யெனறே
நேயமிக வைததெழிலகொ ளெறறிவிழி யுறற
நாயக னுரைததுவர நலகின னயநதே (ருச)

---

(ருக) உரததிடை = மாாபினிடதது; முசலம = இருப்புல கைகை, கடலைநோ = சமுததிரததை யொதத; செஙகுருதி = சிவநத இரததம

(ருஉ) பொன்திகழ் செழுநதுணா = பொன்போல விளஙகும அழகிய கொததுகளாய, நறபூப்பொழிநதனா = நலல பூககளை இறைததனா; அரமஙகையர் = அரமபா ஸதிரீகள்; இணைகொள் = இரட்டையாகிய

(ருந) விண்தலம = ஆகாசமாகிய இடததில்; நிழற்ற = நிழலைசசெய்ய; பணதரும இசைப்பனுவல = இராகததோடுஙகூடிப் பாடுகிறபாட்டுகள்; அதிாகுரல = பேரொலி; குடமுழாம் = ஓர்வாததியம்; தொண்டகம = ஓர்வாததியம, அமரதுநதுபி = தெயவ வாததியஙகள்.

(ருச) நயநது = விரும்பி

செங்கணெயி னன்கயிலை சோகணம தாகி
யங்கணமர் வுற்றபி னருநதுயாகொ டேதா
திஙகண்முடி யானடியா செய்ததிற மெலலாம
வெஙகண்மற லிக்குமுன விளமபவிரை வுறறா. (நரு).

பாசமெறி தாரைதொடா பாறுபடி சூலம
வீசுசுடா வேன்முசல மினனுகதை நன்று
ராசமுட னஙகுசம தஙகையிரு நானகிற
றேசுற வுரத்தினிடை செநதொடை விளஙக (நசு)

எற்றிய கடறறிரை யிருததிய தெனககா
முறறிநெளி வுறறபுரு வததுணை முரிபபுப
பெற்றிடி யெனககுரல பிறஙகுபில வாயுட
பறறிய தழறகுஞ்சி பஙகியும விளஙக (நஎ)

வாதகப பிதததமுத லானபிணி மறறு
மேதமிகு சொறபணி யியறறியப ணிறபப

---

(நரு) செஙகண்=சிவநதகண்களையுடைய; எயினன = வேடன்; தூதா=இயம படாள்; வெஙகண=கொடுமை

(நசு) எறிதாரை = எறிநது கொல்லுஞ் சககரம்; தொடா பாறு=நாற்றமபறறித தொடாநதுவருகிற பருந்தா னது; படி=அடையுமபடியான; சூலம்=சூலாயுதம்; முசலம்=இருப்புலககை; நாராசம=இருப்புககம்பி, (அது என்பது பகுதிப்பொருள் விகுதி) தேசுற=பிர காசிகக; செநதொடை=சிவநதமாலை

(நஎ) எற்றிய கடல திரை=கடலினது கரையை மோதுகி ன்ற அலையை; இருததியதென = வைததது போலும்; கார்முற்றி = கறுப்பு மிகுநது; நெளிவுற்ற= வளைந்த; முரிப்புப்பெற்று = (புருவத்தை) ஏற்றுந் தன்மைபெற்று; பிலவாயும்=குகைபோன்ற வாயும்; பற்றிய=எரிகிற; பங்கி=தலைமயிர்.

பாதகர் வெருக்கொடு பதைத்திட வருததுாத
தூதரிரு பக்கமுறை சுற்றினார்கள் சூழ. (நிஅ)

சாலமொழி மாதாபல சாமரை யிரட்ட
வாலமதி யாமென வளைநதெயி றிலங்க
நீலவரை போனிதி நெடுநதவி சிருககுங
காலனிரு காலிலிவா கைதொழுது வீழ்நதே (நிக)

மூடனை யறததிற முயன்றறித லிலலா
வேடனை வடததினிடை வீககிவரு காலைப
பாடனை வருக்குமிது பண்ணிவொ ரொறறைக்
கோடனை யளிததவாக ணஙகள் கொடுபோனா (சுO)

என்றிவை யுரைததிட வெயிறறித ழதுககித
தென்றிசை நகாககிறை திரண்டெழ வளாநத
குன்றின்மிகை பெறறிடு புயததுணை குலுஙக
நன்றிது வெனததனி நகைததுட னெழுநதே (சுக)

சஞ்சரிக மொய்ததுமுர லுாகளசை யபபோ
யஞசன வரைககுநிக ரானபக டேறி

(நிஅ) சொற்பணி = சொல்லுகிற ஏவல்; அயல் = பக்கத திலே; பாதகர்=பாவிகள்; வெருக்கொடு=பயங்கொ ணடு; முறை=முறைப்படி

(நிக) சால = நிறைநத; வாலமதி = இளமபிறை; நீலவரை போல் = நீலமலையை யொத்து; எயிறு = பல்; நிதி=பொன்.

(சுO) வடம் = பாசம்; வீககி=கட்டி; இதுபாடு = இந்தத் துன்பத்தை; அனைவருககும் = எஙகள எல்லோருக் கும்; ஒற்றைக்கோடன்=ஒற்றைக கொம்பையுடைய விநாயகர்.

(சுக) குன்றின்மிகை = குன்றைப்போன்ற; தனிநகைத் து=ஒப்பின்றிச் சிரித்து.

விஞ்சிய கணக்களொடு வீரர்பலர் சூழ
மஞ்சன மிடற்றிறைவன் வாழ்கயிலை வந்தான் (௮௨)

வேறு

அரியமா தவத்தோ ருள்ளமொத் துயர்ந்தோ
ரணுவினுங் கலங்கமொன் றின்றிக், கரியமா முகில்கள்
படிதடஞ் சாரற் கயிலையிற் கனகமா மணியா, லுரிய
நான் முகத்து விதிவிதிக் கரிய வொளிதிகழ் கதிர்களா
யிரமும், விரியுமா தவரோர் கோடிவந் துதித்து விள
ங்கல்போற் றுளங்குமண் டபத்தின் (௮௩)

ஐம்படை தரித்த தண்ணறுந் துளபத் தண்
ணலு மண்முதற் படைத்த, வம்படை கமலத் தவி
சுறை யயனும் வரைச்சிறை யறுத்திடும் வசிச்சம், பம்
படை யெனக்கொள் பாகசா தனனும் பன்னிரண் ட
ருக்கரு மொற்றைக், கொம்படை களிற்று முகம்ப
டைத்தருளுங் குடவயிற் றைங்கரக் கோவும் (௮௪)

---

(௮௨) முரல் தார் = வண்டுகள் ரீங்காரம் செய்து வசிக்கிற மாலை; விஞ்சிய = மேம்பட்ட; மஞ்சு அன = மேகம் போன்ற

(௮௩) ஓர் அணுவினும் = ஒருஅணுவளவேனும்; முகில்கள் படி = மேகங்கள் தங்கும்; விதி = பிரமனால்; விதிக் கரிய = படைத்தற்கரிய; கனகமாமணியால் = பொன்னாலும் இரத்தினங்களாலும்; ஆதவர் ஓர்கோடி = கோடிசூரியர்; துளங்கும் = பிரகாசிக்கும்

(௮௪) ஐம்படை = ஐந்து ஆயுதம், அவைதாவது சங்கு, சக்கரம், வாள், கதை, சாரங்கம் என்னும் ஐந்துமாம்; வம்பு அடை = வாசனையுற்ற; தவிசு = பீடம்; சிறை = சிறகு; வசி = கூர்மைபொருந்திய; சம்பம் = வச்சிராயுதத்தை; படையெனக்கொள் = ஆயுதமாகக்கொண்ட; பாகசாதனன் = இந்திரன்; அருக்கர் = சூரியர்; கொம்பு அடை = கொம்பையுடைய.

வாாபெறு கலச முலைக்குறக கொடியை மணா
தருண் மகிழ்நனற கடபபா, தாாபெறு புயதமதோன
முரகன சினககே சரிமுகன் றகுவாகட கிறையாஞ்,
சூாபெறு வரங்க டொலைததவை வேலோன மறைகை
மே வொகாமூாா தருளவோன, கூாபெறு முட்டாட்
செநநிறக குடுமிக கோழிசோ கொடிககரக குகனும்

உகைமுற றெுடுஙகுங காலையி லெழூநத வூழி
வெந தீயென வுருததுத, திலகமுற றிடுவா ணுதன
மறைக கொடிதோள சோநதிடுஞ சிறுவிதி விதியிற,
கலகமுற றிகலிப புரிமக மரைககாற கணததினிற
சிதைததவன பிறைபோ, லிலகவிட டெறிககுங கதி
ரெயிற றலைகை யேறிடும வீரபத திரனும (சுசு)

புடததிடு பசுமபொற குழைகிழித திடுங்கட்
பூரணை புட்கலை தரள, வடக்குட முலைக ளுழுதுழு
துழககு மாாபினன மாலென முழஙகி, முடககிய
தடக்கை நீடடிமூச சொடுககி முரிதிசைக் கடலெலா
முகநதுள், ளடககிபே யுமிழவெள ளானைமே லேறு
மரிகரகுமரனு னவனும (சுஎ)

(சுரு) கேசரிமுகன் = சிஙகமுகன்; தகுவா = அசுரா; சூா = சூரபதமன; வைவேல = கூாமையுள்ள வேலாயுதம; தோகைமேவு = இறகையுடைய; ஒகரம் = மயில; முள் தாள் = முள்போன்ற நகஙகளுள்ள கால

(சுசு) திலகம = நெற்றிப்பொட்டு; மறைக்கொடி = வேத வல்லி (வேதவல்லியென்பவள தககன் மனைவி); சிறு விதி = தக்கன; விதியில = விதிவலியால; இகலி = பகைத்து; இலக = விளங்க; விட்டு எறிக்குங் கதிர் = கதிா விட்டுப்பிரகாசிக்கும.

(சுஎ) புடத்திடும் = தீயிலிடும; பூரணை, புட்கலை = ஐயனாா் மனைவியா்; உழக்கும் = கலக்கும்; மால் = மேகம்; முடக்கியதடக்கை = நீண்ட துதிக்கை.

வள்ளெனக் குரைக்குங் கரியநா யூரும வடுகனு மாருதத தேவு, மள்ளலஞ் சேற்றுக் கருங்கடற் கிறையு மக்கினிக கடவுளு மளகைக, கெள்ளறுந தலைமை பூண்டபிங சலனு மிருஞசிறைச சுரும்புபாட் டயாந்து, கள்ளருந திடுந்தார நிருதியுஞ சுருதி கரு தமீ சானனென பவனும. (சுஅ)

மேவரு விரிவெண் டிரைக்கட லேழும் விலங்க லின் குலங்களோ ரேழும, பூவருங கங்கை முதனதி யேழும பொறபுறு கரபக நிழலவாழ, தேவரு முயா கந தருவரு நிதத சிததரு முததரா முனிவா,யாவருஞ் செங்கை குவிததா காவென் றிருமருங கினுநதிரண் டேத்த. (சுகூ)

பாரதன மேலா மண்டகோ ளகைபொற் பருப பதந திருபபவும வலல, சாரதக குழுவுங குழிவிழிப பேழ்வாய்த தளர்நடைப பேய்களுஞ சார, நாரதன மகதி யாழ்நரம புளர நநதிகைப பிரம்பெடுததுலவக், காரதன வடிவு பெறுநறுங கூநத லரமபையா கவரிகா லசைபப. (எ0)

---

(சுஅ) வடுகன்=வயிரவக்கடவுள்; மாருதத்தேவும் = வாய்வு தேவனும்; அள்ளல அம் சேறு = குழைநத சேறு, (அம்சாரியை) இது இருபெயரொட்டு; கடற்கு இறை= வருணன்; எள்ளறும் = இகழ்வற்ற; பிஙகலன் = குபேரன்; இரும்=பெரிய; சுரும்பு=வண்டு; பாட்ட யர்ந்து=பாடி; தார்=மாலையை யுடைய

(சுகூ) மெவஅரும்=கடத்தற்கரிய; விலங்கல்=மலைகள்; பூவ ருங்கஙகை=பூமியில்வந்தகங்கை; நதிஎழு=சப்தநதி கள், அவை கஙகை, யமுனை, சரஸ்வதி, கோதாவரி, நிர்மதை, சிந்து, காவேரி என்பவைகளாம்.

கொலைபயி னயனத தனுசன மறுவுங குளிா
மொழி யமிழ்தமுங் குலவு, மலைமகள வதன முழும
திக் குடைநது வாளெயிற றரவினுக கிடைநது, கலை
வள ராம லுடல்குறைந தொதுஙகிக கடுககைமா லூர
மாா கபிதத, நிலைபெற சடைக்காட் டலைநதிக் கயல
வெண் ணிலவுகான றிளமதி கிடபப (எக)

கறஙகிடுந திரைநீாக கஙகையளு சடையிற கட
செவிக கடும்பணி சீற, வுறஙகிட றவிாநது கரநக நுதி
யா லுரிததுமுன் மருஙகுற வுடுதத, மறங்கிளா தழற
கட் கொடுவரிப புலிததோ லுடையனுங் கிடுந்தொறு
மருண்மா, னிறஙகிட வெருவிக குதிததெழுந தறற
நோக்கியங கிடககரத திருபப (எஉ)

---

(எ0) பாா அதன் மேலாம்=உலகத்தில மேலாகிய; அண்ட கோளகை=வானவட்டம; பொனபருப்பதம்=மேரு மலையையும; சாரதககுழுவும = பூத கூட்டங்களும; மகதியாழ்=யாழ்வகை நான்கினுென்று, அந நானகா வன, பேரியாழ், சகோடயாழ், மகதியாழ், செங் கோட்டியாழ் என்பனவாம், மகதியாழை மகரயாழ் எனவும வழஙகுவா; உளர=கையாற்றடவி வாசிக்க; காா அதன=மேகததினது

(எக) மறுவும = களஙகமும; உடைநது=தோற்று; வாள் எயிற்று அரவு=பரமேசுவா ரணிநதுள்ள வாள்போ னற பற்களையுடைய பாமபு; இடைநது = பயநது; மாலூரம்=விலவம; ஆா=ஆததி; கபிததம்=விளா; வெணணிலவு=வெள்ளிய வொளி; கான்று=வீசி.

(எஉ) கறங்கிடும்=ஒலிக்கும்; கட்செவிக்கடும்பணி = கண் ணேயே செவியாகவுமுடைய பாம்பு; நுதி = நுனி; மருஙகு = இடை; மறஙகிளா = வீரம்பொருந்திய; கொடுவரி = வளைந்தகோடுகள்; அனுங்கிடுந்தொ றும்=அசையுந்தோறும்; மருண்மான்=மருளுகின்ற மான்; வெருவி இறஙகிட = பயந்து இறஙகுதற்கு; அற்றம்=சமயம்

கோலவரை நிகர்க்கும் வரிநெடுந் தடங்கட் குவி
தனத் திரதிதோ டோய்ந்த, சேலவரை துவசச் சித்தச
னெரியத் திறந்தகண் டிருநுதற் றிகழ்க, காலவரை
யளித்தற் கரிதென விரிந்த கடுநுகர் களனுமவித்
துருமம், மாலவரை யருவி யென்னமுப் புரிநூல் வயங்
குமார் பழுமிந விளங்க (எங)

தூய செந் தாமரைச் சுந் தரன்றனக் காகத் தூது
போய்ப் பரவைபா னடந்து, மேயவன் றிறலசே ரந்தக்
குகை விலங்கன் முன கலங்கிட வுதைத்துச், சேயசெங்
கமல மெனச்சிறந் தன்பர் சிந்தையம் போருக மலரக்,
காயகதிர் விரிக்குஞ் செழுமணிச் செம்பொற் கனை
கழற் றாளிணை கவின (எச)

அம்மைமார் கலிகூ ழுலகினிற் புகவி தோன்றிய
கவுணியச் சேய்க்குக், கொம்மைவார் முலையா ரமுதுமுத

(எங) கோல வரை = சக்கரவாளகிரி; வரி = செவ்வரி; நெடுந்
தடங்கண் = நீண்டுவிசாலித்த கண், சேல்வரை =
மீனெழுதிய; சித்தசன் = மன்மதன்; நுதல் = நெற்றி
யில்; கால்வரை = கால அளவை; அளித்தற்கு =
கூறுதற்கு; களனும் = கழுத்தும்; வித்துரும மால
வரை = பெரிய பவளமலை; அருவியென்ன = நதியோ
ல; மார்பம் = மார்

(எச) தூது நடந்துபோய் = தூதனாய் நடந்துபோய்;
மேய = பொருந்திய; வன்திறலசேர் = மிக்க வலிமை
யுள்ள; ஆக விலங்கல் = சரீரமாகிய மலை; கலங்க =
நடுங்க; சேய = அழகிய; காய்கதிர் விரிக்கும் = (சூரி
யகிரணங்களைபோலும்) பிரகாசிக்கும் கிரணங்கள்
எழும்; செழுமணி = அழகியமணிகள் பதித்த; கவின்
= அழகுசெய்ய

தமிழுங் குழைத்துமுன் குடித்திட்ட பருக்கு, மம்மை
யோர் பாக மாகமற் றெவர்க்கு மருள்குளித் திடுமவிழி
ரபரி, வெம்மையார் மடங்க லாசனத் தெம்மையாள்
விமலனங் கினிதுவீற் றிருந்தான் (எரு)

முந்தைநாட் களினித் தனைமையி னிகழ்ந்த முழு
வெத்தா நினைந்துநீண் முடிக்கிட, கிந்தைமா விந்த நிகாத
தகோ புரனுசோ கீழ்த்திசை வாயில்போய் நந்தி, யெந
தையே வலிணு லடுந்திறற் காலனிருகர மிருசரணந
தவ, சிந்தைகம்பித்தத்தோ டொலிரா னிருக்குந் திருச
ரனை யூடுபோய்த் துதிப்பான் (எசா)

பொங்கர விதழிப் புதுமலர் புனைந்த புரிசடைப்
புனிதவம் புயத்தோன், கங்கா கங்கா தாதா வரையுங்
காய்சினத் தாக்குமுன னுரித்த, துங்க வியனை

---

(எரு) சும்மை = ஒலியினையுடைய; ஆர்கலி = சமுத்திரம்; கொம்மை = இளமை; ஆரமுது = அருமையான அமுதம்; ஓர்பாகமாக = ஓர்பாலமாந்திருக்க; விழிபாப்பி = கண்ணால் நோக்கி

(எசா) நீள் முடி = நீண்ட சிகரங்களையுடைய; மாவிந்தம் = பெரியவிந்தமலை; அடுந்திறல் = கொல்லும் வல்லமையுடைய; இருகரம் = இருகையும்; இரண்டு சரணம் = இரண்டு காலும்; கம்பித்தோடு = நடுக்கத்துடன்

(எஎ) பொங்கு அரவு = சீறுகின்ற பாம்பு; இதழி = கொன்றை; அம்புயத்தோன் = பிரமனது; கம் = கபாலமுடைய; கர = கையனே; கரவரை = யானை; தரக்கு = புலி; துங்க = பரிசுத்தமானவனே; ரவி = சூரியன்; அனல் = அக்கினி; மதி = சோமன்; முக்கண் ஆம் = மூன்றுகண்களாகவுடைய; சுர = தேவனே; நரைவிடை வரை = வெளுத்த இடபமெழுதிய; துவச = கொடியையுடையவனே; திகம்பர = திசைகளை வஸ்திர மாகத் தரித்தவனே.

மதியமுகக் கண்ணுஞ் சாநரை விடைவரை துவச, சங்கர
வமல திகம்பர வும்பர் தலைவநின் றுண்மலர் போற்றி ()

மன்றன்மைக் கூழை மலைமகட் புணர வருத்துதி
யென்றுசொன் மரும, னென்றுப ரருக்காச சென்றுடற்
றுவனென் றங்கணை யைங்கணைக் கிழவன், பொன்றமத்
தக்கட் புலக்கனல் கொளுத்திய புன்னகை புரிந்து
முப்புரமுங், குன்றவிற் கனகக் குன்றவிற் குனித்த
குழகநின் குரைகழல் போற்றி (எஅ)

ஒருமலை பெடுத்த விருந்திற லரக்க னுரனுடைந்
துட்கமுன் னுானறிப, பொருமலை சலதி கடைந்திடு
மந்நாட் புத்தமு தத்தொட னுதித்து, வருமலைப் பழித்த
குழற்றிரு மனைவி பாலவிர்ப் போதணிந் தடியார்.
கருமலை வகற்றி யினைபாவி டளிக்குங் கனைகழற் றுண
மலர் போற்றி. (எகூ)

---

(எஅ) மைக்கூழை = கரியகூந்தல, மலைமகள்புணர = பர்வத ராஜன் புத்திரியாகிய பார்வதிதேவியை மணக்க; வருத்துதி = வருத்தப்படுத்து வாயாக; உடற்றுவன் = போரிடுவேன, அங்கு = அவ்விடத்து; அணை = அடைந்த; ஐங்கணைக்கிழவன் = மன்மதன்; பொன்ற = அழிய; மத்தக்கட்புலன = நெற்றிக்கண்; கனல் கொளுத்தி = தீயாலெரித்து; வில் = ஒளியுள்ள; கனகக் குன்றவில = தங்கமலை (மேருமலை) யைவில்லாக; குனித்த = வளைத்த; குழக = என்றும் இளமையுடையவனே; குரை = ஒலிக்கின்ற; கழல = வீரகண்டையைத் தரித்த திருவடி, அன்மொழித்தொகை

(எகூ) இருந்திறல் = மிகுந்தவலிமை; உரன்உடைந்து = வலிமைகெட்டு; உட்க = தளர; முன = முன்னுளில; பொரும் அலை = கரையைமோதுகின்ற அலை; அலை (அல்லை) = இருளை, அல்லையென்பதை அலையெனல் இடைக்குறை; பழித்த = நாணுறச்செய்த; திரு = இலக்குமி; கரு = பிறவி; மலைவு = துன்பம்

வேறு

மனப்பல துதிகள் கூறி யீசனை யிறைஞ்சி யேத்தி,
மனப்படு மச்ச நீங்கி வாய்புதைத் தொதுங்கி நின்றங்,
கனப்பதி பாகன் றன்னை யவனிமுற் படைக்கச் செய்
தாய், களப்படு முலகங் காக்கக் கண்ணனைக் கற்பித்
தாயே (அ0)

கண்ணழல் கதுவும் வெள்ளைக் கோட்டுமால் யானை
யூரு, மண்ணலைப் புலவர் பொன்னூ டளித்திடற் கரு
ளிச் செய்தாய், தண்ணெனுங் கதிர்கள் வீசுஞ் சந்
திரா தித்தர் தம்மை, விண்ணினி னிலவி வையம் விளக்
குவீ ரென விடுத்தாய் (அக)

ஏர்பெறு மளகை தன்னை யிருநிதிக் குபேரற் கீந்
தாய், பார்முகத் தெங்கும் வீசப் பவனனைப் பணித்தாய்
மற்றை, வார்தருஞ் சலதி யாள வருணனை வைத்தாய்
தன்மச், சீர்கெடு மவாக்குத் தண்டஞ் செய்வதற்
கமைத்தா யென்னை (அஉ)

---

(அ0) இறைஞ்சி = வணங்கி; ஏத்தி = துதித்து; மனப்படும் = மனத்திலுண்டாகும், அனப்பதி = அரச அன்னம்; பாகன் = ஏறிநடத்துவோன்

(அக) கண அழல கதுவும = கண்ணில அனலவீசும்; வெள்ளை மால் யானை = பெரியவெள்ளையானை; ஊரும = செலுத்தும், அண்ணலை = இந்திரனை; புலவா = தேவாகளது, பொனனூடு = சுவாககலோகம்

(அஉ) அளகை = அளகாபுரி; இருநிதி = சஙகநிதி பதுமநிதி என்பனவாம; பவனன = வாய்வு தேவனை; வார் தரும் = நீண்ட; சலதியாள = சமுத்திரத்தைப் பரிபாலிக்க; தன்மச்சீர்கெடுமவாக்கு = தருமச சிறப்பு அழிந

திரிபுவ னத்து நீதான் செய்தகற பனைக ளெல்லாஞ், சரிவர நடந்த தின்றுந் தமியனேன் பிழைத்த தில்லை, புரிசடைய பரம வென்று புரிநெடும பாசத் தோடு, முரிசெயற் கரிய தண்ட முதல்முத் திரைமுன் வைத்து (அங)

ஆக்குவா னழிக்க வெண்ணி லாரது காக்க வல்லா, நீக்குவா யிதனை மற்றோா பணிசெய நிறுத்து தென்று, தூக்குநீ டுலக்கோ லன்னான் சொற்றது கேட்டு நெஞ்சிற், றாக்குமா றின்று வந்த தாழ்வெனக்கொண் சாற்றுகின்றான் (அச)

கண்ணிக ளுனறிக் கையிற் காமுகங் குறித்தம் பேயவி, மண்ணிலாய வினங்கள் கொன்றும் வாய்த்த புட் குலங்கண் மாய்த்தும், வெண்ணிணைத் தடிக டின்று வீக்கிய சடத்தா னன்றொன், றுண்ணிகழ் விலலா னேட லுன்பதத் துறைக்க லுற்றான் (அரு)

---

(அங) திரி புவனம் = சுவர்க்க மத்திய பாதலம் என்னு மூவுலகம்; கற்பனை = கட்டளை; பிழைத்ததில்லை = தவறினேனில்லை; புரி = முறுக்கிய; முரி செயதற்கு அரிய = அழித்தற்கரிய; முதல = முதலிய

(அச) ஆக்குவான் = உண்டாக்குகிறவன; காக்க = தடுக்க; இதனை = இத்தொழிலை, மற்றோா பணிசெய நிறுத்து = மற்றொருவரை நியமனஞ்செய்; தூக்கு = நிறுக்கும்; தாக்குமாறு = வருத்தும்படி.

(அரு) மண்ணில் = பூவுலகத்தில்; வாய்த்த = கிடைத்த; வீக்கிய = பருத்த ; சடம் = தேகம்; நன்று ஒன்று = ஒரு நன்மையும்; உள் நிகழ்வில்லான் = மனத்தின்கணுண்டாக விலலாதவன், உறைத்தலுற்றான் = வசிக்கப் பெற்றான்

பரிமகம புரிகின் றானே பகாதரு மாக மாதத், துரியநீர படிகின றானே வயாசிவ லிங்க பூசை, புரிதர நினைகின றானே புண்ணியத் தலதத னுன்னைத, தெரி சனஞ் செய்கின றானே சிவநிசி நோற்கின் றானே (அசு)

எத்தவம புரிந்தா னிங்ங னெய்துதற் கிறைவ னுறுன, சித்தமே தெரிந்து நீதி திறமபிழ லறங்க டேயு, முத்தரும் பவங்கள செய்யு மூாக்கருஞ சரியா மெண்ணிற, றத்தலைக் கடனீா சூழ்ந்த தாரணி கவிழு மன்றே (அஎ)

என்னுடைத் தாதை தம்மை யிகல்புரிந் திவனு லின்றிங், குன்னுடைக் கணங்கள் செய்த துரைத்திடக் கேட்டி யோட்டு. மின்னுடைப் படையாற் றண்டால் வெட்டியும் புடைத்துஞ் சென்னி, முன்னுடைத் துதிரத் தோடு மூளைகள் சிந்தி னுனே (அஅ)

தாவருமப் பவங்கள் செய்வார் தாஞ்சிவ லோக மேவில், யாவரைத் தண்டஞ் செய்வ தென்றெதி ரியமன் கூறத், தேவரு முனிவர் தாமுஞ் சிந்தையிற் றியா னஞ் செய்யு, மேவருந் தாளுய நின்று மூர்த்தியு மொ ழிவ தானுன (அக)

(அசு) பரிமகம = அசுவமேதயாகம; புரிதர = செய்ய

(அஎ) தெரிந்தும்=அறிந்திருந்தும்; நீதி திறமபிடில்=நீதி தவறினல்; தேயும் = அழியும்; தத்துஅலே = தாவ கின்றஅலே; கவிழும்=தலே கீழாக மாறும்

(அஅ) இகல் புரிந்து = யுத்தஞ்செய்து; ஓட்டி = துரத்தி; மின்னுடை=பிரகாசமுடைய

(அக) தாவரும பவஙகள் = அழியாத பாவஙகள்; எதிர் = விடை

சிறப்பயில் வேடன் முன்னாள் வேட்டமே லெழு
ந்து நந்த, மல்படு காலையுண்டி யனந்தலற் றருகிற சாா
ந்து, பொற்பமா விலவஞ் சாத்திப் பூசனை புரிதலாலே,
சொற்பயில் பாவவேலை சுவறிடத் தூர்த்திட்டானே ()

இத்திற மறியாய் நீயு மெழுத்தருங் கணக்கில் வல்
லை, சித்திர குத்தனென்று தெரிந்திலை யென்ற திங்
கட், சத்திரன் றனைக்காய்ந்த சங்கர னுணைப்பதத் திட்
டும், பத்திர மெடுத்துப் பார்த்துக் கணக்கனும் பரிந்து
போற்றி (கஎக)

சிவநிசி யெனும் பேராரன் றினப்பத்து கூன்கிட்
டாம, லுவவசி யாகியானு முவாப்புலி யெண்கு சிங்க,
மவமெனைச் செய்யு மாலென் றஞ்சியவ் வில்வத் தேத்
திக். தவாவிடுங் கணைக் கையேவித் தானடைசெய்ய மீண்டுயி
லென்பேற (கஎ௨)

கூற்றருஞ் சிலைக் கையாலக் குழைமுகழ்ப் பக் கொய்து
வீழ்த்தா, னீர்த்தருங் கணைக டன்னி னித்திரை வாரா
மிருந்தப, பார்த்தனில் வீழும்வெ னென்றப் பயத்திற் பன்
னம் பண்ணி, போர்த்தரு மெய்யான பன்றி யினறிவன்
வருமென றெண்ணி (கஎ௩)

(கஎ0) நந்தம் அல = நமக்குரிய இரவு, (சிவராத்திரி); படு
காலை = உண்டானபொழுது; அநந்தல = நித்திரை,
பொற்புஅமா = அழகு பொருந்திய; சொல் பயில் =
சொல்லப்படுகிற; பாவவேலை = பாவமாகிய சமுத்தி
ரத்தை, தூர்த்திட்டான = ஒழித்தனன

(கஎக) திங்கள் சத்திரன் = சந்திரனைக் குடையாக் வுடைய
வன் (மன்மதன)

(கஎ௨) உவவசி = உபவாஸம், உவா = யானை; எண்கு = கரடி
அவம் எனை = எனக்குத்துன்பம்; செய்யும் = புரியும்,
ஆல் அசை; வில்வத்து = வில்வ மரத்து; தவா = வில

(கஎ௩) குழை = தழை; வீழ்த்தான் = தள்ளினன்; பன்னம்
பண்ணி = பத்திரமாகச் செய்து (தற்காப்புச் செய்து)

உசிதமா யிலைமேல் வைத்தன னாயிரத் தெட்டுத் திருந்தா வீச,
னிசியென நினைந்து தொன்னூல் விதியிற் செய்த தன்
றென, நசிதபாயக் கணக்கனீ ஜெதை கொண்ட முறை தட
லே தனனிற, பசிதமே பூசு மேனிப் பரமனும் பகரும்
பினனும (கூச)

அதையுணக் கறைவங் கேட்டி யறிந்திடா தியற்ற
லாமெல, சிதைவிலாக் கணக்கிற் சேர்ந்தான சித்தினை
முத்தி நல்குய, விதைநிகர் கங்குற் றனனில விதித்த நூலை
வழிவ பூரம, விதையப் சிறந்து செய்தா லியாமவ னுவ
னன்றே (கூரு)

செவ்விர வன்ன கூந்தற் சிலைமுகத் தேறற்ற
செயயு, மிவ்விர தத்தின மேனமை யாவரோ கணிக்க
வல்லார், கைவிரல கணணிற் படடாற் செயவதெ தன
கவலை நீக்கி, மைவிர வியகா மேனி மறலிநின் றாத
ரோமே (கூசா)

வைத்தமுத் திராவை வாங்கி வழிக்கொளவா
யெனன ஞான, வித்தகன கருணை யோடு விடை கொ
டுத்தருள வெணயு, முத்தனை பணைகொள் காலன்
முதலவனை முறையிற் றொழுந்து சித்தமுந் தெளிந்து
தேறித் தெனபுலத் தெயதி னானே (கூஎ)

---

(கூச) உசிதமாய்=தகுந்தபடி; பசிதம=பஸ்மம்

(கூரு) சிதைவிலா=அழிதலில்லாத; சித்தி=இஷ்ட பூர்த்தி; நன்முத்தி = மோட்சம்; விதைநிகர் கங்குல் = வித்தைப் போன்ற சிவராத்திரி; அவன யாம் ஆவன் = சாயுச்சிய மடைவன்

(கூசா) செவ்விரவு=மிகுந்த இருட்டு; மறலி=இயமனே.

(கூஎ) வழிக்கொள்வாய்=போவாயாக.

வேறு

வெங்கொ டுங்கொலை புரிந்த வங்கணும வெள்
ளி வெற்பிலொரு புள்ளிமான, செங்கை கொண்டருளு
மண்ணல் கண்ணருடி னந்தொ றும்பெறு கணங்களுக்
கங்க ணுற்றலைமை பெற்றி ருந்தபினை ந்து பைந்
தரு வளந்தருந், துங்க முற்றகன கந்தி கழ்ந்திலகு
நகர்கள் வாழுலக மேவினன (௯௮)

ஆட கப்பொனுல கத்தி னீடுகொடி யாடுமாடு
திகழ் மாடமேற, காட கத்தினுறை வேடனுற்றலர்
கொள் கற்ப கத்தினிழ லுற்றடிப, பாட கத்தொலி
பரப்ப ரம்பையர்கள் பலரு நின்றருகு பணிசெய, மாட
கத்திவவின யாழின் விஞ்சை யர்கள் வந்து பாடநனி
வைகினன் (௯௯)

---

(௯௮) வெம்கொடும் = மிகக்கொடிய; அங்கண் = அவ்விடத்தில்; ஐந்து பைந்தரு = ஐந்து பசியதருக்கள், அவை அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என்பனவாம்; வளந்தரும = வளப்பம் நல்கும்; துங்கமுற்ற = பரிசுத்தம் பொருந்திய; பொன்திகழ்ந்து = பொன் மயமாக; இலகு = விளங்குகிற

(௯௯) ஆடகப்பொன் = பொன்வகை நான்கினொன்று, அவை ஆடகம, கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்பனவாம்; மாடு = பெருமை; காடு அகத்தின் உறை = காட்டினிடத்து வசிக்கும; உற்று = பொருந்தி; அலர் கொள் = மலரையுடைய; அடி = கால்; பாடகம் = காலிலணியும் ஓ ராபரணம்; பரப்பு = பரவச்செய்கிற; மாடகம் = முறுக்காணி; திவவு = வீணையின்கட்டு; நனி வைகினன் = சிறந்து வசித்தான்.

அளவி லாதத்தின மங்கி ருநதுபுக ழுளகை மாந கரின் வளமெலாந, தளாவி லாதவ ணருநதி முநதிமிகு சாடியிற றயிரெயப் தேடியே, களவி னுலிடையர் பாடி யிற் றிருடு கண்ணன வண்ணமுற்று கன்றினை, விளவின் மீதெறிமு குநத னங்கணர விநதன் வாழுலக மேவி னன்　(க00)

கொண்டல் வண்ணமுடல கொண்ட கண்ணன ருள் கொண்டு வைகிடுவை குண்டமீ, தண்ட ரண்டி னாசெய் தொண்டு கொண்டதனி லானபோகமவை யாவுமுண், டெண்ட விர்நதகின மங்கிருநதுபி னிருந்த வதகினா பொருநதிடு, முண்ட கநதனி லிருநதி டுரு சதுர் முகன் றிருபபதவி முன்னி னன்.　(க0க)

ஓதி மக்கொடி யுயர்த்த நான்முக னுவநத லோ கமதி லுற்றகிற, கோதி றபபுரவு துய்தத பின்பு நகை கொண்டு முபபுர மெரிததிடு, மாதி நறகயிலை யுற்று

(க00) இடையாபாடி = இடைச்சேரி; வண்ணமுறு = அழகு பொருந்திய; கன்றினை = கன்றுக்குட்டியை; விள வின் = விளாமரத்தின்; அரவிந்த அம் தண்ணன் = தாமரை மலா போலும் அழகிய கணகளை யுடையவன்.

(க0க) கொண்டல் வண்ணமுடல் = மேகம்போன்ற நிற ததையுடைய தேகததை; கொண்ட = உடைய; அருள் கொண்டு = கருணையையுடையவனுய்; வைகிடு = வசிக் கிற; அண்டர் = தேவர்கள்; அணடினா = சமீபததிலி ருந்து; உண்டு = அனுபவிதது; எண் தவிாநத = கணக் கற்ற; சதுர்முகன் திருப் பதவி = சத்திய லோகம்; முன்னினுன் = போய்ச்சேர்ந்தான்.

ளத்தினி லரும்பெரும்பொருள் விருமபவே, யீதிவறகார
ன் மறுதுதநதருள வின்பமுறறினி திருநதனன ()

கைதவ வதகதினுயா வேடனீடுசிவ கஙகு லென்பது
ண ராமலே, செய்த வத்திலிது பெறற னனபரம சிவநி
சிப்பெருமை சிநதையிற்,பெய்த ருசசனை புரிநது கண்
டுயில பிரிநத ருநதுத றவிாநதுளா, ரெய்து தறகரிய
முத்தி வீடதனி லெயது வாாகளிலை யையமே (கOரு)

என்று சூதமுனி யோத மாதவர்கள் யாரு மேருவி லெ
டுத்தெயி, லன்று நீறுபட நூறு மாறுபுனை யரச னுககுரிய
விரசனி, யொன்று பாவவல விருட்க ருககனிக ரொாகுமெ
ன்பதை யுணாநதன, நனறு தேசிகநின னுலெனுமுடி துள
ககி நன்மொழிக ணல்கினா. (கOச)

---

(கOஉ) ஓதிமக்கொடி = அன்னககொடி; உவநத=விளஙகு
கிற; கோதில=குறறமறற; துப்புரவு=போகங்களை;
துய்த்தபின=அனுபவிதத பினபு, ஆதி=முதற் கட
வுள் (பரமேசுவரன்), அருமபெரும்பொருள் = அரு
மையும பெருமையும் பொருநதிய வீடுபேறு

(கOரு) கைதவத்தின்=வஞசகததில், நீடு சிவகங்குல்=உயா
ந்த சிவராததிரி; செயதவததில=செயத தவத்தினுல்.

(கOச) எயில்=கோட்டை; நீறுபட=சாம்பராக; நூறும்=
நொறுக்கிய, ஆறு=கஙகை; அரசன = இறைவனும்
பரமேசுவரன்; இரசனி ஒன்று = ஒரு சிவராத்திரி;
அருக்கன்=சூரியன்; நிகாவொகும்=சமானமாகும;
உணாநதனம் = தெரிநதோம், எனுமுடிதுளககி =
என்றுதலையையசைதது;நல்மொழி=உபசாரவசனம்.

---

## வசனம்.

நைமிசாரண்ய வாசிகளே! இச் சிவராத்திரியின் சரிதம் இன்னு மொன்றுரைப்பேன கேட்பீராக வெனச் சூதமா முனிவா சொல்லுவாராயினா

சந்திர சூரியா தவழ்ந்து செல்லுமாறு உயர்ந்து விளங்கு மதில்களையுடையதாயும், அளகாபுரியைவென்ற பல வளங்கள் பொருந்தியதாயும விளங்கும் சாகரபுரம என்னும் நகரினுக்கு அருகிலுள்ள மலையைசசார்ந்த காட்டில்; நீலமலையினையும மேகததினையும ஒத்த கருநிறம வாயந்த தேகமுடையவனுயும புலிபோன்ற பராக்கிரமமுடையவனுயும், தோலை ஆடையாக இடையிற்றரித்தவனுயும், இளமபிறைபோன்ற யானையினது கோடுகளையரிந்து குண்டலமாகக காதிற்றரித்தவனுயும், தேன், தினைமா, கனிகள், மலைநெறசோறு, மிருகங்களினூன் இவற்றையுணபவனுயும, அளவில்லாத சுற்றததினரையுடையவனுயும், அஙகுலனெனனும பெயரையுடைய ஒரு வேடனிருநதனன அவன்அழகுபொருநதிய அநதமலைககு அருகிலுள்ள ஓா புலததில; தழைகளை ஆடையாகவும, குன்றிமணி மாலையை ஆபரணமாகவும, தரிததுவாழும் வேடாகுலத்தில் மின்னற்கொடிபோல விளஙகும, அழகிய இடையினையுடைய ஓர் கன்னிகையை மணமபுரிநது அன்றிலும சேவலும் போலக் கூடியிருநதனன அநத வேடஸதிரீயானவள் சிங்ககக்குட்டிபோல இரணடு மகவைப்பெற்றனள் அங்குலன் அப்புதல்வர்கட்கு நெற்றியிற் புலியின நகததாற்செய்த சுட்டிகளையும் இடுப்பில் பலகறை மாலைகளையுநதரிதது உளமகிழ்நது மழலை கேட்டிருநதனன். இப்படியிருககையில ஒருநாள் அவ்வஙகுலன் மரவுரியையும் மான்றோற் பாதரட்சையையுந தரித்து, குடுமியைக் கயிறறினுலிழுததுக் கட்டி அம்புப்பெட்டியை முதுகிலும நீண்ட விலலைத் தோளிலுந்தரித்து, கத்தியைக் கையிற் பிடித்துக கொண்டு நாய்க்கூட்டங்களா சூழ்நதுவர வேட்டைககுப் புறப்பட்டனன்

இலவு, தேகku, அகில், இலந்தை; வேல், எட்டி, புன்னை, வில்வம், கொன்றை, குரவு, அசோகு, பலா, பாதிரி, வன்னி, சண்பகம், அழிஞ்சி, பாலை, வேங்கை, சந்தனம், விளா, வாகை, அரசு, வேம்பு, கருங்காலி, கடம்பு, மரா, மகிழ், வாழை, குங்குமம், நாகை முதலிய விருட்சங்களடர்ந்து சூரியனது கிரணங்களும் காற்றுஞ்செல்லாதபடி இருண்மயமாயிருக்கும் ஓர் வனம் அங்கிருந்தது. அவ்வனத்தில் பட்சிசாதிகள் மரங்களின்மீது நிறைந்து வசிக்கும்; அன்றியும் அங்கு மிருகக் கூட்டங்களுலாவித்திரியும் ஓர்பால்; செந்நாய்கள் அம்பு செல்வதுபோல் அதிவேகமாய்ச் சென்று முயற்குட்டிகளைத் துரத்தும் ஓர்பால்; சிங்கங்கள் யானைகளின் மத்தகத்தைப் பிளந்து மருப்புகளைப்பிடுங்கிக்கடிக்க, அம்மருப்புகளி லிருந்து சிதறிய முத்துக்கள் அந்த யானைகளின் இரத்தத்திற் புரண்டு மாதளம்பழ விரைபோல விளங்கும் ஓர்பால்; நீண்ட துதிக்கையையுடைய யானைகளானது தத்தங்கன்றுகள் தொடர்ந்துவரச்சென்று நதிகளிற்படிந்து பிளிறுமோர்பால்; இரும்பினாற் செய்ததுபோலும் நீண்ட கொம்புகளையுடைய மான் வர்க்கங்களும்,வரையாடுகளும்,பன்றிகளும்,புலிகள் உறுமும் பேரொலி கேட்டுப்பயந்து ஓடிப்பதுங்கும் ஓர்பால்; பண்டைக்காலந்தொடங்கிப் புறச்சமயிகளாலும் குறிஞ்சிக் கடவுளெனப்போற்றி வணங்கப்படும் குமாரக் கடவுளுக்குரிய மலைகளின்மீது வைத்த பலலாயிரஞ்சுடர் விளக்கைப் போற் பாம்புகளின் மணிகள் கிடந்து பிரகாசிக்கு மோர் பால்

இத்தன்மையாக விளங்கும் அவ்வனத்தில் மேற்சொல்லிய அங்குலன் என்னும் வேடன் சென்று பட்சிகள் படுக்கும் கண்ணிகளைக்குத்தியும்,வலைகளைக்கட்டியும், மிருகங்களைப்பிடிக்கும் சூத்திரயந்திரங்களைப் பூமியிற்புதைத்தும், மரத்தினடியிற்கட்டியும் வைத்துவிட்டு நாய்களை ஏவியும் அம்புகளை விடுத்தும் குறியதடிகளை யெறிந்தும் கவண்கற்களைவீசி யெறிந்தும் அவ்வனத்திலுள்ள மிருகங்களையும் பட்சிகளையும் மருட்டித்துரத்தினன். அம்மிருகங்களும் பட்சிகளும் அவன் வைத்த

யந்திரங்களிலும் வலைகளிலும் ஒன்றேனும அகப்படாது அகன்று ஓடிப்போயின. பின்னர் அங்குலன் ஒரு புதரிற் சென்று மறைநது மிருகங்கள் போலக் கத்தியும பட்சிகள் போலக கூவியும் அழைததனன்; பின்னா மானின்றோலைப் போர்ததிக்கொண்டு மிருகஙகள் சென்ற அடிசசுவடுபெற்றிப் போய்த்தேடினன்; அன்றியும் சத்தஞ்செயயாது அங்குள்ள வளைகளிற கையை விட்டு உடும்புமுதலிய ஜநதுக்களுள்ள னவோ வெனத்தேடினன். இஙஙனம பலதந்திரஙகளைச் செய தும், ஓாவிலஙகேனும ஓர் பட்சியேனும அகப்படவில்லை அத ளுல அவன் மிருநத கவலையுறறு வருநதினன இஙஙனம் வருந தும் அஙகுலன், வயிறறிற பசிததீயெழுநது வருததுவதாலும, பட்சிகள் மிருகஙகள அகப்படவில்லையே யென்னுங் கவலையி ளுலும் தேகமிளைததுக களைப்புறறிருநதனன் இஙஙனமிருக கையில் சூரியன மேற்றிசைக்கடலை யடைநது மறைய, அவ் வங்குலனது தேகததையும அவனது தீமையே குடிகொணட உள்ளததையும் போனற கருநிறமவாயநத இருளானது யாண் டுஞ் சூழநதது பினனா அஙகுலன் சற்று இளைப்பாறி நாம் வெறுஙகையோடு குடிசைககுப்போனுல மைநதரும மனைவி யும பசியால வருநதி மெலிவரானதால அதற்கு எனசெய்வோ மெனக் கவலையுற்று யோசித்து இவவிரவில தண்ணீா குடிப் பதற்குக குளஙகள் தேடிவரும மிருகஙகளை அமபை எய்து கொன்று அவற்றின் மாமிசஙகளைக கொண்டு போவதே உசிதமெனத தீாமானித்துக கவலையகற்றி அருகிலுள்ள ஒரு குளக்கரையை யடைந்து மான் மரை முதலிய மிருகஙகளின் வருகையை யெதிா பார்த்திருநதனன

இங்ஙனமிருக்கையில் அவன் புலி சிங்கமுதலிய துஷ்ட மிருகஙகள் வரின், அவை நம்மைக்கொன்றுவிடு மாகையால் நாம் இங்குள்ள வில்வமாத்தின்மீது ஏறி மறைந்திருந்து அம் பையெய்து தநதிரமாய் அவைகளைக் கொல்வோமென நினைத்து அம்மாத்தின்மீது ஏறி ஓர் கிளையில்உட்கார்ந்தனன். பின்னர் அவனிருக்கும் வில்வமரக்கிளை தழைத்துத் தாழ்ந்து

இருந்ததால் அத்தழைகள் தாம்விடுக்கும் அம்பைததடுக்குமெ ன்றுன்னி அங்கிருந்தபடியே அத்தழைகளைக கத்தியாலரிந்து கீழேயெறிந்து முன்போல மிருகங்களின் வருகையை எதிா பார்த்திருந்தனன் அவனது நல்லூழினவலியால் அப்பொழு தும மிருகங்கள வராதிருந்தன அதனுல அவன் மிகக கவலை யுற்றிருந்தனன. பினனா இரவின்முறபொழுது அகல நித்தி ரையானது அவனிடம் நெருங்கிற்று அதனையறிந்த அங்கு லன் தனனை நித்திரை பற்றின கீழேவிழுந்து இறந்து விடு வோமாதலால யாதேனும ஓா வேலைசெய்து அந நித்திரை யை யகற்றுவதே தகுதியாமெனத தீாமானித்து அக்கிளையி லுள்ள இலைகளை ஒவவொன்ருகக கையினுற் பறித்துக கீழே யெறிதலாகிய வேலையைசசெய்து நித்திரை தனனை நெருங காதபடி இராப்பொழுதைப் போககுவானுயினன அவன முற்பிறவிகளிற செய்த புண்ணியமே திரண்டு ஒருவடிவா யெழுந்ததுபோல, முன் ஓா இருடியால பிரதிஷ்டைசெயது வேதாகமவிதிப்படிப் பூசிககப்பட்ட சிவலிங்கமொன்று அவ் விலவமரத்தின அடியினுககருகிலிருந்தது அன்றியும அனறு சிவராத்திரிகூடிய உத்தமோத்தம சுபதினமாகவுமிருந்தது. அங்குலன முனனர்க கத்தியாலரிந்தெறிந்த தழைகளும பின னர் ஒவ்வொனருகக கையினுற் பறித்தெறிந்த தழைகளும் அங்குள்ள சிவலிங்கத்தின முடிமீது வீழ்ந்தன அங்குலன செய்தி இஙஙனமிருககக குடிசையிலிருந்த அவனது மனைவி யானவள் வேட்டைக்குப்போன நமமுயிாததுணைக கணவன மாலைப்பொழுதிலேயே வருகிறது வழககமாயிருகக இன்று பாதி யிரவாகியும அவன வராதது யாது காரணமோவென மனத்தெண்ணிக கண் துயிலாது வருந்துவாளாயினள். நங கொழுநன் தனித்துப்போனதால, தறுகணயானைகள் தடிந்து கொனறனவோ, காடிகள் புலிகள் கவர்ந்துகொன்றனவோ, சிஙகம்வந்து செகுததுத தின்றதோ, வளையுறும்பாம்பு வல் விடஞ்சிந்தும துளையெயிற்றினுற் றீண்டிக் கொன்றதோ, அந்தோ அந்தோ பர்த்தாவைபபிரிந்த பாவையாயினேன கண வனைப்பிரிந்த காரிகையாயினேன் புருஷனைப்பிரிந்த பூவை

யாயினேன என்செய்கேன் என்செயகேன் ஓ ஆதமநாத' எங குறருய எஙகுற்ருய் கண்களே யொதத நின்புதலவர் பசியான் மெலிநது வாடுகினறனரே அவர்கட்கு, உண்ணுமாமிசம் ஊட்டவந்திலே, வருநதும அடியாளை வாட்டம நோககிலே, அசசோ அசசோ என்செயகேன் என்று புலம்பிக் கண்ணீா தாரை தாரையாக வுகுததுக கதறியழுவாள் சோாந்துவிழுவாள் எழுவாள் வெளியிலவருவாள் குடிசையுட்புகுவாளவாயிலவநதவாறு பிதற்றுவாள இவவாறு துனபததுழனறு பொழுதுபோககியிருநதனள இஙஙனமிருககையில, அஙகுலன் புரிநத அளவிலலாப்பாவமாகிய கறுதத இருளேயகற்றியதால் கதிரவனேயொதத அவவிரவு நீஙக, ஒறறையாழியநதேரினமீது ஆரோகணிததுச் சூரியன கிழ்ததிசை யுதையகிரியிலெழுநதனன். சிவராத்திரிதினததில, பனியால நனி மூழ்கி ஊணும உறக்கமுமொழிததுப் பரமேசுவரன முடிமீது பொழுதுவிடிகிறவரைககும எராளமான விலவததளஙகளேப் பெயததால், கொடிய வினேகளே யொழித்த, அருநதபசிகளேயொதத அஙகுலன் யாதொரு பட்சியேனும மிருகமேனும் அஙகு வாராமையால பொழுதுவிடிநதவுடன் விலவமரததினினறிறஙகித் தனகுடிசைககுச சென்றனன். இராமுழுதும் ஆற்ருத்துயாக் கடலிலமுநதிய அவவேடசசி பொழுதுவிடிந்தவுடன் தன் கணவனேத தேடிககொண்டு காட்டிறகுச சென்று எதிரில் வரும் அஙகுலனேக கண்டு நடநதவைகளேக் கேட்டு உவகையோடு அவனேத தழுவி மகிழ்நதனள் உடனே அஙகுலனும் அவன் மனேவியும அஙகிருநது புறப்பட்டுத தனது குடிசையை யடைநதனா பின்னா அவ்வஙகுலன் தேன், தினே, புல்லரிசி, மாமிசம முதலிய உணவுகளே நாள்தோறும் சம்பாதிததுக் கொணாநது மனேவி மைநதர்கட்குக கொடுததுத் தானு|முண்டு அமமனேவியோடு கூடி நெடுஙகாலம் வாழ்நது, நரைமுதிரப்பறகள் கழல விலலேப்போற் றேகம வளேயத தேக பலமொடுஙகப் பெற்றனன் இஙஙனஞ் சினனுளிருந்து அவன் பெரும் பிணியாற் பிணிக்கப்பட்டு இறநதனன். உடனே எம

தூதர்கள் சூலம் வாளி முதலிய ஆயுதபாணிகளாய்வந்து அங்குலனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு தமது தலைவனிடம் போகுமாறு அங்கு நின்றும புறப்பட்டனர். இங்ஙன மிருக்கக் கைலாயபதியானவர் நந்தி தேவரையழைத்துச் சாகரபுரத்திற்கருகிலுள்ள காட்டிலிருந்த அங்குலனென்னும் வேடனை எமதூதர்கள் கட்டிக் கொண்டுபோகின்றனராதலின் உடனே அங்கு நமது கணங்களை யனுப்பி அத்தூதர்களை விலக்கி அவ்வங்குலனை விமானத்தேற்றி ஓா நொடிப்பொழுதில் இங்கு கொண்டு வரும்படி செய்வாயாகவென்று ஆஞ்ஞாபித்தனர். நந்தி தேவர் அங்ஙனமே அங்குள்ள சிவகணங்களுக்குக்கட்டளையிட அக்கணங்கள் ஓா இமைப் பொழுதில் அங்குசென்று பலாத்காரமாய் எமது தூதரை விலக்கி, அங்குலனது புயம் முறியும்படி அத்தூதர் கட்டிய கட்டுகளை அறுத்தெறிந்து உபசரித்து அவனைத் தெய்வ விமானத்திலேற்றினர் அப்பொழுது இயமதூதர், கணங்களை நோக்கி இவ்வேடனை எமதுதலைவன் கட்டளைப்படி யாங்கள் கட்டிக்கொண்டு போவதைத்தடுத்து அவனை உபசரிக்கும நீவிா யாவா கட்டளையிறு லிங்ஙனம் புரிகின்றீரென்று கேட்க, சிவகணங்கள எமதூதரைப் பார்த்து தூதர்களே! முன்னர் உங்கள் தலைவன் மார்பினிடத்து வுதைத்து வீழ்த்தி யிருத்தியவனும் எங்கள்தலைவனுமாகிய கைலாயபதியின் கட்டளைப்படி செய்கின்றோமாதலின் நீவிா செல்வீராகவென்றன கடுகளவும் புணணியஞ்செய்யாத பாவியாகிய இவனை எம்முலகத்தினுக்குக் கொண்டுபோவதே நியமமாகையால் உங்களுடன் அனுப்போமென்று அத்தூதர்கள் எதிர்க்க, சிவகணங்கள் தத்தங் கைகளிலிருந்த ஆயுதங்களால் உதிரவெள்ளம் பெருகக்கெடுத்தோடுமாறு அத்தூதர்களை யடித்தன. அத்தூதர்கள் கணங்களை வெல்லும் வலிமை குன்றி ஓடிவிட்டனர். பின்னர்த் தேவர்கள் புஷ்பமாரி பொழியக் கந்தருவர் கீதம்பாடிப் பலவாத்தியங்கள் முழக்க, கணங்கள் அங்குலனை விமானத்தோடு கொண்டுபோய்க் கைலையி லிறக்கிப்பரமேசுவரன் முன் விட்டனர். கைலாயபதியானவர்

அங்குலனைப்பார்த்து நீ எமது கணங்களோடு கூடி இங்கு வாழக் கடவாயெனத் திருவாய் மலர்ந்தருள, அங்ஙனமே அங்குலன் சிவகணத் தன்மைபெற்று அங்கிருக்குங் கணங்களோடு கூடி இனிது வசித்தனன்.

இது நிற்க, வன்மை குறைந்து கணங்களுக்குத் தோற்றோடிய கால தூதர்கள் தங்கள் தலைவனாகிய இயமதருமராஜனிடஞ் சென்று நமஸ்கரித்து; கிஞ்சித்தேனும் புண்ணியஞ்செய்யாத பாதகனும் வேடனை, தங்கள் கட்டளைப்படி யாங்கள் பாசக்கயிற்றினால் கட்டிக்கொண்டு வரும்பொழுது சிவகணங்கள் வந்து எங்களை கைகா லொடியும்படி அடித்து வருத்தித் துரத்திவிட்டு அவனைத் தெய்வவிமானத்திலேற்றிக் கயிலைக்குக்கொண்டு போயின என்று கூறினார் அதனைக் கேட்ட காலன் கோப மதிகரித்தவனாய்ப் பலலைக்கடித்துச் சினநகைசெய்து எழுந்து சித்திரகுப்தனும் சில தூதுவர்களும் சூழ்ந்துவரத் தன் வாகனமாகிய பகட்டின்மீதேறிச் சென்று கயிலையை யடைந்தனன்.

நெடுநாள் அருந்தவம் புரிந்து வினைகளை யொழித்த ஞானிகளது உள்ளம்போற் களங்கமற்று விளங்கும் கயிலைவரையின் செம்பொற்றிருக்கோயிலிலே பிரமமாதிதேவர்கள் நந்திதேவரால் விலக்கப்பட்டுச் சந்நிதியினிருபுறமுங் கைகுவித்து நிற்ப; கணகளிற்றீட்டிய அஞ்சனமாகிய களங்கமும் இனிய குளிர்மொழியாகிய அமுதமும் விளங்கும் உமாதேவியாரது முகமாகிய பூரணச்சந்திரனுக்குத்தோற்று வெட்கியும், பாம்பினுக்குப் பயந்தும் நாளுக்கு நாள் உடல் குறைந்து கலைவளராமல் கொன்றையும் வில்வமுமேவிய சடைக்காட்டினிடத்து அலைந்திக கயலிலே இளமதி கிடப்ப; சடையினிடத்திருந்து அரவஞ் சீறுவதாலும் இடையிற்றரித்த புலித்தோலுடை அடிக்கடி அசைவதாலும் மானானது மருண்டு உறங்குதல் தவிர்த்து இறங்கியோடுதற்குக் குதித்தெழுந்து சமயம் நோக்கி இடக்கரத்திருப்ப; பெரிய பவளமலையிலுண்டாகிய

அருவிபோல முப்புரிநூல் மார்பினிடத்து விளங்க; அடியவர் பால் கிருபாநோக்கம் பரப்பிப் பொற்சிம்மாசனத்தில் உமா நாதர் உறைந்திருந்தனர்.

இது நிற்க, தென்னாட்டிலிருந்து அக்கயிலைக்கு வந்த அந்தகன் அந்தத் திருக்கோயிலின் கீழ்த்திசைக் கோபுர வாயிலையடைந்து நந்தியம் பெருமான்பால் விடைபெற்று உள்ளேசென்று சங்கராருறையுந திருச்சபை யூடுபோய்த் தோத்திரித்து வணங்கி வாய்புதைத் தொதுங்கி நின்று பாசம் முத்திரை முதலியவைகளைத திருமுன்னே வைத்து அடியேனை இவ்வதிகாரத்தினின்றும் நீக்கி வேறு யாரையாவது நியமனஞ் செய்யும்படித் திருவுள்ளம் பற்றுமாறு பிரார்த்திக் கின்றேனென்றனன் அதனைக்கேட்ட பரமபதியானவர் நின் மனத்தின்கணுற்ற குறையாதோ அதனைச் சொல்வாயாக வென்று கேட்க அந்தகன் புண்ணியமென்பதைக் காதிலுங் கேட்கப்பெறாது, சதாகாலமும கண்ணிகளூன்றியும் அம்பை விடுத்தும் பட்சிகளையும் மிருகங்களையுங் கொன்று தின்று தனது வாழ்நாட்களை யொழித்திறந்த அங்குலனென்னும் வேடனை எனது தூதர்கள் கட்டிக்கொண்டு வருங்கால் நினது கணங்கள்வந்து அத்தூதர்களை தலை மூளைகள் சிதறும்படி அடித்துத் துரத்திவிட்டு அவ்வேடனைக் கொணர்ந்து நினது பதத்தெய்து வித்தன கணக்கில்லாத பாவங்களைச் செய்தவர் நினது அரியபதமேவில அடியேன் யாரைத்தண்டஞ்செய்வது என்றனன். அதனைக்கேட்ட இறைவர் அவ்வேடன் வேட்டைக்குப்போன காலத்து நமது இரவு கூடிய சுபதினத்திலே ஊண் உறக்கமொழித்து யாமுறையுஞ் சிவலிங்கத்திநுக்கு இரவுமுழுதும் வில்வத்தளங்களா லர்ச்சித்ததால் அவன் செய்த பாவமாகிய சமுத்திரத்தைத் தூர்த்திட்டனன். அதனை நீ யுணர்ந்திலைபோலும் என்று கூற, அந்தகன் சுவாமி! புலி சிங்கமுதலியவைகட்குப் பயந்து மரத்தின் மீதேறி நித்திரையகற்ற வில்வத்தழைகளைப் பறித்தெறிந்தும் தின்பதற்கு ஊன்கிட்டாமல் பட்டினியிருந்தும் பொழுது

போக்கினனேயன்றி இன்று சுபதினமென்றும இங்கு சிவ லிங்க மிருக்கிறதென்றும் அறிந்து பக்தியோடு செய்தானி ல்லையானதால், அவை சிவார்ச்சனை செய்தலும் விரதமிழைத் தலுமாதல் யாங்ஙனமென்று வினவினன். இதனைக்கேட்ட பரமபதி அவன் அறியாது செய்ததால் நமது கணத்து ஒரு வனுயினன் அறிந்து செய்திருந்தால நமது சாயுச்சிய பதவி யடைந்திருப்பன். ஆகையால அந்தகா! மனக்கவலையொழித்து தூதர்களோடு நினநகரெய்தி முன்போல் வாழக்கடவாயெ ன்ன, அதனைக்கேட்ட அந்தகன் வைதத முத்திரை முதலிய வைகளை யெடுத்துககொண்டு இறைவர்பால் விடை பெற் றுத தூதரோடு தெனபுலத்தெயதி முன்போலிருநதனன்.

அஙகுலன் ஆங்குள்ள கணங்களுககுத் தலைமையெய்தி கயிலை நாதன கிருபையைப்பெற்று நெடுங்காலம் அக்கயிலை யில் வசித்துப் பின்பு வைகுண்டம் பிரமமலோகம் இந்திர லோகம் அளகாபுரி முதலிய இடங்கட்குச சென்று ஆங்காங் குள்ள போகங்களையனுபவிதது மீட்டுங கயிலையையடைந்து பரமபதியைப்பணிநது போற்றி என்றும் அழியாத சாயுச்சிய பதவிதநதருளவேண்டுமெனப்பிரார்ததித்தனன் பரமகருணு நிதியாகிய இறைவா அஙஙனமே திருவருள் பாலிகக அங குலன் அப் பதியினேடு இரண்டறக் கலத்தலென்னும் சுத் தாத்துவித முத்தியடைநது இன்புற்றிருநதனன் என்று சூத மாமுனிவர் சொல்ல நைமிசாரண்ணிய வாசிகள் கேட்டு உள மகிழ்நதனா.

அங்குலச் சருக்கம் முற்றிற்று

---

# சவுமினிச் சருக்கம்.

**வா**தரா யணனென் றோது மறைதெரி முனிவர் கோமான், பாததா மரைக ளுன்னிப் பரவசத் தோடும் போற்றிச், சீதநாண் மதியஞ் சூடுஞ் சிவநிசிப் பெருமை யின்னுஞ், சூதமா முனிவன் மற்றை முனிவரா தமக்குச் சொல்வான். (௧)

தோடுறு கமலத் தோடு துளிமதுக் குவளை யாம்பற், காடுறு கமல வாவிக் கயலினங் குதித்தங் காடக், கோடுறு தவளக் கோடு குமிறுந்தண் பணைசூழ்ந் தம்பொன், னாடுறு மமரர் தாமு நாடுங்கே கயநன் னாடு ()

அரும்புறு கமலச் சூழி யதனினின் றெழுந்து வாளை, சுரும்புறு மலர்த்தண் சோலைச் சூதநற் கனிகள் சிந்துந், கரும்புறு வேலி சூழ்ந்த கழனியிற் கதிரச்செஞ் சாலி, விரும்புறு முத்து நத்தி னித்திலம் விளங்கு மெங்கும் (௩)

---

(௧) வாதராயணன் = வியாசர், கோமான் = தலைவர், நாண் மதியம் = ஒருகலைச் சந்திரன்.

(௨) தோடுறு = இதழ்பொருந்திய; கமலத்தோடு = தாமரையுடனே; மதுத்துளி = தேனசொட்டுகிற; ஆம்பல் காடுறு = அல்லிகள் மிகுந்த, கமலம் = ஜலம்; கோடுறு = கரைகளிலுள்ள; தவளக்கோடு = வெள்ளிய சங்கம்; குமிறும் = ஒலிக்கின்ற, பணை = வயல்; அம்பொன் நாடு = அழகிய தெய்வலோகம், நாடும் = விரும்புகிற.

(௩) கமலச்சூழி = தாமரைத் தடாகம்; சுரும்பு உறு = வண்டுகள் பொருந்திய; சூத நற்கனி = நல்ல மாங்கனி; விரும்புறுகதிரச் செஞ்சாலி முத்து = விரும்பத்தக்க கதிர்களையுடைய செந்நெற் பயிரிலுண்டாகும் முத்துக்களும்; நத்தின் = சங்கினுடைய; நித்திலம் = முத்துக்களும்; **முத்துப் பிறக்குமிடம் இருபதிலொன்று செந்நெல்.**

புன்றலைக் கரியசெங்கட் புரிமருப பெருமை வா யான், மன்றலைக கமழும வாவி மலர்பல மேய்ந்து வாவித், துன்றலைப புனல தாாநது சுரந்துறச் சொரி யுந தீமபால, கனறலைத் துண்ணவூட்டிக் காஞசிமா நிழலிற றுஞசும (௪)

நிறமபயின் முநநூல பெறறோர் நீதிமா மறை நூல கறறோர், திறமபயி லரசா வாசச் சிரகத தாமர் கொங்கைப, பறமபயி னெடுங்கட் செவ்வாய்ப பார்ம மகள் புதலவா முன்று, யறமபயில குடிக ேன்று மந தநாட் டகததி லுளளான (௫)

வெநதழல வேளவி செயயும விபபிர னொருவன முன்றுட, டநதருண மடபபொற பாவை சவுமினி யெனனும பேரா, ளநதர வானில வாழு மரமபையை யுமையாண் மாான, கநதமா ளைநது தண்பூங கணைக் கலைக காக நிறபாள (௬)

---

புனதலை=சிறிய மயிருள்ள தலையும; கரிய=கருநிறமும்; செஙகண=சிவநதகணணும, புரிமருப்பு = முறுககிய கொமபும் பொருநதிய, வாயால் = வாயினால், மன்ற லைககமழும=வாசனையை வீசும, வாவி=குளததின்; துனற அலை = அலைபொருநதிய, ஆாநது = குடி தது, காஞசி = ஓமரம, மா=விசாலிதத, துஞசும்= தூஙகும்.

நிறம=மாாபில்; பயில=பொருநதிய; முநநூல்=மூன்று சாடு, அஃதாவது பூணூல், திறமபயில=வல்லமைபொ ருநதிய; சிரகததாமா=வணிகா, கொஙகைப்பறம்பு = தனஙகளாகிய மலைகள், அயிலநெடுஙகண = வேலபோ ன்று நீணட கண; முன்றய = முதலாக; துன்றும்= நிறைநத.

விப்பிரன் = பிராமணன்; தந்தருள் = பெற்ற; மடப் பொன் பாவை = அழகிய பொன்னுற்செயத பதுமை போன்ற பெண, உவமையாகுபெயா, அல்லது மட மைததன்மை வாய்நத அழகிய பெண எனவுமாம்; அந தரவான் = ஆகாயததிலுள்ள விண்ணுலகம

வளமிகு செல்வந் தன்னில் வளர்ந்துவற் சரமோ ரேழிற், றளவமென் மூரற் பேதைத் தையலா ரோடு கூடி, யுளமகிழ் சிற்றில கோலி யுறுகழங் கூச லாடி, யிளமயி லனையாண் மங்கைப் பருவம்வந் தெய்து கின்றாள். (எ)

வேறு.

தடங்கி டந்திடுந் தாமரை யரும்பெனத் தடித்து, படங்கி டந்தபாம் பேந்துபார பகர்ந்திடத் தரள, வடங்கி டந்திப மருப்பிணை மருட்டிமா மணிப்பொற, குடங்கி டந்தெனக் குலவிய கொம்மைவெம் முலையாள (அ)

வடித்த நெட்டிலை வேலொடு மாவடு வடிவாட், டுடித்த செங்கயல் சுருமபுவேள் கரும்பினிற தொடுக் குங், கடிக்க ருங்குவ ளைகடமைக கடுத்துநீள் வளைக,, கொடிக்கி ணைகுழைக குழைகளிற குதிக்குநீள் விழியாள் (கூ)

(எ) வற்சரம்=வயது; மென்தவளம=மிருதுவாகிய முல்லை யரும்பையொத்த; மூரல்=பல்; பேதைத்தையலா= பேதைப்பருவ முடைய பெண்கள்; சிற்றில=பிள்ளைகள் விளையாட்டிற் கட்டும் மணல் வீடு; கழங்கு=அம்மனை; ஊசல்=ஊஞ்சல்; மஙகைப்பருவம = ஒன்பது வயது; எய்துகின்றாள=அடைபவளானாள்.

(அ) தடம் = தடாகம்; படம் கிடந்த = படத்தையுடைய; பாம்பு = ஆதிசேடன்; பார பகர்ந்திட = உலகத்தை விலைமதிக்க, அல்லது உலகத்துள்ளாரபுகழ.

(கூ) துடித்த = துள்ளுகிற; செங்கயல் = அழகிய கெண்டைமீன்; கடிக் கருங்குவளை = வாசனைபொருந்திய நீலோற்பலம்; கடுத்து = ஒத்து; கொடிக்கு இணை = கொடியையொத்த; குழை = குண்டலஙகளையணிந்த; குழைகளில் = காதுகளில்; குதிக்கும் = தாவிச்செல்லும்.

கருகு கங்குல்பைங் களங்கனி முழங்கிடுங் கடனீர், பருகு மஙகுனற் பதிகமொத் தகிபரி மளங்கண், மருவி நெய்த்துநீண் டளிக்குலம் விருநதுண மலர்நத, முருக லாத்தொடை சூட்டியே முடிக்குமொய் குழலாள். (கO)

கயிர வங்கவிர தொண்டைமென் கனிகடற் பவளஞ், செயிர றுஞ்செழுஞ் செங்கிடை கொங்கிடையிலவம், பயில கொழுநதுண ரனைத்தையும பழிதது மைக் கடைகக, ணயில் விடங்கொளு மவாககழு துதவுசெவ் விதழாள் (கக)

சலநத ரும்பொலந தாமரை மலர்நிகர் முகததாள், கலநத ருநதட மாரபுடைக காளைய ரெனுமா, வலநத ருஙகட கரிகளை வணககுமங் குசமாய், நலநத ருநதிலந திகழகுமிழ் நணுநா சியினாள். (கஉ)

---

(கO) கருகு கஙகுல்=கறுதத இரவு; பைஙகளஙகனி = அழகிய கிளாப்பழம, பதிகம=கொடிப்பாசி, நெய்த்து= நெய்ப்பசை யுற்று; முருகு=தேன்; மொய்=அடர்நத

(கக) கயிரவம் = செவ்வல்லி; கவிர்=முள் முருக்கிதழ்; தொணடைக்கனி = கொவ்வைப்பழம்; செயிரறும = குற்றமற்ற; செழுஞ்செங்கிடை = செழிதத செந்நெட்டி; கொஙகு = வாசனையை; இடைபயில் = தன்னிடத்துப்பொருததிய; இலவு=முள்ளிலவு; பயில்=உள்ள; கொழுந் துணர் = அழகிய பூ; கண்அயில் விடம் = கண்ணுகிய வேலினது விஷம்.

(கஉ) சலந்தரும் = நீரிலுற்பவிக்கும்; பொலம் = அழகிய; கலம் தரும்=ஆபரணம்பூண்ட; மாவலந்தரும்=மிகுந்த வெறறியையுடைய; திலம் = எள்ளின் பூவும்; நலந் தரும்=அழகுள்ள; குமிழ்=குமிழம்பூவும்; நாணும் = வெட்கப்படும்.

தேன லந்தரு சருக்கரை செழுங்கனி கரும்பு, பான றும்பொழிற பசுங்கிளி மொழிகளைப் பழித்துப், பேன வெண்டிரை கடைந்துமுன் றுளவணி பெரு மான், வான வாக்கருண மருந்தெனு மதுரமென் மொழியாள். (கங)

பாரின் மேலவளா மரங்களிற் படர்ந்தமென் கொ டியைக், காரின மேலெழு மினனை நண் ணுஎவினைக் கடிந்திட், டேரி ஞலுயா மதனர சிருந்திடு மலகுற, றே ரின்மீதவ னெழுந்துநின றெத்தசிற றிடையாள (கச)

ஊற றிருந்தமு தொழுகிடு மல்குலுக் குலகின, மேற்றிருந்தா சிலையொடு தொடுகடல விடுதோ, காற றிருமபசிக் கருந்திடுங கடசெவிப படமுந, தோறறி ருந்தவென் றுலதற குவமையென சொலவாம (கரு)

மஞசஞ சீறர வெனத்துயின மாயவன மணக்கு, நஞ்சஞ சீர்விழித திருமக ளுடொறு நயககுங், கஞ சந தோறறிடிற கழியனப பெடைநடை கறகு, மஞ செஞ் சீறடிக குவமைமற றியாதெடுத தறைவாம (கசு)

---

(கங) நலந்தரும் = இன்பந்தரும்; பேனம் = நுரை; வெண திரை = பாற்கடல், சினையாகு பெயர்.

(கச) காரின்=மேகத்தின்; ஏரிஞல=அழகினல்; நின்று= நின்றதை.

(கரு) திருந்து அரசிலை=அழகிய அரசிலை; இரும்பசிக்கு = மிகுந்த பசிககு.

(கசு) சீறுஅரவு = சீறுகின்ற பாமபு; மஞ்சமென = சயன மாக; நஞ்சம=விஷத்தையொத்த; சீர்விழி = அழகிய கண்; நயக்கும் = விரும்புகிற; கழி = சிற்றுறு; அம் செம் சீறடி=அழகிய சிவந்த சிற்றடி.

இனைய பேரெழில் வாய்ந்திடு மிளங்கொடி தனைக் கண், டனைய தநதைதாய் மிகமகிழ்ந தகமதின் முந நூல, புனையும பூசுர ஜெருவனுக கிசைநதுளம் பொருந்தி, மனையி னுன்மறைச சடங்குடன் வதுவைசெய் தளிததார (கள)

நாம னுஙகலைப பனவனு னளிமதி முகத்துப், பூம னுஙகுழற பூவையும புரிவொடு வைகிச, சோம னும புக வுரோணியுந துவசமீ னுயாதத, காம னுந துணைத் தேவியு மெனககளித திடுநாள (கஅ)

புலநது றநதுவெம பிணிகளாற புணாநதுடம் பகர னு, நிலைநது றநதுட லிறநதிட னனமதி நீங்கிக, குலநது றநதிடா நீதியைக குறிததவள் களததிற, கலநது றந துளாள் கலஙகினள் கைமையுற றிருநதாள் (கக)

---

(கள) அனைய = அந்த; அகமதில் மிகமகிழ்ந்து = மனதில் மிகக சநதோஷித்து; மனையில் = தனது வீட்டினில்; மறைசசடங்கு=வேத விதிப்படி செய்யும் விவாக கன்மம்.

(கஅ) நாமன்னும் = நாவிற் பொருந்திய; கலைப் பனவனும்= வேதமோதும பிராமணனும்; பூ மன்னும் (இடைக் குறை)=மலர்விளஙகும்;குழல்=கூநதல; புரிவோடு= விருப்பத்தோடு; வைகி=சோநது; துவசமீன்=மீனக் கொடி; உயாதத=கட்டிய.

(கக) புலந்துறந்து=அறிவு கெட்டு; உடலிறந்திட=சரீரத் தை நீத்து (பிணமாக); நன்மதி நீங்கி = நற்புத்தி கெட்டு; குலந்துறந்திடாநீதி = நீக்கப்படாத சாதியாசார முறைமை; குறித்து = கருதி; களம் = கழுத்து; கலம் = மாஙகல்யம்; துறந்துளாள் = நீங்கப்பெற்ற வளாய்; கைமை=விதவைத் தன்மை.

வேறு.

வனவரிக் குயிலு மன்றிலும் வானில் வருநில வெழுமதிக் கொழுந்தும், தினநிரை புரக்கு மாயர்வேய்ங் குழலுந் திறம்பெறக் கறங்கு சேமணியு, மனலெனக் கனலுங் காமவெந் தீயை யனிலமொத் தனுதின மூட்டக, கனதனக் கிரிகள் பரலேபூத் தணையிற் கண்படை பொருந்திலள் கலங்கி (உ0)

கோடுவாய் கூடக் கலேவளர் திங்கட் குடைமதன் படைபடும் பசும்புண், ணூடுநீ டழற்கோ லுழைந்தெனத் தென்ற லுலவநெட் டுயிர்த்துள முருகி, வாடுநூ லிடைபோ லங்கமு மெலிந்து மதனநோய் பொறுக கரிதாகித், தேடுமோ டவர்கள் பலரையுங் கரவிற் சிந்தனே களித்திடச் சோர்ந்தாள் (உக)

மலேக்கிணே யெனப்பொற் சுணங்கலர்ந் தகன்று வட்டமிட் டெழுந்திறு மாந்த, முலேக்கிடை யிடையுந் தடித்தரி விளரி முரல்செழு முளரிபோன் முகமு,

(உ0) வரிக்குயில் = கோடுகளுள்ள குயில்; அன்றிலும் = அன்றிற்பட்சியும்; நிலவெழும் = ஒளிவீசும்; தினம் = பிரதிதினமும்; நிரை = பசுக்கூட்டம்; புரக்கும் = காக்கும்; ஆயர் = இடையரது; வேய்ங்குழல் = பொள்ளாங்குழலும்; திறம்பெற = திறமைபொருந்த; கறங்கு = ஒலிக்கின்ற; சே = இடபத்தின்; மணி = கழுத்திற்கட்டிய மணியும்; கனலும் = எரிக்கிற; அனிலம் = காற்று.

(உக) கோடுவாய் கூட = கீற்று வடிவாகிய சந்திரனது இரண்டு முனைகளுங் கூடும்படி; படை = அம்பு; பசும்புண்ணூடு = புதியபுண்ணினுள்; நீடு அழற்கோல் = அழலிற்காய்ச்சிய நீண்ட இருப்புக்கோல்; நெட்டுயிர்த்து = பெருமூச்சு விட்டு.

மலைக்கிடை யுதிக்கு மதியமொத் துடலு மங்கிற மாய
முத் தூறு, மிலைக்கிடை மலர்ச்செவ் வாயிதழ் வெளுப்
பக் கருப்பமுற் றிருந்தன ளிப்பால் (௨௨)

அந்நக ருறையு மறையவ ரெவரு மறிந்தன ரவ
ட்கடிந் தகற்ற, வின்னலுற் றிரங்கித் துணைவிழிப் புன
லா லிணைமுலை களைக்குளிப் பாட்டிக், கன்னலிற் கனி
ந்த மொழிச்சவு மினியுங் கான்வழிச் சென்றிடுங் கா
லைப், பின்னவர் குலத்தில் வருமொரு காளை பிறைநுத
லவள்கரம் பிடித்தே (௨௩)

எக்குலத் துளைநீ யாமனை யேபோ தெவ்விடத்
தெய்துதி யென்ன, மைக்குழற் குயிலு முற்றவா றனை
த்து மற்றவற் குணர்த்திட மயல்கூர்ந், திக்குவிற் குனி
க்கு மதனனுக் குடைந்தாண் டிங்கிவள் கொங்கைமேற்
காதல, மிக்குனக் கினியான பதியெனத் தனது
வியன்மனை யீதுகொண் டணைந்தான் (௨௪)

---

(௨௨) பொன்சுணங்கு = பொன்னிறத்தேமல்; அலர்ந்து = பூத்து; இடை இடையும் = தோற்கும் இடுப்பும்; தடித்து = பெருத்து; அரி = வண்டு; விளரி = எழுவகை யிசையிலொன்று; முரல = பாடுகிற; மலைக்கு இடை = உதயகிரியின் மத்தியில்; இலை = இலைகளையுடைய; கிடை = செங்கெட்டி.

(௨௩) இன்னல் = துன்பம்; இரங்கி = வருந்தி; கன்னலின் = கரும்பைப்போலும்; கனிந்த = முதிர்ந்த ருசியுள்ள; பின்னவர் = சூத்திரர்.

(௨௪) உளை = உள்ளவள்; மனை = மனைவி; எய்துதி = போகின்றாய்; குயில் = குயில்போன்ற பெண், உவமையாகு பெயர்; மயல்கூர்ந்து = மோகித்து; ஆண்டு = அப்பொழுது; மிக்கு = மிகுந்து; வியன் = பெரிய.

மருவுயிர்த் திடுதண் மலர்க்குழ லணங்கு மற்ற
வன் றனுமா மலரிற், றிருவுயிர்த் திடுமைங் கணைக்கிழ
வனுநற் றேவியு மாமெனக் கூடி, யிருவுடற் குயிரொன்
றுமெனத் தழுவி யின்பமுற் றிருந்திடு நாளிற், கருவு
யிர்த் தனளைப் பைங் காவியங் கண்ணி கணவனுந் தன்று
ளங் களித்தான். (உரு)

இன்னணஞ் சிலநாட் கழிந்தனள் வேறுறாக சிவ
னுயிர்க் கணவனைக் குதலுந், தன்னலங் கெடுக்குங் களி
மதுநுகர்ந்து தமியளா யிருந்துகங் குலின்வாய், மின்ன
லந் தருநுண் ணிடைமடக் கொடியும் விரகவெந் தீச
சுட வெதும்பி, நன்னலந் துறந்தா னருந்திடும் வேட்
கை நனியுறத் தனியிது புரிவாள் (உசு)

நடைதரு கொச்சை நாகுடன் புனிற்று னலவி
ளங் கன்றுற் றொழுவி, னிடைபுகுந் தருந்து மதுச
செருக்கத் தனு லிரங்குமா னீன்றகன் றினைக்கொன்,

---

(உரு) மருவுயிர்த்து=வாசனைவீசுகிற; மா மலர் = பெருமை பொருந்திய தாமரை மலரை; இல் = வீடாகவுடைய; திரு = இலக்குமி; உயிர்த்திடும் = பெற்ற; கருவுயிர்த்தனள் = மகவையீன்றனள்; பைங்காவி = அழகிய நீலோற்பலம்

(உசு) தன் நலம்=தனக்குண்டாகிய நன்மைகளை யெல்லாம்; களி = மயக்குகின்ற; தமியளாய் = தனித்தவளாய்; கங்குலின்வாய் = இராத்திரியில; மின்னலந்தரும் = மின்னலைப்போன்ற; மடம்=மடமைபொருந்திய; நல நலம்=நல்லறிவு; தனி = தனிமையாக.

(உஎ) கொச்சை=பெண் ஆடு; நாகு=இளமைப்பருவமுள்ள; புனிற்று ஆன்=இளம் பசுவினது; இரங்கும் = வருந்தும்; ஆன் ஈன்ற=பசுவானதுபெற்ற; மிடையிருள்= [illegible]இருளை; கடிய = அசற்றுதற்கு; தகழி = [illegible]கல்; வூக்கி=வார்த்து

றுடையதன் னகத்திற கொண்டுசென் றிரவி னூன
ருந திடுவதற கெண்ணி, மிடையிருட் கடியத் தகழி
நெய் வாககி மெனறிரி விளககுமேற் றினளால். (உஎ)

அவ்வயிற் செகுதத தாவிளங் கன்றென் றறிநத
ன ளயாநதனண் மயஙகிச,செவ்வயிற் கண்ணாள் கன்ன
லோ ரிரண்டு சிவசிவ வெனததியா னித்துப, பவ்வநீ
ருலகோா பழிததஙட் குடிதத பழுதுவந ததுவெனப
பயநது, மெவ்வமிலாம லூனுணத துணிநதாள் யாவ
ரே விதிவலி கடபபார (உஅ)

புள்ளெனுங கண்ணாள் புளளம தெடுததுப புர
ணிக ளரிததரிந துரிசை, யுள்ளவள ளூரங்கள் வேறு
வேறமைததிட் டுவப்புறக கருணைசெய் தருநதி, வள்
ளவாய்க கமல நாயகனபூரு வததிசை வருமபுல ரியின
வாய், வெள்ளெனுமப ஹேததது மளளினள கொணர்
நது விதியிட் டிவையிசைத திடுவாள (உகூ)

வெய்யதீச சுழலகட் கொடுவரி வடிவால மென்கு
ழக்கனறினை யொறுததின, றையகோ தின்றுபோயது

---

(உஅ) அவவயின=அவவிடதது; செவவயிறகண்ணாள்=கட்குடிததாற சிவந்த வேல் போலுங கணகளையுடையவள்; கன்னல்=நாழிகை; பவவநீா=ஒளியுள்ள சமுததிரம; பழுது=பாயம்; எவ்வம்=குற்றம்.

(உகூ) புள்=வண்டு; புள்ளம் = அரிவாள்; புரணி = மேற்றோல; வள்ளூரம்=ஆவின்மாமிசம; கருணை=பொரிக்கறி; வள்ளவாய்=கிண்ணம்போன்ற வாய; கமல நாயகன்=சூரியன்; பூருவத்திசை=கிழககுத்திககு; புலரியின்வாய் = உதையவேளையில; [illegible] = சொல்லுவாள,

மறுகி லனைவருங் காண்பினென் றெறிந்து, தையன்
மீண் டி புற்பா லெய்தினள வேளாண் டகைபெறு காளை
கேட் டெய்திச, செய்யவாய் மயினீ பிழைத்தனை
போது மெனவவட் டேற்றின னிருந்தான். (கூ0)

வெறுத்தன னிகவா னங்கவள் கொங்கை விழை
நல வேட்கைமீ தூரந்திட, டிறுத்தபே ரன்பா லன்று
போ லென்று மின்பமுற் றிருந்திடு நாளிற, கறுத்த
வல் விடத்தை நிகாத்தவெம பிணிகள காயமீ துடற்
றிடத் தேமபி, மறுத்தவிா மதியை மருட்டுவாண் முக
த்தாள் வருந்தினண் மரணமுற் றனளே. (கூக)

வேறு

அச்சமை யத்தினி லடாந்து வாரியிற்
கைச்சமைக் கடுகிகா சால துாதுவா
பொயச்சமை மின்னிடைப பூவை மென்மொழி
மச்சமை விழியுயிா வெளவி யேகினா (கூஉ)

---

(கூ0) கொடுவரி = புலி; வடிவால = தொங்குகின்ற வால; குழக
கன்றினை = இளங்கனறை; ஒறுத்து = கொன்று; மறு
கில = வீதியில; இல்பால = வீட்டினிடத்து; வேள =
மன்மதன் போலும; ஆணதகைபெறு = ஆணதன்மையு
ள்ள; செய்ய வாய மயில = சிவந்தவாயினையுடைய மயில.

(கூக) வெறுத்தனன் இகவான் = வெறுத்து நீங்காதவனாய,
விழை = விரும்பத்தக்க, நலவேட்கை = சிற்றின்ப
ஆசை; இறுத்த = தங்கிய; உடற்றிட = வருத்த; மறுத
விா = களங்கம் நீங்கிய.

(கூஉ) வாரி = சமுத்திரம; கச்ச(கைத்த) = கசந்த; பொய்த்து
அமை மின் இடை = உளதாயும் இலதாயுமிருக்கிறமின
னல்போன்ற இடுப்பு; பூவை = நாகணவாய்ப்புள்; மச்ச
மைவிழி = மீன்போன்ற கருவிழிகளையுடைய பெண,
அன்மொழித்தொகை; வெளவி = கவர்ந்து.

நநதலி றென்புல நண்ணி நண்ணரும
வெநதிறற் கூற்றின்முன் விடுபப நான்முகத
தநதமி றீவினை யனைததுு மாயநது பின்
பைநதொடி முகததினைப பாாததுக கூறுவான். (௩௩)

அன்றிருட் பொழுதினி லானின் கன்றினைக்
கொன்றிருந தானறிரு நாமங் கூறிய
நன்றியிற கொடுநதழ னரகந துய்த்திடு
மொன்றிய தீவினைக குரிய ளலலீ (௩௪)

சிலைமக ளாககிய தேவன் பினவரு
மலைமகட் குடலிடம வழங்கி வானதி
யலைமகட் சூடினு னருளிற கூறினுன்
புலைமக ளாய்பபுவி போதி நீயெனறே (௩௫)

அந்தக ணணையா லழகின் மேனியு
நொநதுடல பொறுககொணு நோய்க ளுங்கொடு
கநதமாா குவளைநோ கண்க ளின்றியே
வந்தொரு புலைமகள் வயிறறிற றேன்றினள். (௩௬)

---

(௩௩) நநதலில் = அழிவிலலாத; நண்ணரும் = நெருஙகக கூடாத; வெமதிறல்=கொடுநதன்மை; நூல் = அவரவா புரியும் வினையின்பதிவு கணககு; பைந்தொடி= வளையலையணிந்த பெண், அன்மொழித்தொகை.

(௩௪) நன்றியில = புண்ணியததினுலே; துய்த்திடும் ஒன்றிய=அனுபவிக்கும்படிப் பொருந்திய; தீவினைக்கு= கொடுஞ் செய்கையை அனுபவித்தற்கு.

(௩௫) சிலை=கல்லே;மகள்=பெண்;வான் அலைநதிமகள்=அலையினையுடைய ஆகாய கஙகையாகிய பெண்; அருளில்= கிருபையைப் பெறுதலில்லாத; போதி=போவாயாக.

(௩௬) அழகில்=அழகில்லாத.

அறநதவாத துறவிர்கா ளணஙகு நோயுடன
சிறநதவாட் படைபிகர் திருட்டி யின்றியே
மறமபுரி புலையர்தங் குலததில வநதவள
பிறநதகா ரணமினிப பேசக கேட்டிரால் (௩எ)

உம்மையிற கறபொரீஇ யுளதத வாக்கொடு
கைமமையிற பலரையுங் கலநத தீமைபாற
செமமையின மேனியிற றீய குட்டமுமா
வெம்மைகொள் சூலைநோய் முதலவி யாதியும (௩அ)

பெற்றன ளவளொரு பிடிய தாயினு
மற்றவா பசிககன லவிகக விட்டுறுக
குற்றம தாறபசிக கொடுமை கூா துய
ருற்றவ டேமபிடு முடலங் தாஙகினுள (௩௯)

பலத்தினை மிகததருும பசுவின கன்றினை
வலத்தினிற செகுததவள் ளூரங்கண் மாநதலா

(௩எ) தவா = நீஙகாத; அணஙகுநோய = துனபஞ்செய்கிற நோய்; திருட்டி=(கண) பாாவை.

(௩அ) உம்மை=முற்பிறப்பு; கற்பு ஒரீஇ = கறபு நீக்கி;சூலை நோய=வயிற்றுவலி.

(௩௯) அற்றவா=வறுமையாளா; பசிக் கனல் = பசித்தீ; கூர் துயருற்று=மிகுநத துன்பம்பொருந்தி; தேம்பிடும்= வருந்தும்.

(௪0) பலததினை மிகத்தரும் = அதிக பயன்களைக்கொடுக் கிற, அஃதாவது பால், தயிர், நெய், கோசலம், கோம யம் இவைகளைக்கொடுத்தலும், பூசிப்பவருக்குப் புண ணியங்களைக் கொடுத்தலும், அவரதுபாவங்களை யொ ழிததலுமாம்; வலத்தினில்=பலத்தினுல்; செகுத்து= கொன்று; வள்ளூரம்=பசுவின் மாமிசம்; கள்=கள்ளு; மாந்தல்=புசித்தல்; கொடிய நீர்மையாள்=தீயகுணத் தையுடையவள்.

னிலத்தினிற புன்றொழி னீச ரெனறிடுங
குலத்தினிற றோன்றினள கொடிய நீரமையாள் (சO)

எண்ணுநல வினையினை யிகநது தீவினை
பண்ணிட வியறறுகட் குடிதத பானமையாற
கண்ணினை யின்றிமைக் கடலுபடுதிடு
மண்ணின்மேற றோனறிமெய வருநதி னுளரோ (சக)

வேறு

இனைய நீரமைய ளீன்றதாய் தநதைய ரிறப்ப
மனையெ னததனை மணநதுகொள வார்களு மின்றி
யனைய வூரபபுலைச் சேரியி னையமேற றருநதித்
தினையி னோநல னினறிநல குரவொடு திரிநதாள் (சஉ)

திரைமு திரநதொாமாத திரையுநித திரையிலாள் களத்த, மரைமு திநதிடக் குரைததிட வளைநதுமெய்க் கூனி, யுரைமு திரநதவ ருவமமிட் டுரைததகொக் கொப்பாய், நரைமு திநதுநல விளமைபோய் முதுமைநண் ணியபின். (சங)

சொன்ன மாகநற சிவநிசி நோறறிடத் தொடங்கி, யன்ன மாநகாச சனஞசெல வறிநதவா கூடப, பின்ன மனறிமற றொருபுலை மடநதைதோள பிடிததுக, கன்ன லார்வய றானனுகோ கனனபீ ததைடநதாள (சச)

(சக) எணணுமமதிககததகக; இகநது = ஒழிதது; இயற்றுமசெய்யும்; மைக்கடலகருஙகடல.

(சஉ) நீர்மையளதன்மையுடையவள; நலகுரவுதரிததிரம்.

(சங) திரைமுதிரநதுசரீரத்தின்தோல சுருஙகி; களததுகண்டதது; அமா = பொருநதிய; ஐகபம்; குரைத்திடஇருமு, உரைமுதிரநதவர்கற்றவா.

(சச) சொன்னமேற்சொன்ன ; அன்ன = அததன்மையாகிய; பின்னமநீஙகாமல; கோகன்னம் = கோகர்ன மெனனுமநகா; இந்நகரின் எலலை பசுவின்காதுபோலிருததலானும, இராவணன் சிவலிஙகததை யெடுத்தகாலத்து அது பசுவின் காதுபோற் குழைநது நீணடதாலும் அந்நகர் கோகர்ன மெனப் பெயாபெற்றது.

தீய வெம்பசி கனற்றவோர் தெருத்தனி லிருந்து,
தூய கண்ணிலேற் றுதவுமின் சோறெனை விரந்து, கூய
போதிலம் மறுகிடைக் குறுகுமோர் களியன், ஆய வில்வ
நிறை குணவிதென் றவள்கரத் தளித்தான (சரு)

புன்மை யாலவ னிட்டகூ விளத்தனைப் புசித்தற்,
கன்மை யாலய லெறிந்தன ளாங்கது பழைய, தன்மை
யாகிய சிவலிங்க நாயகன் றலையிற, றின்மை தீர்ப்பவர்
சாத்திய தழையெனச் சிறந்த (சசு)

அற்றை நாட்சிவ ராத்திரி யனந்தலு ணகற்றிப,
பற்றை நோக்கரப் பரையொரு பாகமாம் பரமன், கற்றை
வார்சடை முடியெறி கவின்கொள்வில் வத்தாற், பிற
றை நாட்சிவ பூசனை புரிபலன் பெற்றவாள. (சஎ)

யாம நான்குமன் றிரவுபத் துகமென வெண்ணித்,
தூம மாரழற் பசியினுற் றாயினறில் லிருந்தாள், சேம
மார்தடந் தேர்கடித் தருணன்முன் செலுத்தக், காமர்
செங்கதிர்க் கடவுளுங் குணபுலத் துதித்தான (சஅ)

---

(சரு) கனற்ற = எரிக்க; கூயபோதில் = கூவியபொழுது; அம்மறுகு இடை = அந்தத்தெருவினிடத்து; குறுகும் = வரும்; களியன் = மதாத்தவன்; ஆய = தன்னு தாகிய.

(சசு) புன்மையில் = அறிவின்மையால்; அன்மையால் = அல்லாததால்; அயல் = பக்கத்திலே; பழைய தன்மை = பழைமையான; தின்மை = தீமை.

(சஎ) அனந்தல் = நித்திரை; பற்றை = செங் காந்தள்; பிற்றை நாள் = மறுநாள்.

(சஅ) பத்து உகம் = பத்து யுகம்; தூமம் = புகை; சேமம் = தற்காப்பு; கடிது = விரைவில்; அருணன் = சூரியனது தேர்ப்பாகன்; காமர் = அழகிய; செங்கதிர்க் கடவுள் = சூரியன்; குணபுலம் = கிழக்குத்திக்கு.

விடியல காணடலு மீணடொரு தெருததலை மே
வி, யடிசி லேற்பமற றபபுலை யரிவைதோள பறறி, நெ
டிது சேறலுங காறளாந துயிாநிலை நீஙக, மிடிசெய
மூபபுவெந நோய்பசி வருததிட வீழநதாள (சகூ)

ஆத பததழல கொளுததிய நிலததிலவீழ்ந தழூ
நதி, யேத முறறவள பட்டவெந துயரை விலைபபின,
பாத கபபுலை மகளுட றணநதுயிா பறிநது, போத லுற
றிடத் தொடஙகியே புறபபடும போதில (ருo)

பணிபப ணிபபுயக கணிசசியம படைபபர னரு
ளா, லெணிகக ணிககருங கணஙகளை யேவிநீா மேவிக,
குணிககருமபுலை மகளுயிா கொணாமினென றரைபப,
மணிசசெ ழுஞசுடா விமானமோ டிமபரின வநதாா

அனன காலையிற புலைமக ளாவியைப பொலமெ
ன, றன்ன வெவருந திவவிய வுருவினிற சோததுக,
கினன ராதியா பாடிடக கிளிமொழித துவாவாயச,
சின்ன நாலிடை யரமபையா நடமபயில செய்ய.(ருஉ)

---

(சகூ) விடியல=உதயம்; அடிசில = சோறு; நெடிது=தூர
மாக; சேறலும=செலலலும; கால தளாநது = கால
சோாநது; உயிா நிலை நீஙக = உயிரானது தன நிலையி
னின்று நீஙகுமபடி; மிடி=தரிததிரம.

(ருo) ஆதபததழல=சூரியவெபபம ; கொளுததிய = சுட்ட;
ஏதம உறறவள=குறறம பொருநதியவள; உடல தண
நது=உடலைவிட்டு; உயிா பறிநது=உயிா நீஙகி; போ
தலுற்றிட = போகுமாறு; தொடஙகிப புறப்படும் =
ஆரமபித்து வெளிப்படுகிற.

(ருக) பணி = சாபபஙகளை; பணி = ஆபரணமாகபபூணட;
புயம=புஜததில; கணிசசி அம்படை=அழகிய சூலா
யுததைததரிதத; பரன் = பரமேசுவரன்; எணி =
எணணி; கணிககரும்=அளவிடற்கரிய; குணிக்கரும;
=மதித்தற்கரிதாய; இமபரில்=இவவுலகததில்.

(ருஉ) பொலம் என்று உன்ன = பொனனாற் செயததென
மதிககுய; திவவிய வுருவினில் =புணணியப பயனை
யருநது:ற்குரிய தெயவீகசரீரத்தில்.

தக்க துந்துபி முழக்கிடச் சாமர மிரட்ட, வக்க
ணத்தினி லவிர்மணித் தோமிசை யேற்றித், தொக்க
வெண்ணிறச் சோதிவிட் டொப்பற்ற துலங்கு, மிக்க
பேரெழிற் கயிலையிற் செல்லுவான் விரைந்தார் (௫௩)

கண்ண னாயிரங் கண்ணனெண் கண்ணனற் கதி
ர்கட் டண்ணெ னாண்மதிக் கடவுளுஞ் சலசநட் புடை
ய, வண்ண வானகதிர் வானவர் முனிவர ருரகர், விண்
ணு லாவிய சித்தரோ டியக்கரிஞ் சையர்கள் (௫௪)

பரிந்து போற்றினின் றவர்க்கெலா மருள்விழி பரப்
பபி, வரிந்த நீள்குரன் மாட்கத் திவவியாழ் வாங்கிப்,
புரிந்த வாசடை நாரதன் புகலருஞ் சுருதி, தெரிந்து
பாடிய பாடலிற் செவித்துணை கொடுத்து (௫௫)

கையின் மான்மழுப் பிறங்கிடக் கனற்பிழம் பனை
ய, மெய்யி னீறெழுளி விளங்கிட விடநுகர் திருண்ட,
மையி னிறறிகழ் கண்டமும் வண்டுபாண் மிழற்றச
செய்யி னாறுசெங் கமலநோ வதனமுந் திகழ (௫௬)

---

(௫௩) தக்க = அவளுக்குத்தகுந்த; சோதிதொக்க = பிரகாசம
பதிந்த; செல்லுவான் = செல்லும்படி; விரைந்தார் =
விரைவாகச்சென்றார்.

(௫௪) கண்ணன் = திருமால்; ஆயிரங்கண்ணன் = இந்திரன்;
எணகண்ணன் = பிரமமா; தண் என் கதிர்கள் = குளிர்
ந்த கிரணங்களையுடைய; நாள்மதிக்கடவுள் = பூரணச
சந்திரன்; வண்ணம் = அழகில; வான் = சிறந்த

(௫௫) வரிந்த திவவி = இறுக்கிய கட்டுகளையும்; நீள் குரல் =
நீண்ட நாதத்தையும்; மாட்கம் = முறுக்காணிகளையும
உடைய; புரிந்த = முறுக்கிய; சுருதி = சுரம்

(௫௬) பிறங்கிட = விளங்க; இருண்ட மையினில் = கறுத்த மை
போல; பாண = இராகத்தை; மிழற்ற = பாட, செய
யில் = வயலில; நாறுகிற = உற்பத்தியாகிற

படரு மெனகொடி யறுகிலைப் பசுமையாற் பொ
றிபனை,விடநெ டும்பணிச சுடிகையிற் றிகழ்மணி வெ
யிலா, லடாத டநதிரைக் கங்கையா லணிசடா டவியிற்,
றொடருஞ சநதிர னிநதிர சிலையெனத தோனற (௫எ)

உழலை சோபவ வெயிற்கொதுங் கிடததன துபய,
கழலை நீழலா யடியவாக கருள்புரி கநதன், குழலை யா
ழினை யமுதினைக குழைததன குதலை, மழலை கேட்டுள
மகிழ்நதிடு வாணகை வயஙக (௫அ)

கலக வாளவிழி யரமடையா கவரிகா லசைபப,
வுலகி லாருயி ரனைத்தையும பெறறசிற றுதரத, திலக
வாணுத லுமையுடன் செமபொனு லியன்ற, விலகு
மாமணி யாசனத் திருநதன னிறைவன (௫௯)

(௫எ)மென்கொடி = மெலலிய கொடியாகிய; அறுகு=அறு
கமபுல, இலை=மறறைப் பத்திரஙகள்; பொறி=புள்ளி
யுடைய; பை=படம; சுடிகையில் = உச்சியில்; திகழ்
மணிவெயிலால = விளஙகும் மாணிககததினது ஒளியி
னல்; சடாடவி=சடைக்காடு, தொடரும = தவழும;
இநதிரசிலை=வானவில

(௫அ) உழலைசோ =வெப்பததையுடைய, டவ வெயிற்கு=பிற
வியாகியவெயயலுககு; கழலை=திருவடியை,நீழலாய்=
நிழலாக, குழைததன = குழைததது போன்ற; குத
லைமை=விளஙகாதசொல்; மழலை = நிரம்பாத இளஞ்
சொல, அஃதாவது சொல்நிரமபாவிடினும பிறருககு
விளஙககூடிய வாரதையாம. குதலை, மழலை என்
பவற்றிற்கு, திருக்கோவையாருரையில் உரையாசிரி
யர் சிகாமணியாம் பரிமேலழகர் இங்ஙனம் பொருள்
கூறி யுள்ளனரென்க.

(௫௯) கலகம = மனக்சலக்கத்தை யுணடாககும்; கவரி = வெ
ணசாமரையால, கால அசைப்ப=காற்றையுண்டாக்க;
உதரம = வயிறு, திலகம = நெற்றிப்பொட்டு; இய
னற=செயத.

ஆறு சூடிய வண்ணன்முன் னநதரத் தியங்கு,
மேறு சீரமணி விளங்கிய விமானநின் றிறக்கிக், கூறு
மிப்புலை மடந்தையை விரைநதுடன கொடுபோய்,
வீறு சோகண நாதரக கணத்தினில் விடுத்தார். (சுo)

எம்பிரான்றிரு வுளங்கனிந் திரங்கியங் கவடன்,
வம்பு லாநதிரு மலர்முக நோக்கியிவ் வணைக்க, ணம்பு
லாம்விழி மாதரோ டிருத்திமற றதற்பி, னும்பர் நாடரு
முத்தியுந் தருதுமென் றுரைததான. [சுக)

அனைய வவ்வுரை கேட்டன ளகமகிழ்ந திருநதா,
ளினைய மாககதை படிததவா கேட்டவரெவரும, வினை
யொழிநதா னருளபெறு வாரென விரிததுப, புனைநெ
டுஞசடைச சூதனாம முனிவர்ககுப புகனறுன் (சுஉ)

---

(சுo) இயஙகும் = செலலுகிற; சீர் ஏறு மணி = சிறப்பு மிகுந்த மணி, வீறு = பெருமை; அககணம = அநத க்ஷணம்.

(சுக) கனிநது இரஙகி = உளளமிளகிக் கருணைசெய்து; வம்பு லாம் = வாசனை பொருநதிய; அம்புலாம் = அம்பு போன்ற.

---

## வசனம்.

நைமிசாரண்யவாசிகளே! இச் சிவராத்திரியின் சரிதங்கள் இன்னும்பலவுள அவற்றிலொன்றினைக்கூறுவேன் கேட்பீராகவென்று சூதமாமுனிவர் சொல்வாராயினர்.

விண்ணவராதியர்விரும்பும பல வளங்கள் பொருந்திய கேகய நாட்டின் ஓர் நகரில், தராதலம்புகழுஞ் சதுர்மறையோதும் பிராமணனொருவன பெறுமகவின்றி அருந்தவம் புரிந்து அளவிலாத நற்குணம் நிரம்புமோர் பெண்ணை நியதியாற் பெற்றனன அவன் அப்பெண்ணுக்குச் சவுமினியெனப்பெயரிட்டு நாளொருமேனியும பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து வந்தனன். அச்சவுமினி யென்பவள் அரம்பையை யொத்த அளவிலா வனப்பு வாய்ந்து வளர்ந்து சிற்றிலிழைத்தல சிறுதேருருட்டல் முதலிய குழவிச்செயல்களைப் புரிந்து பேதைப்பருவமடைந்து தன்னைப்போன்ற பெண்களோடு கூடி, கழங்கு ஊசல் முதலியன ஆடி, மகிழ்ந்து காலங் கழித்து வந்தனள்.

பின்னர் அச்சவுமினி யென்பாள் கறுத்த இருள், களாக்கனி, கருமேகம, கொடிப்பாசி, கூந்தற்பனை, கொன்றைக்கனி, வண்டு, கருமணல் இவற்றையொத்து, நெறித்து விளங்கும் கூந்தலினையும்; மூன்றாம் பிறையை யொத்த நெற்றியினையும்; வில்லையொத்த புருவங்களையும்; வேல், மாவடு, வாள், கயல்மீன், வண்டு, குவளைமலர், தாமரைமலர், நீலோற்பல மலர், காக்கணமலர், அம்பு, விஷம், அமுதம், மான், இவற்றை யொத்த விழிகளையும்; வள்ளைக கொடியை யொத்த குழைகளையணிந்த காதுகளையும்; எள்ளின்மலர், குமிழமலர், இவற்றை யொத்த நாசியினையும; செவ்வல்லி, முள்முருக்கிதழ், கொவ்வைக்கனி, செங்கெட்டி, பவளம், இவற்றையொத்து கண்ணுகிய கூரியவேல் தைத்தலாலுண்டாம்விஷத்திற்கு விஷமாகிய அமுதத்தினைநல்கும் சிவந்த இதழையும்; வெண்

முத்து, முல்லையரும்பு, பட்சிகளிறகினடி இவற்றை யொத்த பற்களினையும்; தேன், சருககரை, கற்கண்டு, செழுஙகனி, கரும்பிரசம, பால், அமுதம், பசுஙகிளி, குயில், குழல், யாழ் இவற்றை யொத்த குளிாந்த மொழியினையும்; சநதிரன், தாமரைமலர், இவற்றையொதத முகததினையும; கமுகை யொதத கழுததினையும், மூஙகிலை யொதத தோள்களினையும; மகாயாழையொதத முன்கைகளினையும்; தாமரைமலர், மாந்தளிா, செங்காநதள மலர் இவற்றை யொத்த அங்கைகளினையும்; கிளிமூக்குப் போன்ற காநகஙகளினையும, தாமரையருமபு, யானையின் மருப்பு, பொற்குடம, தென்னஙகுருமபை, சக்கரவாகப்பட்சி, உயாந்தமலை இவற்றை யொதத குஜங்களினையும்; படருஙகொடி, பூஙகொமபு, மேகததினது மின்னல், மதனனது உடல, மெல்லிய இழை, சிமமம், உடுக்கு, இவற்றை யொத்த இடையினையும, திருமகளுறையுநதாமரை மலர் போன்ற பாதஙகளினையும உடையவளாய் சுககிலபககததுச சுதாநிதி போல வளர்ந்து மஙகைப்பருவமடைநதனள்

அதனைக்கணட தாய்தநதையர் அகமிகமகிழ்ந்து தமது மரபில் ஒரு பிராமணனுக்கும் சவுமினிககும் சுபமுகூர்த்தததில் திருமணம்புரிவிததனா அந்தபபிராமணனும் சவுமினியும் முறையே பிரம்மதேவன் சரஸ்வதிபோலவும, சநதிரன் ரோகணிபோலவும், மன்மதன் ரதிபோலவும, கூடிக்களித்து வாழ்ந்திருநதனா.

இவ்வாறிருக்கையில அந்தப்பிராமணன் வெம்பிணிகளாற் பீடிக்கப்பட்டு வருந்தியிறந்தனன். உடனே சவுமினியென்பவள் தம்மரபு வழக்கப்பட்டி நாணிழநது கைமையுற்றிருந்தனள்

பின்னர், குயில், அன்றில், சந்திரன், வேய்ங்குழல், இடபத்தின்மணி இவைகள் காற்றையொதது வெங்காமததீயை மூட்ட, மதனன் எய்யும பாணஙகள் தைத்தபுணகளில், நெருப்பிற் காய்ச்சிய இருப்புக்கோல்களை நுழைததது போற் றென்றல் வீச, குஜங்களிற் பசலைபூப்ப; வாடுமிடைபோல்

அங்கமுமெலிந்து அணையிற கண் துயில் வராது கலங்கி வரு நதி மதன நோயைச சகியாதவளாய் ஆடவா சிலரை, கரவிற் கூடி உள்ள முவந்தனள். ஆனதால் நூலபோன்ற இடைதடிப்ப; தேகம், முகம், இதழ் இவை சந்திரனைப்போல் வெளுப்பக கருப்ப முற்றிருந்தனள் அந்நகரில வசிககும பிராமணாக ளெலலாம் அதனையறிநது அவளைக கடிநது அந நகரைவிட்டு அகறற, அவள் தீராததுயரமுற்றுக கண்ணீர் தாரை தாரையாகச சிநத அழுது கொணடு அருகிலுள்ள ஒரு காட்டினிற சென்றனள இஙஙனஞ செலலுகையில் அககாட்டிற் செலலும் காளைப்பருவமுளள ஒரு சூததிரன் கணடு பெண்ணே! நீ எநதவூர், என்னஜாதி, யாரமனைவி, நினபெயரெனனை, எங்குபோகின்றுய எனறு கேட்க, சவுமினி தனது விருத்தாந் தஙகளைக கூறியழுதனள். அநதககாளை சவுமினி மேல காதல கொண்டு பெண்மயிலே! உனககு நானே நாயகனுக விருக்க இச்சிககின்றேன் அது உனககுச சம்மதமோ வென்று கேட்க, அவள் அதற்கிசைநதனள் உடனே அககாளை அவளைய ழைத்துககொணடுபோய்த தனவீட்டையடைந்தனன் அன்று முதல அவ்விருவரும மதனனும ரதியும போலக கூடி வாழ்நதிருநதனா.

இஙஙனஞ் சினுட்சென்றபின் அவள் ஓா மகவைப்பெற அதனைககண்டுஅவ்விடலைஅகமகிழ்நதிருநதனன். பின்னரோர் ஞான்று அவவிடலை அயலூருககுச சென்றிருநததால் அன்றிரவு சவுமினி தனியேயிருந்து, நன்மைகளையெலலாங கெடுககும் மதுபானம் பணணினுள் உடனே மாமிசம்புசிக்குமவிருப்பம் அதிகரித்ததால,அவள் ஒரு கததியை யெடுத்துக்கொணடு ஆடுமாடுகள் கட்டுந் தொழுவததிற்குச சென்று அங்கு இருளாயிருநததாலும் தனககுக குடிமயககம அதிகரிததிருநததாலும் அத்தொழுவததிற் கட்டியிருநத பசுவின் இளஙகன்றினை ஆடெனநினைத்துக் கத்தியாலரிநது எடுததுக்கொண்டு வீட்டிற்குட்சென்று விளககு வெளிச்சத்திற் பாரகக, தான் கொன்றது ஆடல்லவென்றும் பசுவின் கன்று மெனறும தெரிநதனள். அவள் தீமைக களஞ்சியமாயிருப்பவளே யாயினும், பிராமண

குலத்திற்பிறந்தவளானதாலும், கோவதை செய்தல் மகா பாதக மெனத் தன் தந்தை கூறியுள்ளதைக் கேட்டிருந்தவளான தாலும், முற்பிறவிகளில அவள் செயத புண்ணியத்தினு லும், அப்பொழுது சற்று நலலறிவு தோன்ற மனதில் ஒரு வித அச்சமுண்டாய், உலகததிலுளள உததமரா லிகழப்பட்ட கள்ளேகுடித்ததாலலலவோ இப்பாதகஞ்செய்ய நோநததுஎன நினேத்து அயாநது இரணடு நாழிகை நேரம் சிவ சிவ சிவ சிவ வெனத்தியானித்திருநதனள். உடனே அவள ஆணவ மலத் த டிப்பினுல் திரோதானசததி வயத்தினளாய, கொன்று விட் டோம் இனிவருநதுவதிற் பயனென்னே நமது இசசையை முடித்துக்கொள்வதே தகுதியாமெனத்துணிந்து அககன்றின் மாமிசததை யுண்ணுமாறு கததியால் அதன தோலேயுரித தெ றிநதுவிட்டு மாமிசஙகளே யெடுத்துச் சமைத்து ஆசைதீர அரு நதிமகிழ்ந்துறஙகினள. மறுநாள் உதயகாலத்திலெழுநது அவள் அததெருவிலுள்ளார கேட்கும்படி ஐயையோ காட்டில வாழும் புலி என்வீட்டில் வநது பசுவின் கன்றைக் கொனறு தினறு போயிற்றே என்செயகேனெனக கூச்சலிட்டு அநதக கன்றின் தோலேயும் எலும்புகளேயும் வாரியெடுத்துக்கொணடு போய்த் தெருவிலெறிநது இருநதனள். பின்னா அயலூருக்குச்சென்றி ருந்த விடலேயாகிய அவளது கணவன் வீடுவநது சோலும், அவனிடமும அவள் அஙஙனமே புலி வநது கன்றினேக்கொ ன்று தின்று போயிற்றெனககூறி அதற்காக மிகுநத துக்கப் படுபவள்போற் பாசாஙகு செய்தனள். அவ்விடலே கேட்டுப் பெண்ணே! அநதப்புலி வீட்டினுள் வநது உன்னேக் கொலலா து போனதைப்பற்றி மகிழச்சியடைவதை யொழித்து ஒரு பசு வின் கன்றினுககாக நீ இப்படி இஙஙகுதல் தகாதென்று சொல் லி அவளேத தேறற, அவள் அதனேக்கேட்டு மனந்தேறினவள் போலிருநதனள். பிறகுஅவவிடலேயும் சவுமினியும் முன்போற் கூடி இன்பமுற்று நெடுஙகாலங் கழித்தபின்னர் அந்தச சவுமி னியென்பாள் கொடியபிணிகளால வருத்தப்பட்டு மரணமுற் றனள். அப்பொழுது எமதுதர் அங்கு வநது அவளுயிரைப்

பாசத்தாற் பிணித்துக்கொண்டுபோய்த் தென்புலஞ் சேர்ந்து கூற்றன் முன் விடுப்ப, அக் கூற்றன் சித்திரகுப்தனால் அவள் செய்த தீவினையனைத்தும் ஆய்ந்தனன்.

பின்னர் அந்தகன் பரமேசுவரனது திருவருளை முன்னிட்டு அவளைப்பார்த்து நங்காய்! நீ பல தீவினைகளைப் புரிந்துள்ளனையாயினும் அன்று இருட்பொழுதினில் பசுவின்கன்றைக் கொன்றவுடன் சிவபிரானது திருநாமத்தை இரண்டு நாழிகை நேரம் ஜபித்ததால் இங்குள்ள நரகங்களையனுபவிக்கு முரிமையொழிந்தது. ஆகையால் பூவுலகினகண் புலையர் குலத்திலே, இரண்டு கண்களுமின்றிக் கோரரூபத்துடனும், உடல் பொறுக்கொணா நோய்களுடனும் பிறக்கக்கடவாயெனக் கட்டளையிட்டனன். அவள் உடனே இப்பரதகண்டத்துத் தென்பாங்கிலே கோகர்ண மென்னும் உயர்ந்த சிவத் தலத்தினுக்குச் சிறிது தூரத்திலுள்ள ஒரு சிற்றூரிலே, அந்தகன் கூறிய அடையாளப்படி ஓர் ஏழைப் புலைச்சி வயிற்றிலே மகவாய்ப்பிறந்து வளர்ந்தனள். இங்ஙனம் சில ஆண்டுகள் சென்றபின் அவள் தாய் தந்தையர் இறந்தனர். அதனாலும், குட்டமுதலியநோய்களையுடைத்தாயிருக்குந் தன்னை மணம் புரிவாரில்லாமையானும் அந்தப்புலைச்சேரியில் இரந்துண்டு தரித்திரத்துடன் தினையளவேனும் இன்பமின்றித் துன்பமுற்றிருந்தனள்.

சவுமினி யென்பாள் பிற்றிய பிறவியில் கண்களில்லாது நோயாளியாய்ப்பிறந்து இரந்துண்டு காலங்கழித்த காரணம் யாதோவெனின்? அவள் கைம்மையுற்றபின் கற்பு என்பதை அறவொழித்துப் பலபுருஷர்களைச்சேர்ந்த பாவத்தால் குட்டம், சூலை என்னும் வியாதிகளையுடையவளாயினள்; அன்றியும் பசுவின் கன்றினைக்கொன்று அருந்திய பாவத்தால் புலையர் குலத்திற் பிறந்தனள்; கட்குடித்த பாவத்தால் குருடி யாயினள்; அவள் வாழ்நாட்களில் ஒரு நாளிலாவது பசித்து வந்தவருக்கு ஒரு பிடியன்னமும் இடாத பாவத்தால் ஏழைப்புலைச்சி வயிற்றிற்பிறந்து இரந்துண்டு வருந்துவாளாயினள் என்பனவேயாம்.

அவள் இங்ஙனமிருந்து காலங்கழித்து இளமைப்பருவங் கடந்து முதுமைப்பருவமடைந்து, கொக்கைப்போல் வெளுத்த நரையுந் திரையும் பொருந்த, சரீரம் வில்லைப்போல் வளைய, ஒரு கணமும் நித்திரை பொருந்த வொட்டாது கண்டத்திலே கபம்சிக்கி இருமலையெழுப்ப, துன்புற்றிருந்தனள். இப்படியிருக்கையில் முன்னர்க்கூறிய சிவராத்திரி விரதமிழைத்தற்கு அந்நகரிலுள்ள அநேக மனிதர்கள், சமீபத்திலுள்ள கோகர்ணம் என்னுந்தலத்திற்குச்சென்றனா. இந்தப்புலைமாது அதனைத்தெரிந்து ஐயமேற்றுண்ணுமாறு மற்றொரு புலைமடந்தையின் கரத்தைப் பற்றிச் சென்று அந்தக் கோகர்ணமென்னுந் தலத்தையடைந்து சந்நிதிவீதிக்கு எதிரிலிருந்து ஐய! கண்களில்லாதவளாகிய எனது வயிற்றில் மூளுந்தீயையவித்தற்குச் சோறிடுங்கள் சோறிடுங்கள் என்று கூவிக்கொண்டிருந்தனள். அன்று சிவராத்திரி தினமானதால் ஏராளமான மனிதர்கள் அந்நகரில் வந்து நிறைந்திருந்தனா அப்படியிருந்தும் இப்புலைமாதின் நல்லூழின்றால் அன்று பகல் முழுதிலும் ஒருவரேனும் அவளுக்கு உணவளித்தாரில்லை.

பின்னர் இரவிலும் அவள் அவ்வாறே கூவிக்கொண்டிருந்தனள். அப்பொழுது அவ்வீதியின் வழியே செல்லும் துஷ்டனொருவன் அவளைப்பார்த்து விளையாட்டாக அணங்கே! இதோ உனக்கு உணவளிக்கின்றேன் வாங்கிக் கொள்ளென்று சொல்லி அருகிலிருந்த வில்வமரத்திலுள்ள தழைகளைப்பறித்து அவள்கரத் தளித்துச் சென்றனன். அந்தப் புலைமாது வாங்கிக் கையாற்றடவிப்பார்த்து அது உணவு அல்லாததால் அத்தழைகளைப் பக்கத்தி லெறிந்தனள். அப்படி அவள் எறிந்த வில்வத்தழைகள், அரிய சிவபூசைசெய்து வினைகளை யொழிப்பவர் அர்ச்சிக்கும் மலர்போலப் பக்கத்திலிருந்த பழைமையாகிய ஒரு சிவலிங்கத்தின் முடிமீது வீழ்ந்தன பின்னர் அவ்விரவு முழுதும் அவள் அங்ஙனமே கூவிக்கொண்டிருந்தும் எவரும் உணவளித்தாரில்லை இங்ஙனம் சிவராத்திரிதினத்தில் கோகர்ணமென்னுந் தலத்தையடைந்து அற்றைப் பகலிரவு முழுதுமவள் பட்டினியிருந்ததாலும், நித்திரை யகற்றியதாலும், வில்வத

தழைகளைச சிவலிஙகநாயகன் முடிமீது எறிந்ததாலும் அவ ளது ஆகாமியம் சஞ்சிதமென்னும வினைகளைப் பற்றறவொழித் துப புனிதையாயினள்.

பின்னர் அப் புலைமாது பலநோயகளினு மிகுநது பசி நோய் வருத்தியதால அவ்விரவு முப்பது நாழிகையை முப்பது யுகமாகக கழித்துப பொழுது விடிநதவுடன சோறு இரப்பத ற்கு அவவிடததையகனறு முன்போல மற்றொரு புலைமட நதை கரததைப்பற்றிச சிறிது தூரஞ்சென்றனள் அப்பொ ழுது கொடிய பல பிணிகளோடு, பசி, மூப்பு எனனும் பிணிக ளும் பிணிததுவருதத அவள கைகால தளர்நது சூரியவெப் பம் பதிநத பூமியில விழுநது மரணவேதனையென்னும அள விலாத துன்பமுறறு இறநதனள

அப்பொழுது கயிலாயபதியானவா கருணைகூாநது தமது கணஙகளை யழைதது நீவிா நமது கோகானமெனனுந தலததை யடைநது, அஙகுததனது தூலவுடலை நீககும புலை மாதினை விமானததேற்றிக கொணாமின எனத திருவாய மலாநதனா.

உடனே அககணஙகள் பெருமான ஆஞஞையைச சிர மேறகொணடு அழகிய மணிகள பதிதத விமானததுடன புறப் பட்டு ஆகாய மாாககமாய்சசெனறு கோகானம் எனனுந தலத தையடைநது அபபுலைமாதினுயிரை, புணணியப் பயனை யருந துதறகுரிய தெயவீக சரீரததிற பொருததித தாம கொணர்நத விமானததிருததி, எடுததுககொணடு அநதாதுநதுபி முதலிய தேவவாததியஙகள் முழஙகப் புறப்பட்டு முன்போலக ககன மாாககமாய் விரைநதுசெனறு அழகிய கயிலையை யடைந்து அப்புலைமாதினை விமானததினின்றிறககி, கஙகையைச சடை யிற்றரிதத பாமேசுவரன சநநிதியில நிறுததினா பரமபதி அப் புலைமாதினைக கடைககணிதது நீ இமமலையினகணுளள மாதர் களோடு கூடி வாழ்நதிருப்பாயாக, பினனா தேவாகட்குங கிட் டுதற்கரிய மோடச சாமபிராசசிய மளிப்பெம எனத திருவாய மலாநதனா. உடனே அம்மாது உளமகிழ்நது பெருமான் ஆஞ் ஞையைச சிரமேறகொணடு அவ் வரையிலுளள மாதாகளோடு கூடி அத்தெய்வீக சரீரததோடு வாழ்நதிருநதனள.

சவுமினிச் சருக்கம் முற்றிற்று.

# கன்மாட பாதச் சருக்கம்.

ஏதமற் றுயர்ந்த சீர்த்தி யெம்பிரா னிரவின் காதை, யோதமற் றுளதொன் றுங்கட் குணர்த்துவன் கேண்மி னென்று, மாதவத் துபாந்த செய்ய மறைதெரி முனிவர் கேட்பச், சூதனும் றமுதமாரி சொரிந்தெனச் சொல்லலுற்றான் (௧)

பைம்புலி புலாத்துங் கொங்கைப் பாவையர் ரூடுங் காலச், சமபுலி வருந்த மாலைச் சமனெயி றென்னவேக, வெம்புலி யென்ன முன்னி மேற்றிசை தோற்று மென்கீற், றமபுலிக் கொழுந்தூ ரிஞ்சி யயோத்திமா நகரொன் றுண்டால் (உ)

---

(௧) ஏதமற்று = குற்ற மற்று, செய்ய மறை = சிறந்த, வேதம்.

(உ) பைம்புலி=சிறந்த சாந்தினை; புலாத்தும்=பூசும், அல்லது உலரச்செய்யும், ஊடுங்கால்=ஊடலைச்செய்யுங் கால்; அச்சமபுலவருந்த = அச்சமடைந்து வருந்தும படி, ஈண்டு புலியெனலிடைக்குறை; யாலைச்சமன் = மாலைக்காலமாகிய இயமனது, எயிறன்ன = வளைந்த பல்லைப்போலவும்; வேகவெம்புலி=வேகமாயப்பாயும கொடிய புலிபோலவும், முன்னி = எதிர்ப்பட்டு; மென்கீற்று அமபுலி=மெல்லிய பிளப்புவடிவாகிய சந்திரன்; ஊா=தவழ்ந்து செல்லுகிற; இஞ்சி=மதில்.

### கருத்து

பசிய களபத்தினை யணியும தனங்களையுடைய மடந்தையர் ஊடலைச்செய்யுங்காலத்து அவர் அச்சம் பொருந்தி வருந்துமாறு, மாலைக்காலமாகிய இயமனது வக்கிரதந்தம்போலவும், வேகமாய்ப்பாயும் புலிபோலவும, மேற்குத்திக்கிற்றோன்றி எதிர்ப்படும் கீற்று வடிவாகிய சந்திரன் தவழ்ந்துசெல்லும் மதில்களையுடைய அயோத்தி நகர் என்பதாம்.

மன்னர்தம் மன்ன னென்ன வருந்தச ரதன்பான் முன்னுட், பன்னக மீதிற் றுஞ்சும் பசுந்துழாய் முகுந் தன் மேற்ன்று, மநநக ரளிக்கும வேநத ஞதபன் குலத் தில் வநதோன், கன்னலந தருதிண் டோளான் கரு தலாக் கடியும வாளான் (௩)

குததிர மறவோர் செய்ய கோல்வளை யாமற கோளிப, பததிர சயன னென்னப பரிநதுயிர் பாது காப்போ, னததிர நயனச செவ்வா யிவையாக கன ங்க னன்னுன், மிததிர சகன ஞமம விளங்கிலை யலங் கல் வேலோன். (௪)

குன்றென வளாநது வீங்குங் குவிமுலைப் பவளச் செவ்வாய், மன்றலங் கோதைககோதை மதயநதி யெ ன்னு மாதைத், தன்றடஞ செஙகை பறறிச சடங்குசெ ய் தழலசான் ருக, முன்றவ முடிவா ன மனறன முடி த தவன் முயஙகு நாளில (௫)

---

(௩) வரும் = தோனறிய; துஞ்சும் = தூஙகுகிற; தோன் றும்=அவதரிதத; கலநலம=மலையின்றன்மை பொரு நதிய; கருதலா=பகைவர்; கடியும்=கொலலுகிற.

(௪) குத்திரம் அற = வஞசனை நீங்க; ஓா = ஒப்பற்ற; செயய கோல=செஙகோல்; கோளி = ஆலமரத்தின்; பத்தி ரம = இலை; அததிரநயனம்=அம்புபோன்றகண்ணை யும்; மித்திரசகன நாமம் = மித்திரசகனன் என்னும் பெயரையுடைய; இலை=இலைவடிவினதாகியும்; அலங கல் = மாலையைததரிக்கப் பட்டதாகியும விளங்கும்; வேலோன்=வேலாயுதத்தை யுடையவன்.

(௫) அம் கோதை=அழகிய மாலையை யணிந்த; கோதை = கூந்தல்; சான்ருக=சாட்சியாக; முன் தவ வடிவால்= முன்செய்து முடித்த தவத்தினுல்; முயங்கும்=தழுவி வாழும்.

விலங்குபுள் கலங்க மாய்க்கும வேட்டமேல் விரு ப்ப முற்றி, யுலங்கெழு வயிரத தோளா ளொண்மலா பொதுளிப் பூத்த, பொலநதரு சினைகள வானம போனவெங் கானம போவான், பலங்கொள்கா ழகப் பட்டாடை பட்டிகை மருங்கிற சேர்த்தி (௬)

செஞ்சுட ரெறிக்கும் செம்பொற செழுமணி மகுட நீக்கிக், குஞ்சிபூந் தொடையிற் சூழ்ந்து குல விட விசித்துக் கூர்மை, விஞ்சிய சுரிகை சேர்த்து வெ றுக்கையி னமைத்த பசுமை, மஞ்செனத் தோற றஞ சோதி மரகதக கவச மிட்டு (௭)

(௬) வேட்டமேல = வேட்டையாடுதலில்; உலம் = கல்லு ருணடை; கெழு=ஒதத (இடைச்சொலலுமாம்); வயி ரம்=பலம்; ஒள் மலா=அழகிய புஷபஙகள; பொது ளி=நெருங்கி, பூத்த = மலர்ந்த, பொலந்தரு=அழகு பொருநதிய; சினைகள்=கிளைகள்; வானமபோன= வானததையளாவிய, போவான் = போகவேண்டி, பலஙகொள் = வலிமை பொருநதிய (அருத); காழ கம = கருநிறமுள்ள; பட்டு ஆடை=பட்டுவஸதிரம, பட்டிகை=கசசைப்பட்டை.

(௭) செஞ்சுடா எறிக்கும = சிவநத ஒளி வீசுகிற, செம பொன்=சிவந்தபொன், செழுமணி=அழகியமாணிக கங்கள்பதிதத; குஞசி = குடுமியானது, பூநதொடை யில=பூமாலையால், சூழ்ந்து=சுறறப்பட்டு, குலவிட= விளஙக; விசிதது = அதை இழுததுககட்டி; கூாமை விஞ்சிய = கூர்மையதிகரிதத ; சுரிகைசோத்து = உடைவாளை தரித்து; வெறுககையில அமைதத = பொன்னாற்செய்யப்பட்ட; பசசைமஞசென = பசிய மேகம்போன்ற; கவுசமிட்டு = மூடியைத் தேகத்திற் றரித்தும்.

கைபபுடை கட்டி வெணணிற கடுஙகணைத தூணி தூக்கி, மைபபுடை வரையுங கண்ணா நுதனிகா வரி வில வாஙகி, மெய்பபுடை மனங்கா லொததுு விரை யுமைங கதியிற செலலு, நெய்பபுடை மேனி மேக நீனிறப பரிமேற கொணடான (அ)

சஙகொடு படகங கொமபு தவிறுடி தழுஙகி யாா பப, வெஙகொடுங கொலைசெய் வாளி விலலொளி விளஙகும வைவே, லஙகவை தரிதத தானை யளவில சூழ மண்ணிற, பொஙகுநுண் டூளி யோரெண் புலம புக விசுமபு போாபப (௯)

பெருமபுரி வலைவாா கூநதற பிடியினளு சுமநது செலல, விருமபுறு வேடா கையில விளைநதெதிா குறை நகு ஞாளி, யிருமபுறு தொடரிற பூட்டி யீாததனர்

(அ) கைப்புடை = கைககவசம; வெணனில = முதுகில்; தூணி = அம்புப்பெட்டி; புடை = ஓரத்தில்; மை வரையும் = மை தீட்டும்; மெயப்பு உடை = மெசசுதலை யுடைய; மனம் = மனோவேகத்தையும்; கால் = வாயு வேகததையும்; ஒதது = நிகாத்து; ஐஙகதி = ஐந்து வகை நடை, அஃதாவது: மநதகதி, மயூரகதி, வியாக கிரகதி, இடபகதி, மற்கடகதி என்பனவாம்; நெய்ப் பு உடை = பளபளப்புள்ள, மேனி = தேகம்; நீனிறம் = நீலநிறம்

(௯) படகம் = பமபை; கொம்பு = ஊதுமவாததியம்; தவில் = ஓா பறை; துடி = உடுககு; தழங்கி ஆாப்ப = இணைந்து ஒலிகக; வெஙகொடும் = மிகக்கொடிய; வை வேல் = கூர்மையுள்ள வேல; அவை = அவ் வாயுதஙகளை ; தானை = சேனை; பொஙகு = கிளம்புகிற; நுண் தூளி = மெல்லியதூசி; ஓர் எண் புலம் புக = எட் டுத்திக்குகளையும் அடையவும்; விசும்பு போாப்ப = ஆகா யத்தை மறைக்கவும்.

செல்ல வல்லே, கருமயிர் தொடையான் கானச்
சூழல்வாய்ச் சென்று புகுந்தான். (கo)

வேறு.

வலைவார பல நிலையாநெடு வானூடு வளைப்பார்,
சிலைகோலினா சிறுநாணொலி திசையேற விடுப்பார்,
கலைமான்மரை முயனீடிய களிறோடு களிற்றின், றலை
போயற விறனமீளிகள் சரமாரி தொடுப்பார். (கக)

கொடிகொண்டிடு தருவிற்படர் கொமபேறி விழி
ப்பார், மடியுஞசெவி வளைவால்கல் வாய்நாய்கள் விடுப்
பார், தடிகொண்டெறி தருவாசுழல் தழலினக லுகை
பபார், பொடிகொண்டிடு நிலனிறசில பொறிநின்று
புதைப்பார். (கஉ)

---

(கo) பெரும்புரி=பெரியபுரிகளாற பின்னிய, வார் கூநதல=
நீணட பிடரிமயிாகளையுடைய, பிடி இனம= பெண
ஒட்டகம;விரும்புறு=வேட்டைதொழிலைவிரும்பும;
எதிா=எதிாதது; ஞாளி=நாய; இரும்புறுதொடா =
இரும்பினுற செய்த சஙகிலி; ஈாததனா செலல=இழு
ததுசசெலல;வல்லே=விரைவாக; கானம் சூழல்வாய
=காட்டினிடததில

(கக) பல வாா வலை=நீண்ட அநேக வலைகள்; நெடு வானூடு
= நீண்ட வானில்; நிலையா வளைப்பார்= உறுதியாக
வளைததுககட்டுவாா; சிலை கோலினர் = விலலைவளை
தது; சிறு நாண் ஒலி = விலலிற் கட்டிய கயிற்றின்
சததம்; திசையேற = எட்டுத்திககுகளையும் அடைய;
விடுப்பார் = கையினுல் மீட்டுவர்; முகம் நீடிய களி
றோடு=ஆண் பன்றியோடு; களிற்றின்=யானையின்;
தலைபோயற=தலைகள்அறுமபடி; விறன் மீளிகள் =
சிஙகமபோன்ற வேடர்கள், உவமையாகுபெயா.

(கஉ) கொடிகொணடிடு=கொடிகள் படர்ந்த; படர்=விசாலி
த்த; விழிப்பார் = பாாப்பர்; எறிதருவாா = எறிவா;
சுழல்=சுற்றுகிற; தழலின்=கவணினுல; கல்லுகைப்
பார்=கல்லைஎறிவர்; பொடிகொண்டிடு=புழுதியுள்ள;
பொறி=யந்திரம்; புதைப்பர்=நடுவர்.

அடல்சேருழை படர்தாரியி னடிதேடினா தொ டர்வார, மிடல்சேர்தரு மிருகாரியை விறல்வேலினி லெறிவார், வடவாமுக வனலாசின வலுநீடுகி ருளி யத், துடலூடுற வடிவாளிக ளுடனேவினா விடுவார் ()

வருமித்திரன மாபுற்றிடு மனனமுற்றரி யலா போர், பொருமித்திற சகனுறமொரு புரிவிற்றனி குனி வித, துருமிறமொடு கணையிறபல மிருகததைை யொறுத துத, தருமித்திற லெவரிபபுவி தனிலொபபென நின் றுன். (கசு)

வேறு

இவ்வண்ண நெடுங்கானி லடுமவேட்டம புரிநதிடு மவ் வெலலேகால, மைவண்ணத தடலரக்க ரிருவரொரு

(கரு) அடலசோ = வலிமையுளள ; உழை = பெணமான்; படர் = சென்றிருககிற; தாரியின = வழியில; அடி தேடி = காறசுவடுபறறிததேடி; தொடாவாா = தொடாநது செலலுவா ; மிடல = வனமை; சோதரு = பொருநதிய ; மிருகாரி = சிஙகம ; வடவாமுக அனலாா = வடவாமுகாககினியையொதத ; சினம் = கோபததையும; வலு நீடு = வலியிகுநத, உகிா = நக ததையும் உடைய; உளியம = கரடி, உடல ஊடுற = உடலிறறைககு; வடிவாளி = கூரிய அமபு; ஏவினர் விடுவார் = ஏவி விடுவார்.

(கசு) வரும = உதிக்கின்ற; மித்திரன் = சூரியனது, மரபுற றிடு = வமிசததிற் பிறநத; மனன் = மன்னன், முன் = முதன்மையாக; அரியலா = பகைவரோடு; போா பொ ரும = யுததஞ்செயகிற; உறறு = வேட்டையிற் பொரு நதி; ஒரு புரி வில = வரிநது கட்டிய ஒரு விலலை; தனி = தனியாக; உரும் இன = இடிபோல; தொடுகணை யில் = தொடுக்கும் அமபினுல்; இததிறல = இவ வல்ல மைக்கு; எவர் = யாவா; இப் புவி தனில = இவ்வுலகில்; ஒப்பென = ஒப்பென்று சொல்லும்படி.

வயிற்றுதித்தோர வந்து தோன்றிப, பைவண்ணப்
பெரும்பாந்த ளேந்துலக மொருகுடைக்கீழ்ப் பாது
காக்குஞ், செவவண்ணக கதிரவேலோ னுடன்றருககி
நெருக்கியமா செய்கின் ஞரால் (கடு)

அந்நிலைகண் டன்னவரின் முன்னவனைத் துரந
தரச னங்கை வாளாற, சென்னிதுணித தனன்குருதி
நீரோட வாங்கதனைத தெரிய நோககி, யிந்நிலையில
வெலறகரிதென றிளையோனும வஞசகஙக ளியற்றியா
னே, பின்னிவனை வெலவனென மீண்டோடி மனிதரு
ருப பெறறு வநதான (கசு)

வநதரசன் றன்னிருதா டொழுதெழுது மாஙக
வனுன் வரவே தென்னச, சநதணிகுத திரபபுயமித
திரசகனே யுனதேவல சலிபபிலாம, விநதவுட னுள்ள
ளவு மிழைததிடுவா னெண்ணிவநதே னென்ன முன
னங், கொநதழலி லடிசிலடும வாலுவாதந தொழில
வற்குக கொடுததான மனனே (கஎ)

---

(கடு) அவ் வெல்லை = அககாலததில; கால மை வணணதது = மாரிகாலதது மேகமபோன்ற நிறததினையுடைய, அல லது ஆலகாலமபோறகறுத்த நிறததினையுடைய எனி னுமாம்; தோன்றி = எதிாப்பட்டு; வண்ணப்பை = அழ கிய படமுடைய; பெரும் பாநதள் = பெரும் பாம்பு, (ஆதிசேடன்); செவ்வணணம = சிவநதநிறமாகிய, கதிா வேலோன் = ஒளியுள்ள வேலைததாஙகிய மித்திரசக னன்; தருககி = இறுமாநது, நெருககி = வருத்தி.

(கசு) முன்னவனை = மூத்தவனை; துரநது = தரததி; குருதி நீா = இரததம, (இருபெயரொட்டு); வெலற்கு = வெல்லுதற்கு.

(கஎ) சநது அணி = சநதனம் அணிநத; குத்திரம் = மலையை யொத்த; கொநது அழல = அககினித்திரள்; அடி சில் = சோறு; அடும் = சமைசகும்; வாலுவா = சமை யல் வேலைககாரா

வன்புலஞ்சா னனம்பயிலும வனநீங்கி யயோத்தி நகர் வநது தாங்கும, பினபுலஞசெய திரடோளான் மதயநதி யுடன்வாழ்விற் பெருகு நாளிற, றெனபுலஞ சென் றடைநதபிதிர்க கடன்கழிக்குந திவசமுறச சிந தை மேவுந, தன்புலங்கொண் டுததாததிற சாலிதவன் வரவழைத்துத தாளிற் றாழ்நதே (௧அ)

ஆசனததி லிருததியபின னருக்கியபாத் தியமுத லாச சனேகளாற்றிப, போசனததுக் கெழுநதருளப் புரிதியென வருநதவனும போநதபோதி, னீசனெனத் தகுநிருத னடுமமுதத தொடுதனது நினைவின் வண் ணம, பாசனததின் மனிதருடற றடியரிநது சமைதத ததனைப படைததிட்டானே (௧௯)

வண்டுபடும பசுநதுளபந தொடையான்வெள் விடையானருண் மலாக ளுளளந, கொண்டுபெருந தவ மியற்றும்வசிட்டமுனிமுனிவுடனிக்கொற்ற வேநதன்,

---

(௧அ) வன்=வலிமையுளள; புல=புலி; அஞசானனம=சிங கம்; பயிலும்=வசிககும; தாஙகும் = பூமியைச்சுமக கின்ற; உலம் செய = உருணடையாகிய கலலேயொத்த; பெருகும=மேமபடும; தென்புலம=பிதிரத தேவாகள வசிககுமிடம; திவசம = நாள; சிநதைமேவும=விரும்புகிற; தன்புலம கொண்டு=தனது மனத்தினுல்; உததரததில = வடதிசையிலுள்ள; சாலி = அருநததி; தவன்=நாயகனை அஃதாவது வசிஷடனை.

(௧௯) அருககியம=கைககழுவக கொடுககும் நீா; பாததியம்=கால்கழுவக கொடுககும் நீா; நீசனெனத் தகும்=புலேயனென்று சொல்லத்தகக; நிருதன் = இராக்கதன்; அடும் அமுதம்=சமைதத சாதம; பாசனம்=போசன பாததிரம; தடி=மாமிசம.

றொண்டுபடு மிவனுடனிந் நரருனிக் கலத்தினிடச்
சொன்னா னென்று, கண்டுகன்று பொறிகாலக் கண்
ணிணைகள் சிவந்துமிக்க கனன்று நோக்கி. (உ0)

மறுவையவித் தொளிர்முழு மதிக்கவிகைத் தனி
ச்செங்கோன் மன்ன முந்நீ, ரறுவையுடைய பெரு
நிலத்திற் றிருவிழந்து கருநிறங்கொ ளரக்க யாக்கை,
பெறுவையெனச் சபித்திடலு மனத்தழுங்கி யரைக்
கணத்துட் பின்பு தேறித், தெறுவையயிற் கரனாயா
மித் திரசகனா மனமதனிற் சினமீக் கொண்டே (உக)

மனாதிகளிற் பிழைத்தறியா வெனைச்சூளிட் டனை
யுனையும் வைவே னென்னாத, தனாதிதழ்த்தா மரைக்கர
த்துச் சலங்கொண்ட சலங்கண்டு தாழ்ந்துதேவி, திரு
திபகோத் திரமுதலவ தேசிகனே மாசினமறை செப்
புந் தெய்வ, மெனாதினீ சபித்தற்கா தெவரரசா குர
வரைச்சூ ளிட்டா ரென்றே (உஉ)

---

(உ0) வண்டு படும் = வண்டுகள் மொய்க்கும், முனிவுடன் = கோபத்தோடு, கொற்றவேந்தன் = வெற்றி பெற்ற அரசன்; தொண்டுபடும் = ஊழியஞ்செய்யும்; கண்டு = எண்ணி; கனன்று = கோபித்து

(உக) மறுவையவித்து = களங்கத்தை யொழித்து (இல்பொருளுவமை); மதிக்கவிகை = சந்திரவட்டக் குடையை யும்; தனிச்செங்கோல் = ஒப்பற்ற செங்கோலையும் உடைய; மன்ன = அரசனே, முந்நீர் = கடலை; அறுவை யுடை = புடவையாக அணிந்த; பெருநிலம் = விசாலித்த பூமி; திரு = அழகு; யாக்கை = சரீரம்; அழுங்கி = வருந்தி; தெறு = கொல்லுகின்ற; வை = கூர்மை பொருந்திய; அயில் = வேலைத்தரித்த; சினம் மீக்கொண்டு = கோபம் அதிகரித்து.

(உஉ) மனாதிகளில் = மனமுதலிய கரணங்களால்; பிழைத்தறியா = தவறிழைத்தறியாத; சூள் = சாபம்; வைவேன் என்னா = சபிப்பேன் என்று; கரத்துச்சலங் கொண்ட = கையில் நீரெடுத்த, சலங்கண்டு = கோபத்தைக்கண்டு; தேவி தாழ்ந்து = மித்திர சகனன் மனைவி

தன்மாடத் தளிரியளின் றாளைத்திடலும பாணி யிற்கொள் சாபப்பாணி, பொன்மாட வயோததிருகாப புரவலன்றன குரைகழற்றாட் போதிற பெய்தான், சொன்மாட மெனக்கறுத்தத தககணத்தத நீரமையினுற சுடாவேல வேநதன, கனமாட பாதனெனப பேர்படை த்தா னீரபடைத்த கடற்பா ரெஙகும (உ௩)

வேறு.

கனறிய வெகுளி நீஙகிக் காவல னிறுப முன்ன, ரொன்றிய தவததின மேலா முறுவனுங் கோப நீஙகிப், பின்றிய வரக்கன செய்த பிழையிது பிழைதொன் றென்பா, லினறிவன புரிநத திமை யினறென யோ கிற றோநதான (உ௪)

---

அவனை வணஙகி; திருதிபன்=பகலுக் குரியவனுகிய சூரியனது; கோத்திர முதலவ=வமிசததிற்குத்தலைவ னே!; தேசிகனே=குருவே, மாசில் மறை செப்புமதெ ய்வம=குற்றமறறவேதஙகள் கூறும்தெய்வமாம், என்று=என்று; எவர் அரசர்=எநத அரசா, குரவரைசசூ ளிட்டார்=குருவைச சபிததனா

(உ௩) தன மாடம= தனது வீட்டு, தளிா இயல= தளிரின் றன்மையையுடைய மடநதை (அஃதாவது மதயநதி) அன்மொழிததொகை; பாணியில=கையில்; கொள்= எடுததுககொணட; சாபப்பாணி = சாபமிடுதற்குரிய நீரை; தாள் போதில் = பாதமலரில்; பெய்தான் = விட்டான்; சொல = எடுதததுசசொலலுகிற; மாடம (மாஷம) என = உளுநதுபோல; கறுத்தது = கரு நிறம் பொருநதிற்று; அககணததது = அநத க்ஷணத் திலே; அநநீர்மையினுல = அநதககாரணததிலுல்; நீா படைதத=ஜலம் பொருநதிய; கடல் பார்=கடல் சூழ் நத உலகம.

(உ௪) கன்றிய வெகுளி=முதிர்ந்தகோபம்; ஒன்றிய = பொ ருநதிய; உறுவனும்=இருடியும், பின்றிய=முன்னர் யுததத்தில் பின்சென்ற (தோற்ற); பிழைத்து=தவறி; ஒன்று இன்றென = ஒன்றுமில்லையென; யோகி னுல்=யோகத்தினுல்.

விறசர நுதறகட் செவவாய் விரிதிரை யமுத மா
னுஞ், சொற்சர சுவதி கேளவன ரோனறலமான றட
நதோ மனனே, யற்சர ஞகிககானி லடைநதுசஞ் சரி
த்தீராறு, வற்சரங் காறு நிறறி மாறுமுன சாப மெ
ன்ருன் (உரு)

உளநதனி லுணர வொண்ணு வூழ்வினை வசத
தாற் கூத்தா, வளங் கொண்முற் கோலநீஙகி மற்றொ
ரு கோலங் கொண்டு, துளஙகிடத தோறறல போலத
தொலலுருக கரநது திஙக, ளிளம பிறைக குழவிபோ
லு மெயிறுடை யரகக ஞனை (உசு)

மைககணத திதழ்பபூங் கோதை மனைமடந தை
யாக ளெலலாந, தெககணத தியம னைனனச சிநதை

(உரு) வில=வில்லையும; சரம் = அமபையும ஒதத, நுதல் = புருவததையும; கண=கண்ணையும, விரிதிரை=அலை யினையுடைய விரிநத கடல், சினை யாகுபெயா; மா னுஞ்சொல=ஒத்த மொழி; தோன்றல = புத்திரனுகி ய வசிட்டன்; மான் = குதிரை கட்டிய, தடநதோ= விசாலமாகிய தேரினையுடைய, மனனே = மன்னனே; அல் சரன்=இரவில சஞசரிப்போன் (இராககதன); வற்சரஙகாறும = வருடம வரையில; நிறறி = இருப் பாயாக; மாறும் உன்சாபம்=உனககு யானிட்ட சாபம் (அதன்பின்) நீஙகும்.

(உசு) கூததா=கூததாடுவோா; வளஙகொள் = அழகு பொரு நதிய; முற்கோலம=முன்வடிவம்; துளஙகிட=விள ஙகுமபடி; இளம் பிறைக் குழவித் திஙகள்=மூன்றும பிறையாகிய இளஞசநதிரன்.

(உஎ) மைககண் = கறுத்த கண; அதது=சிவநத; இதழ் = உதடு; பூஙகோதை=புஷ்பமாலையைத தரிதத; மனை =கன்மாட பாதனது மனைவியும்; மடந்தையர்=அவ ளது தோழிகளாகிய மற்றைப்பெண்களும்; வெருக் கொடு = அசசமுற்று; அருந் தவககிழமை பூண்ட = அருமையாகிய தவவுரிமை பூண்ட; மெய்க்கணத தவர் = தேகத்தினையுடைய முனிவர் கூட்டஙகள், அல்லது சத்தியந்தவருத முனிவர்கூட்டங்கள்.

பில் வெருக்கொண் டேகி, யக்கணத் தகன்று போனு
ரருந்தவக கிழமை பூண்ட, மெய்க்கணத தவர்கள் சா
பம யாவரே விலக்க வலலார் (உ௭)

வேறு.

வடிகக்குரன் மணியா ழிசைமுரன் றறுகால வரிச
சுரும் பரற்றுபூ மாலைக, கடிகக்குரன மடவார பாறகடற
றிரையின கறறைவெண கவரிகா லைசைபப, விடிகக்குர
ன் மடஙகல சுமநதபே ரணையி லிருநதர சியறறிய
விறைவ, னடிகக்குர னிகராங் கரிகொடு வரிசே ரடவியி
னக்கணத தடைநதான. (உ௮)

பாய்கலைப புரவிப பவனனு மியங்காப பசுநிறப
புரவியந தேரோன், காயகதிர நுழையாக காடடிடை

(உ௮) வடிக்குரல = வடிததத தேன்போலுந தொனியையுடைய; மணியாழ் = அழகியயாழ்; இசைமுரன்று = இராகத்தைப்பாடி, அறுகால் = ஆறுகாலகளையுடைய; வரிசசுரும்பு = கோடுகளுள்ள வண்டு; அரற்று = ஒலிக்கும்; கடிக்குரல் = வாசனையுள்ள கூந்தல்; பாற்கடல் திரையின் = நிறததினுலும் அசைவதினுலும் பாற்கடலின் அலையையொத்த; கற்றை = திரள்; இடிக்குரல் = இடி போன்ற தொனியுடைய; மடஙகல் = சிம்மம்; அடிக்கு = கால்களுக்கு; உரல்நிகராம் = உரல் ஒப்பாகின்ற; கொடுவரி = புலி.

(உ௯) பாய் = குதிததோடுகிற; கலை = கலைமானை; புரவி = வாகனமாகக்கொணட; பவனன் — வாய்வுதேவன்; இயஙகா = செல்லாத; கணம் எலாம் = கூட்டமெல்லாம்; தீயவாளரக்கன் = கொடிய வாளாயுததததையுடைய இராக்கதன்; திரிதரு = திரிகிற; திருததக = அழகு பொருந்த; புதுக்கடி = புதுமணம்; தூய = பரிசுத்தமும், வாள்நகை = ஒளியுமுள்ளபறகளையுடைய பெண், அன்மொழிததொகை; தோன்றல் = ஆடவன்.

விலங்கின் கணமெலாங் கொன்றுகொன் றருந்தித்,
தீயவா ளரக்கன் றிரிதரு காலைத் திருத்தக்கப் புதுக்கடிப்
புரிந்த, தூயவா ணகையுந் தொழுகுலத் துதித்த தோ
னறலு மாங்குறக் கண்டான். (உகூ)

கண்டவா ளரக்க னுவகைமீ தூரக் களித்தன னெ
ளிக்கதிர் மதியிற், றுண்டவா ளெயிறு துலங்கிடந் கைத்
துத்த துண்ணெனந் கணணி யொண ணிறப்பூ, முணா
டகா சன்னறன் குலத்திலவந் துதித்த முனிவரன் புத
லவனைப் பற்றிக், கொண்டவா வுடனவெண ணிணத்
தடி யருந்துங் கொள்கையிற் கொலலுவான் றுணிந்
தான். (௩௦)

அன்னகா லையிலெங் கவன்முகத் தோகக்கி யந்தண
னருந்துணைத் தேவி, மன்னகேள் சால கடங்கடா மர
பில வந்தனை யலைதீ முனிந்து, முன்னமே யிவனைக்
கொலலுவை யாயின முளிதரு விறகுதீ மூட்டி, யென
னதா ருயிரு மிழப்பனின் றெனக்கோ ருயிரப்பலி யீதி
யென்றிரங்கி. (௩க)

---

(௩௦) மதியின்துண்டம்=சந்திரனது பிறைபோன்ற; துண
ணென=திடீரென்று; நணணி=பொருந்தி; ஒள்=
அழகிய; நிறப்பூ=நிறத்தினையுடைய புஷ்பம்; பற்றிக்
கொணடு=பிடித்துக்கொண்டு; வெண்ணிணத்தடி=
வெண்மையாகிய கொழுப்புள்ள மாமிசம்; கொள்கை
யில்=செய்கையால்.

(௩க) சாலகடங்கடர்=இராக்கதர்; முளிதரு=உலர்ந்த; என்
னது ஆருயிரும் இழப்பன்=எனது உயிரையுமிழப்
பேன்; உயிரப்பலி=உயிர்ப்பிச்சை; ஈதி=கொடுப்பா
யாக.

தனறுணைத் தடங்க ணீர்முலைத தடத்திற் ரூரை விட் டொழுகநின றிரநதே, யன்றுரைத் திடுஞ்சொற் செவிகொளா ளுகி யநதணன் மைநதனை விரைவிற், கொனறுடற் குருதி பிழிநதுமுன் குடித்துக கொழுந தசை கறிததகல வாயின, மென்றுட னருந்திப் பைந் தொடிக கெதிராய வெள்ளெலுமபனை ததையு முமி ழுநதான (௩உ)

என்செய்வா ளுமிழ்நத வெண்பெலா மடியிட டெடுததன ளெயதியவ வெனபை, மின்செய்தீ யத னிற பெயதிது செயத வேநதர்கோன றனபதி மேவி ப, பொனசெய்பூண முலையாா முலைநலப போகம புண ருநா ளிறககவென றுருதது, முனசெயதீ வினையாற் சாபமீ திடடு முழஙகழ லூடுபுக கவிநதாள. (௩௩)

வேறு.

புரமுனியும பரமனிரு பதபபோது முப்போதும போறறுந தெயவ, வரமுனிவன சாபமகன றரசனிரு

(௩உ) கறிதது=கடித்து; பைந்தொடி=பெண.

(௩௩) மடியிட்டு=மடிகோலி;மின்செய் தீ=ஒளிவீசுகிற நெரு ப்பில்; சாபம் ஈது இட்டு=இநதசசாபத்தைக் கொடு தது; முழஙகு அழலூடு=ஒலிக்கின்ற நெருப்பில்; புக்கு=புகுந்து; அவிந்தாள்=இறந்தாள்.

(௩௪) புரம முனியும=திரிபுரததை எரிததருளிய; பதப்போ து=பாதமலர்; தெய்வ வர முனிவன்=இறைவனது ஆசீர்வாதம்பெற்ற இருடி; இருமருப்பு=இரணடுகோ டுகளையும்; ஒரு மும்மதம்=கன்னமதம், கபோலமதம், பீஜமதம என்னும் மூன்றுமதமும்; நால்வாய்கருஞ சரம்=தொஙகுகின்ற வாயினையுடைய யானை; முனி =யானையின் கன்று; வன்பிடி=வலிமையுள்ளபெண ணுனை; திரிசரிகள்=சஞசரிககிற வழிகளை; அரிதுரு வும்=சிஙகஙகள் தேடும; தடம்=விசாலித்த; கான் நீங்கி=காட்டையகன்று; கரம்=கையில்; முனியும்= வில்லும்; கணையும்=அம்பம்.

மருப்பொருமும் மதநால் வாய்க்குஞ், சரமுனிவன்
பிடிதிரிச ரிகடெரிநதே யரிதுருவுந தடங்கா னீங்கிக்,
கரமுனியுங் கணையுமில்லாக காமனென வயோத்தி
நகர் கடிதிலுற்றான். (௩௪)

நெடிதுதினம் பிரிநதகனற நீரமையினுற றிரண்ட
திண்டோ ணிருபனானு, மடியிணையா மலரகள் கன
றிச செபபூர விரைநதுநடந தனபினோடும, பிடியத
னை நாடிவரும் பெருநதடககைக களிறெனவேள் பெ
ய்யும வெயய, வடியயிலவா ளியினுடைநது வருநதி
யநத மதயநதி மனையுட புக்கான (௩௫)

வநதவடன றணைமுலைகண் மருவுவான் றுணிந
திடலு மனனகானி, லநதநிசி சரனுகி முனிவனைக
கொன் றனையதனு லவனறனறேவி, வெநதழலின மிக
சசிறி யுன்மனைவி மாரமுதலா விளமபு மாதர, தநதன
மீ துறததழுவி லிறததியெனக கொடுஞசாபஞ் சாற்றி
வீநதாள் (௩௬)

ஆதலினு லெனையணைதற் கடாதுனககென் றவள்
கூறு வரசன் மோகக, காதலினுலிடைநது செமபொற

---

(௩௫) நிருபன் = அரசன்; சேப்பு ஊர = செந்நிறம் உணடாக; பெருந் தடக்கை = நீணடு பருத்த துதிக்கை; வடி = வடிக்கப்பட்ட; உடைந்து = தோற்று.

(௩௬) அந்த = மேற்குறித்த; நிசிசரன் = இராக்கதன்; இறத்தி = இறக்கக்கடவாய்; வீந்தாள் = இறந்தாள்.

(௩௭) அமுதம்பெற்று = அமுதத்தை யடைந்தும்; அருந்தக் கடன் = உண்ணும் செயல்; நோதகவு = துன்பம்; இல்லம் = மனைவி; உவை = இவை; நுனித்து நோக்கின் = கூர்ந்து பார்த்தால்; சாதகருக்கு = முதநிநெறி நிற்பவருக்கு; தவமீக்கொண்டு = தவசெயலைப்பூண்டு.

கலத்தமுதம பெறறருநதககடனி லானபோ, ஞெதக
வுற் றிலமிலலாற கருமகபபே றிலலேயுவை நுனிதது
நோக்கிற், சாதகருக கிகபரததிற் பலன்கிடையா தெ
னத்தேறித தவமீக கொண்டே. (௬௭)

ஒருமனமா யிருவினையின் றுவக்கறமுக குறும்
பெறிநதிட் டுயா நாலவேதந, தருபொருளா யைநத
விதனைந தழனுபப ணினறுபெருந தவஙக ளாறறிக்,
கருதருமா மறலிவலே கடநதுமுககா லமுமுணாநது
கணிக்க வலல, பொருவருமா முனிவராக னனுமதி
கொண டரியதவம புரியு மேலவை. (௬௮)

வேறு.

கறைவிட முகுததல போலக காயசின மிகுதது
வானிற், பிறையெயி றிலஙகப பேழவாயப பேய்மக
ளொருததி பறறி, யிறைவனே வருதத வீதிங கென
னெனப பனனு தொன னூன், முறைதெரிந தருளுந
தெய்வ முனிவரை விளுவி னுனே. (௬௯)

---

(௬௮) இருவினையின் துவக்கற = புண்ணியபாவஙகளின் சம்பந்தம் நீங்க; முக்குறும்பு = காமம், வெகுளி, மயககம் என்பன; எறிநதிட்டு = ஒழித்து; வேதநதருபொருளாய = வேதஙகூறும் விதிப்படி; ஐந்தவிதது = ஐமபுலஙகளே யடக்கி; ஐந்தழல் = பஞ்சாக்கினி; நாப்பண் = மததியில்; கருத அரும = நினைததற்கரிய, கணிக்க = குறிப்பிட; பொரு அரும் = ஒப்பிலலாத; எல்லை = காலம்.

(௬௯) கறைவிடம் = கறுதத விஷம்; உகுததல் = சொரிதல்; காய்சினம் = வெதுப்புகினற கோபம்; மிகுத்து = அதிகரிதது; பேழ்வாய் = அகன்றவாய்; இறைவனே = அரசனே; அருளும் = சொல்லுகிற; தெய்வமுனி = தெய்வததன்மையுள்ள இருடி.

கணித்துமுக் காலந் தேருங் கடவுண்மா முனி
வர் துத்திப, பணித்தலைக் கிடந்த ஞாலம் பரித்தரு
ளரசே முன்னாட், குணித்தவா ளரக்க னுகிக் கோதில
வே தியனைக் கொன்று, பிணித்தவெம் பாவங் கண்டா
யலகையாய்ப் பிணித்த தென்றூர் (சo)

அப்பவந் தீரப்பா னெண்ணி யலைகடற் சேது
முன்னுச, செப்பருந் தீர்த்தம் யாவுஞ் சென்றுடன்
மூழ்கி மூழ்கி, யொப்பரும் பிரமன் றனை யுந்தியிற்
றந்த மாயன், பைப்பணிச் சடையான் வைகும் பதிபல
வணக்கஞ் செய்தான் (சக)

உந்துவெண் டிரைநீர் வேலி யுலகெலா முழந்து
சூழ, வந்துமப் பிரமகத்தி மாறிடா திருத்த லாலே,
யிந்துமண் டலம்போ யோங்கு மினுசிசூழ் மிதிலை ஞா
ஙகாக், கந்துகொல் களிற்று வேந்தன் கவலையுற் றிரு
ந்த காலை (சஉ)

---

(சo) கணித்து - சோதிடத்தாற் குறித்தறிந்து; தேருமா=உண
ரும்,கடவுண்மாமுனிவர்=தெய்வத்தன்மையுள்ள பெ
ருமைவாய்ந்த இருடியர்; துத்தி=படப்புள்ளியையு
டைய; பணித்தலை=பாம்பினறலை; குணித்த=குறிப்
பிட்டுச் சொல்லப்பட்ட; கொன்று பிணித்த—கொன்
றதாற் பற்றிய; பிணித்தது=பிடித்தது.

(சக) முன்னு=முதலாக; உடன்மூழ்கி=விரைந்து முழுகி;
பதி=க்ஷேத்திரம்.

(சஉ) வேலி=பூமி; உழந்து சூழ=வருந்திச்சுற்றி; ஞாஙகர்=
பக்கத்தில்; கந்துகொல=கட்டுத்தறியை முறிக்கும்;
களிற்றுவேந்தன்=யானைபோன்ற வலிமை பொருந்
திய அரசன், அல்லது யானையையுடைய அரசன
னினுமாம.

மாதவா மருங்கு சூழ வளரிள மதியஞ் சூடு, நா
தனிங் கிவனு மென்ன நானில மதிக்கத் தக்கோன்,
பாதபங் கயங்க ளேனும் பார்த்திவ னிருக்கும் பாங்க
ரக, கோதம னென்னு நாமக் குலமறை முனிவன் வந்
தான் (சங)

அன்றிருந் தவனைப் போற்றி யடிதொழு தங்கை
கூப்பி, நின்றிடும் வடிவேற் றானை நிருபனுக் காசி கூறி,
நன்றிருந் தனையோ வென்ன நவின்றாங்கின் முகத்தின்
சோதி, குன்றிய தியாது வந்த குறையெயாக் கறைதி
யென்றான் (சச)

திருந்துதி முற்றுங் கற்றோன் றிசைமுகற் குவ
மை சான்றோ, னருந்ததிக் காவி யன்ன வருண் முனி
யரக்க னாகி, வருந்துதி யென்னச் சாபம் வழங்கலால்
வந்த தென்னைப், பெருந்துதி கூறிப் பின்னு நிகழ்ந்த
வை பேச லுற்றான் (சரு)

அரக்கனாய் வன்றதி லன்று வந்தணற் கொண்ற
பாவ, மிரக்கமி லலைகை யாகி யிங்ஙனே தொடாத
லாயிலை, பரக்குமெண் டிசைதொறுந் திங்கள் பற்பல
படிந்து பொற்கோ, புரக்கவின் படைத்த கோயிற்
புண்ணிய தலஞ்சே விந்தேன். (சசு)

---

(சங) நானிலம் = நால்வகை நிலம் அவை குறிஞ்சி, நெய்தல், மருதம், முல்லையாம்; பார்த்திவன் = அரசன்; பாங்கர் = பக்கத்திலே; கோதமன் = கௌதமன்.

(சச) அன்று = அப்பொழுது; இருந் தவனை = பெரியதவத்தை யுடைய இருடியை; வேல் தானை = வேலாயுதத்தை யேந்திய; நிருபனுக்கு = அரசனுக்கு.

(சரு) திருந்துதி = தெரிந்துகொள்; முற்றுங்கற்ற = யாவுமுணர்ந்த; வருந்துதி = வருந்துவாயாக.

(சசு) பரக்கும் = பரவிய; கோபுரக்கவின் = கோபுர அழகு.

எண்ணருந தருமஞ செய்தே னீறினமநதிர நவி
ன்றேன, விண்ணவாக கவிக ணலகும வேள்விகள பல
வுஞ செய்தேன, பண்ணரும பாவ நீங்கப பெற்றிலே
ன் படிவ வுன்றன், கண்ணருள் பெறறே னுய்யுங கா
லமு முளதா மென்றே. (௪௭)

அன்னமா முனிவன றாய வடிமுடி சோததி நி
ன்ற, மனனவன றனனை நோககி வருநதலை மதியஞ
சூடும, பின்னலஞ சடையாற கனபு பெருககுநோன
புகட்குண் மேலா, யுன்னரும விரத மொன்றுண் டுண
ாநதிலை போலு மாணீ. (௪௮)

மாகமா மதியிற மறயநத மதியிறபன ஞனகாம
பக்கத், தேகநா யகனைப போறறி யீரிரு சாமந தோ
றுந, தாகமாம பசிககூண டுஞச றவிாநதுள த தொரு
மை கூரன, பாகமா லூரந தனனு லருசசியு னரநதை
நீஙகும. (௪௯)

வரையிலக காகத தொடட வாளிக டவறு தோ
ஙகித, தரைமிசை யடிதத கைதான் றபபிடா ததுபோ

---

(௪௭) நவின்றேன=ஜபஞ் செய்தேன்; பணணரும்=செய்த கொடிய, படிவ=முனிவனே!

(௪௮) தூயஅடி=பரிசுத்தம் பொருந்திய பாததனதை; முடிசேர் ததி=முடியிற்றரித்தது; வருந்தலை=வருந்தாதே; பின் னல=பினனிய.

(௪௯) பசிக்கு ஊண=பசிக்கு உணவையும்; துஞ்சல்=தூஙகு தல்; கூா அன்பாக=மிகுந்த அன்போடு; மாலூரம்=வில்வம்; உன் அரந்தை=உனது துன்பம்.

(௫௦) தவறு=தவறுதது போலவும்; தப்பிடாதது=தப்பாதது போலவும்; புரையற=குறைவின்றி.

லீசன், குரைகழற பதும நோக்கிக குறிததநோன்
பியறறி னைருற், புரையறப பலிககு மென்னுப புர
வலற் குரைததுப பினனும (ருO)

நறறல மதனிலிநத நவையிலா விரத நோறகிற்,
சறறல மிகுதி நனமை தப்திடுஞ சடுதி யெனனுக, குற
றமின் முனிவன கூறக குறிககுமத தலமு மெற்கே,
சொற்றரு ளைய வெனனக கௌதமன சொலல லுற
ருன் (ருக)

வேறு.

சொன்ன தலஙகளின் முன்னி வருநதிய தூயோய்நீ
யுன்ன வருங்கிரி மனன னளிததிடு முமைகூட
மின்னவி ரஞ்சடை முனனவ னனபொடு மேவுஙகோ
கன்ன மெனுமபதி யொனறுள தஙகது காணுயால ()

அததல னிறறகை முறறு முணாததிட வாரவல்லார்
முத்த நகைததிரு வுககிறை திககு முகததோனும
சிதத ரியககா மபககறு நறறவா சேணுடார்
நித்த மியறறு தவததின முயறசியி னிறபாரே. (ருங)

(ருக) சற்றல = கொஞ்சமல்ல; சடுதியெனனு = சீக்கிரததிலெ
ன்று; சொறறருள் = சொலலியருள்.

(ருஉ) முன்னி = விரைந்து அடைந்து; உன்ன = நினைத்தற்கு;
கிரிமன்னன் = பாவதராஜன்; அளிததிடும் = பெற்ற;
உமைகூட = உமையாளோடு.

(ருங) அததலனின் தகை = அததலததின பெருமையை; ஆர்
வல்லார் = எவர்வலிமையுடையவர்; திருவுக்கு இறை =
இலட்சுமிக்கு நாயகராகிய திருமாலும்; திக்குமுகத
தோன் = பிரம்மாவும்; சேணுடார் = வானுலகத்தவர்.

ஆடு முனிக்குழு வாயிர கோடி யரனசீரைப
பாடு முனிககண மெண்ணில சிததி படுததியோகிற
கூடு முனிததிரள பறபல வுறறிடு கோகனனம
வீடு பெறற்கினி யப்பதி யொப்புற வேறுணடோ. (ருச)

அததுடை மாதவா வானவா மானவ ராமேனோமா
சிததுடை யாரெவரு வககட மிககிடு திககானை
முததுடை வால மருபபணி மாாபின முரிதமதானகம
பததுடை யானகன முறபக லாசசனை பணவணி.

ஓாசிவ லிஙக முறுமபடி வானி லுயாநதோஙகு
மோபெறு வெளளி விலஙகலி னறறவ மேசெய்யக
காாபெறு கண்ட னரககா குலததிறை கைதனனிற
போபெறு லிஙக மளிததவ னேடிவை பேசுற்றான். (ருசு)

பாாதனில வைககி லெடுகக வொனறு பகாநதேமுன்
னூாதரு மூாதி யொழிநதனை கைககொடு றாமேவிச

---

(ருச) ஆடுமுனிககுழு=ஆடுகின்ற முனிவா கூட்டஙகள்; சிததி படுதது=சிததியடைநது; யோகிற்கூடுமே=யோகம்புரியும்; ஒப்புற=ஒப்பாக.

(ருரு) அதது உடை=நனனெறியுடைய, மானவர்=மனிதா; திக்கானை=அஷ்டதிககுக் கஜஙகளுடைய; வால அம மருப்பு=வெணமையும அழகுமுடைய தந்தததை; அணிமார்பின் முறிததோன=அழகிய மாாபினால் முறிததவனை; கம் பதது உடையான்=பததுசசிரசை யுடைய இராவணன்; அகல்=கழிந்த; முறபகல்=முனநாளில்

(ருசு) வெள்ளிவிலஙகலின்=கயிலையஙகிரியில்.

(ருஎ) உன் ஊர்தரும்=நீ ஏறிசசெல்லுகிற; ஊாதி=வாகனததை; ஒழிந்தனை=ஒழிததவனாகி; நேர்தரும் உனனை=யுததத்தில் எதிர்தத உன்னை,

சீர்தரு லிங்க மிதைப் பிரதிட்டை செயிற்பாரி
னோர்தரு முன்னே வெலற்குரி யார்பிற ரிலையென்றே.

வித்தக ஞேதி விடுப்ப வரக்கனும் விடைகொண்டே
சித்த முவந்து நெறிக்கொடு பாரிசை செல்போதிற்
புத்தமு தத்தினை யற்பொடு துய்த்திடு பொன்னுடா
மத்தக வேழ முகத்த கணேசனை வந்திதத்தே (ருஅ)

எண்டகு மீச னளித்த விலிங்க மிலங்கைக்கே [தே
கொண்டகல் கின்றனை யின்றெதிர் சென்றெரு கோள்செய்
தண்டரு தாணமலா நோவ நடந்திடை தடைசெய்ய
மண்டனி னீடிய மூடிக வாகன வருகெனமுா (ருகூ)

உற்றிடு வானவா சொற்றிட நானமறை யோனுகி
மற்றிர டோளவ வரக்கன வரும்பெரு வழிதன்னி
னிற்றிட மற்றவ னுந்தனி வந்தவ ணேருற்றான்
முற்றினி லற்பச லத்தை விடுக்க முடுகுற்றே. (சூ0)

அச்சிறு வேதிய னங்கை யிலிங்க மளித்தனனேன
மெய்ச்சிறு நீரிட மேவிய காலை விரைந் திங்ஙன

(ருஅ) விடுப்ப = அனுப்ப; நெறிக்கொடு = வழிக்கொண்டு; அற்பொடு = அன்போடு; துய்த்திடும் = உண்ணுகிற; மத்தகம = யானைத்தலை; முகத்த = முகத்தினையுடைய.

(ருகூ) எண்தகும் = தியானிக்கத்தக்க; இன்று = இப்பொழுது; கோள் = விக்கினம்; நீடியமண்டனில் = நீண்டவுலகத்து.

(சூ0) நான்மறையோனுகி = பிராமணனுகி; மல் = மல்லயுத்தஞ் செய்தற்குரிய; நிற்றிட = நிற்க; நேர்உற்றான் = எதிரில் வந்தான்; முற்றினில் = முதிர்ந்திருக்கிற.

(சூக) முச்சொலின் = மூன்று வார்த்தைகளால்; விளிப்பன் = அழைப்பேன; முன்னுயேல் = விரைந்து அடையா விடில.

முச்சொலி னின்னை விளிப்ப னதற்குமுன் முன்னையே
லிச்சிவ லிங்க நிலத்தி லிருத்துவ னென்றனல். (சுக)

அம்முறை யாக வரக்க னிசைந்தய லகல்போதின்
மும்முறை கூவின னெய்தில னையிரு முடியோனு
மெம்மிறை நீதி யிதென்று கணத்தவ னெய்தாமுன
மைம்முறை யாயொளிர் கண்டனை மண்டனில்வைத்திட்டான்.

பின்பவ் வரக்கர் பிரானவ னுற்றழல் பெய்கண்ணன
நன்புவி யிற்சிலை யோடிய தென்று நடுக்கெய்தித
துன்போடு பத்திரு தோள்வலி கொண்டு தொடர்ந்தோடி
வன்பொ டெடுத்திது மாபெல மென்றன வலியில்லான். (சுரு)

மன்னவ மாதலின மாநில மாபெல லிங்கம்பே
ரென்ன விளம்பிய தினனமு மீளவி லங்கைக்கோன்
பன்னக மேவுகை பற்றி யெடுக்கப படிநீதி
னன்ன ரிலிங்க மெலிந்து நிமிர்ந்தது நைந்தங்கே. (சுச)

---

(சுஉ) அம்முறையாக = அப்படியே; எம் இறை = எமது தலைவ ராகிய விநாயகர்; நீதி யிதென்று = இதுதான் நியாய மென்று; மை முறையாயொளிர = ஒழுங்காய்க் கரு நிறம் விளங்கும்; கண்டனை = கழுத்தையுடையவனை.

(சுரு) நன்புவியில் = நல்ல பூமியில்; சிலை = வேர்; வன்பொடு = வலிமையோடு.

(சுச) நவம் = பூமியில, அல்லது புதுமையாக; மன் = நிலைபெற் றது; மாநிலம் = அகன்ற பூவுலகத்திலே; மாபெலலிங் கம்பேர் = மாபெல லிங்கம் என்னும் பெயர்; மீள = பிறகு; பன்னக மேவுகை = பல நகங்கள் பொருந்திய கை; நன்னர் = நன்மையைத்தரும்; மெலிந்து நைந் து = குழைந்து.

ஆவி னெடுஞ்செவி போல நிமிர்ந்திடு மதனுலூர்
நாவி னிடும்பெயர் கோகன மென்றனா நனிகூரு
மேவி னலந்தரு வாள்விழி யம்பிகை யிடமேவுந்
தேவி னருஞ்சிவ லோகமி தென்றறி திணிதோளாய்

வேறு

மாவினவடு ங்காததவிழி மலைமகளை யிடங்கொ
ண்ட, தேவனருள சிவலிங்க மெடுக்கநைந்தோன் சின
ங்கொண்டே, காவலனைய கைந்திரளாறு கனன்றரக்கன
மறைமதலைத, தேவனது குடுமிமுடி புடைத்தனன
றன சினமிகலால (௬௬)

புடைத்தவுட னுருத்தெழுந்து பொழிமதவா
ரணமுகத்தோ, னடித்தலமு மணிமுடியு மகலிடமும்
விசும்புமுறப், படைத்தவுரு வெனநிமிர்ந்து பணைக்க
ரத்தா லிராவணனைப், பிடித்துமணிக் கழங்கெனன
வெறிந்தெறிந்து பிடித்திடலும (௬௭)

(௬௫) நனிகூரும நலமேவித்தரு = மிக்ககூர்மைபொருந்தி நன்மையைத் தரும், தேவின் = கடவுளுடைய.

(௬௬) நைந்தோன = எடுத்தலினால் மெலிந்த இராவணன்; கா = விருக்ஷம்; கனன்று = கோபித்து; மறை மதலை = பிராமணச சிறுவராய்த்தோன்றிய விநாயகக கடவு

(௬௭) அடித்தலம் = பாதம்; மணிமுடி = அழகிய சிரசு; அகலிடம் = பூமி; உறப்படைத்த உருவென = பொருந்தும்படி அடைந்த சொரூபம்போல; நிமிர்ந்து = உயர்ந்து; பணைக்கரம் = பருத்த கை; மணிக்கழங்கு = அழகிய அம்மனை.

மறையோனென் றுனேநினைந்த மடமையினு லீ
றிழைத்தேன், பிறையோங்கு மணிமகுடப் பெருங்க
ளிறே பிழைசெய்தே, னிறையோனே பொறுப்பது
னக் கியல்பென்றென் றேத்துதலும், பொறையோடு
முமைபுதல்வன் புவியிலரக் கனைவிடுத்தான். (௬௮)

நிருதர்குலத் திகல்வேந்தே நினதுபிழை யாம
பொறுத்தற, கிருபதுசெங் கரத்தாலு மெழின்மல
ரோன் முன்கவித்த,வொருபதுமா முடித்தலையு முறப
புடைத்தி யெனமேலோடுங், குருதிநிறங் கொளப்புடைத்
துக் குதித்தாடி யுவப்பித்தான (௬௯)

அன்னதுகண் டுவந்தருளி யைங்கரத்தோ னின
றுமுத, லென்னருணை னலமவேண்டி யின்றுனைப
போ லிருகரத்தாற, சென்னியுறப் புடைத்தவாபாற
சிந்தைமகி ழுவமெனு, மின்னினமறைந் தனனிரு
தன் வேலையிலங் கையிற்புகுந்தான (௭௦)

தென்னிலங்கை யிராவணனபாற சிவனுதவத தி
றலரக்கன, பின்னிலங்கு மொருமருப்புப பெருந்தகை
தன் கைக்கொடுப்ப, வன்னவிங்க மைங்கரத்தோ னங

(௬௮) பிறைஒங்கும்=மூன்றாம்பிறைமதி விளங்கும, பொறை
யோடு=பொறுமையுடன்.

(௬௯) நிருதர்=இராக்கதா; இகல்=வலிமையுள்ள; முன்கவி
த்த=முன்சூட்டிய; ஒருபது=பத்து.

(௭௦) நல நலம்=மிக்க நன்மை; மின்னின் மறைந்தனன்=
மின்னலைப்போல மறைந்தனன்; வேலை=சமுத்திரத்
திலுள்ள.

(௭௧) ஒரு மருப்புப் பெருந்தகை=ஒற்றைக் கொம்பினையுடை
ய பெருமை பொருந்திய விநாயகர்

கையிஞ னூட்டியதா, லிந்நிலத்திற சிவலோக மெனவி
ளங்கி யிருந்துளதால (எக)

**வேறு.**

இத்தகையை கோகனனந் தனனிமென்னன லொ
ருபுலைச்சி யிருக்கை யில்லாள், சுத்தவமு தெனவெ
ஞுத்த நரைதிரைநோய மூப்புடையாள சுருதி போ
ற்றும், மந்திர வென வுணரா ளங்கடைந்து பசிமிகு
த்திட்டகடு காயச, சித்தமதி விரக்கமுளளோர சே
ரிடமி தெனனநகெனவோ தெருவி னுறறுள (எஉ)

அத்தெருவின றலைவருமோர களியணிமிகுலத்த
வட னங்கை மீதின, முத்தனைக்கு விளமுணவென றி
டுதலுமேற றெறிந்தனளான முனனுட டாபித, துத்
தமாபூ சித்தபுரா தனவிலிங்க முடிமீதி னுளத்தன
போடும, பத்தரிடும பசசிலைபோ லானதவள பசிமிகக
கண படைசெயாளாய (எஙு)

இருளகல விடியுமட்டும வருந்தியிருந் திரவியுதி
த்தெழுந்த பினனத, தெருவினிடை யிரந்திடவோர
புலைச்சியெதிர வழிகாட்டச செலலுங்காலை, மருவிய
நோய பசிமூப்பு வருத்திடவெஞ சுடுமணற்கீழ் மய
ங்கி வீழ்ந்தங், கொருவியுயிர பிரிபொழுதிற பரமனு
யாக கணங்கடமை யுறறுநோக்கி. (எச)

(எஉ) நென்னல=நேற்று; அகடுகாய=வயிற்றிற் பசிதீமூள.

(எஙு) தெருவின் தலை=தெருவில்; எற்றெறிந்தனள=வாங்கி யெறிந்தனள்.

(எச) ஒருவி உயிர பிரிபொழுதில்=உயிர்விட்டு நீங்கும காலத்தில்.

சீரதருகோ கன்னததிற் சிவநிசியி லுண்டிதுயி
நீரதது விலவத, தோதருநற பைநதழைகொண் டெ
மமையருச சிதததனு லிமைககுஞ செமபொற, றோ
தனிலப புலமகளே யெறறியிங்கு வருதிரெனச செபப
வண்ணோ, பாாதனிலுற றனைவருமயாம பாாதிருகக
வஙகவளைப பணிநது போறறி. (எ௫)

செமபொனெடுங கொடிஞசிமணித தோமீதி வி
ருததிமிகு சிறபபி னோடு, மும்பாமட மகளிரவெண்சா
மரையிரடடப பைநதருவி னுலவை யீன்ற, வமபவிழ
பூ மழைபொழிய வளஙகெழுதா துபிமுழஙக மழுமா
னோநது, மெமபரம னினிதுறையுங களதபுத கிரியின
மிசை யெகி னூரே (எ௬)

ஆதலினமித திரசகனே நீயுமநதக கோகன்னத
தடைநது போறறித, நீதகலுஞ சிவநிசிநோற றிடிலு
னது வினையனைததுந தீருமெனறு, கோதகலும பெரு
நதவததுக கோதமனங கவறகுவிடை கொடுததுப்
பினன, ரேதமினமா தவாசூழநது வரமிதுலை நகர்நோ
ககி யெகினனல (எஎ)

புண்ணீரின கடிகமழப பொருகளததி லொன்ன
லாதம புயநதோய் மினனூ, கண்ணீாமை கலநதொ

---

(எ௫) தீர்தது = ஒழிதது; இமைககும் = பிரகாசிக்கும்.

(எ௬) உலவை = கிளை; ஈனற = நல்கிய; வளஙகெழு = வளமை பொருந்திய; களதபுதம் = வெள்ளி.

(எஎ) கோதமன் = கவுதமண்.

(எஅ) புண்ணீா = இரததம்; கடிகமழ் = நாற்றம் வீச; பொருகளததில் = யுததகளததில்; ஒன்னலர் = பகைவர், கணணீா = கணகளின நீரானது; மைகலந்து = தீட்டிய மையோடு சேர்ந்து; கலுழ்ந்து = அழுது; கலன்வாங்க = மாஙகலயம் இழக்க; கதிர்வேல்வாஙகி = ஒளிபொருநதிய வேலாயுதத்தைக் கொணடு; மண் = உலகத்தை; நீர்மைபெற = ஒழுஙகாக.

ழுகக் கலுழ்ந்தணிபொற் கலன் வாங்கக் கதிர்வேல் வாங்கி, மண்ணீர்மை பெறப்புரந்த மன்னவனுந் தாக முற்று வருந்தினோர்க, ளுண்ணீர்பெற் றதுவெனத் துன் பொழிந்துயர்கோ கனமுற்றா னுவப்பினோடும்

பூகநெடும் பொழில்புடைசூழ் பதியிற் புகல் கோடிப் புனலின் மூழ்கி, நாகர்தினந் தொழுதெழுமா பெலவிலிங்க நாயகனை நணைபிற் போற்றி, மாகமதிச் சிவனிசியின் மறைமுதலா கமத்துவிதி வழுவா தாற்றிச், சோகமிக்க தரும்பழைய வினைத்தொடர்பி னழுக்கனைத்துந் துடைத்திட்டானே. (எகூ)

வளமைதரு கோகனத்தின் மாகமதிச் சிவனிசியை மகிழ்ந்து நோற்றப், பழிவிளைக்கும் பிரமகத்தி பற்றறவே நீர்ந்தபின்னர் பரமன் செய்ய, கழலடைந்து பேரின்பங் கலந்திருந்தான் சிவனிசியைக் கருத்தி னுற்ற, வளமகிழ்வா ரேற்றவர்கள் பேரின்ப வீட டைவருண்மை யென்றான். (அ0)

என்றுயானை மிசவனத்தி லிருந்தவிருந் தவாமகிழ்ந்தாங் கிருகை கூப்பித், துன்றுசடை முடிதுளக்கிக் கேட்டுவப்ப விரித்தெடுத்துச் சொல்லினூற, கன்றுகொடுஞ் சினமயக்கங் காமமெனு முக்குறும்பைக் கடிந்து நாளும், வென்றிபெறுந் தவஞான நிலையுணர்ந்து களங்கமின்றி விளங்குஞ் சூதன (அக)

---

(எகூ) பூகம்=பாக்குமரம்; நெடும்பொழில்=நீண்டசோலைகள், புடைசூழ=பக்கத்திற்சூழ; கோடிப்புனல்=கோடித் தீர்த்தம்; நாகர்=தேவர்.

(அக) இருந்தவர்=பெரியதவத்தையுடையவர்; துன்று=நெரு ங்கிய; துளக்கி—அசைத்து; கன்று=வெதுப்புகின்ற.

## வசனம்.

முனிவர்காள்! சீர்த்தியோங்கும் சிவராத்திரியின் திவ்
வியசரிதம் திறம்பெறவின்னும் உங்கட்கொன்று உரைப்பேன்
கேட்பீர் எனச் சூதமாமுனிவர் தூய்ய வமுதம் சொரிவது
போலச் சொல்லுவாராயினர்.

மேற்றிசையிற்றோன்றி வளருஞ் சந்திரன் தவழ்ந்து செ
ல்லுமாறு விண்ணையளாவிய மதில்களையுடையதாயும், தசரத
மன்னன் பால ஸ்ரீமந் நாராயணமூர்த்தி இராமபிரானு யவதரி
க்கப்பெற்றதலமாயும் விளங்கும் அயோத்திமா நகரிலே சூரிய
வமிசத்திலே நீதி தவறாது செங்கோல் செலுத்தும் மித்திரசக
னன் என்னும் பெயரையுடைய ஓர் அரசனிருந்தனன். அவ்
வரசன் தனக்குரிய மரபிலே மதயந்தி யென்னும் பெயரை
யுடைய ஓர் இராஜ குமாரியை மணம் புரிந்து அவளோடு கூடி
வாழுநாளில், காட்டினிற் சென்று வேட்டையாடுதலில் விரு
ப்பமுற்றனன். அதனால் அவன் கருநிறமுள்ள பட்டாடையை
இடையிற்றரித்து அதன் மீது கச்சைப்பட்டையை இழுத்
துக்கட்டி, சிவந்த ஒளிவீசுகின்ற மணிகள் பதித்த மகுடத்
தை நீக்கிப் புஷ்பமாலைகளாற் குடுமியை யிழுத்துக் கட்டி,
பசிய மேகம்போன்ற நிறத்தினையுடைய மரகத மணிகள் பதி
த்த பொற்கவசத்தினைத் தேகத்திற்றரித்து, கைக்குக் கவச
மிட்டு, முதுகில் அம்புப் பெட்டியையும் வில்லையுந் தரித்து,
உடைவாளைக் கையிலெடுத்துக் கொண்டு, மனத்தையுங் காற்
றையும் நிகர்த்த வேகத்தினையுடைய நீலநிறக் குதிரை மே
லேறி, சங்கு, படகம் முதலிய வாத்தியங்கள் முழங்கவும், அள
வில்லாத யுத்தவீரர்கள் ஆயுதபாணிகளாகச் சூழ்ந்து வரவும்,
வேட்டைக்குரிய வலை முதலிய கருவிகளை ஒட்டகங்கள் சும
ந்து பின்றொடரவும் அநேக நாய்களை இருப்புக் கம்பிகளாற்
கட்டி வேடர்களிழுத்துப் பின்வரவும் சென்று விண்ணையளா
விய கிளைகளையுடைய தருக்களடர்ந்த காட்டினை யடைந்த

னன். பின்னா மித்திரசகனன் என்னும அரசனும், சிஙகம் போன்ற யுதத வீரர்களும, வேடாகளும்; மான், மரை,முயல், பனறி, யானை முதலிய மிருகஙகளை வேட்டையாடிக் கொண் டிருந்தனர்.

இஙஙன மிருக்கையில் நீருண்டமேகம்போற் கருநிறம் வாய்ந்த, சகோதராகளாகிய இராககதாகளிருவர் இறுமாப் புறறு அஙகு வநது யுததம் புரிவான் எதிாக்க, மித்திரசகனன் அவ்வரககரோடு நெடுநேரம போர்புரிநது அவாகளில் முந்திய வனை வாளாற்றுணிததுக் கொனறனன். அதனைக்கணட இளை யோனுகிய இராக்கதன் இவ்வரசனை எதிாதது வெல்லுதல நமமால் முடியாதாகலின் பின்னர் வஞசகச செய்கையால் இ வனை வெலவேனெனறு ஓடி மறைநது மனிதவேடம் பூணடு வநது அவ்வரசனது பாததில வீழ்நது வணஙகினன. மித்தி ரசகனன் அவ்வரக்கனை மனித னெனறெணணி யாது பற்றி எம்மை வந்தடைநதனை யெனறு கேடக, அவ்வரககன அர சனே! நின்னிடம் ஏவற்றொழிற் புரிநது காலஙகழிக்கலா மென்றெணணி வநதடைநதேன எனறனா. மித்திரசகனன் அவனை யாதரிதது வேட்டையாடுதலை முடிததுக் காட்டை யகன்று அரககனுடனும, தனது சேனைகளுடனும அயோததி நகரை யடைந்து அவ்வரககனுக்குச சமையறறொழி லளிதது மதயநதியுடன கூடி வாழ்ந்திருந்தனன.

இஙஙன மிருககையில ஒருநாள் மித்திரசகனன் பிதிா சிராாததஞ் செய்யும தினம வரலும அனறு தன குலகுருவா கிய வசிட்டமுனிவரை யழைப்பிதது வணஙகி ஆசனத திரு ததி அருககியபாததிய மளிததுப் பூசிததுப் போசனமிடடு உபசரிததனன். அககாலததில் சமையறறொழிற புரியும அரக் கன இவவரசனை வஞசிப்பதற்கு இதுதான றருணமெனறுன ணி, பதாாததஙகளோடு மனிதனது மாமிசததையுஞ் சமை தது முனிவருணணும பாததிரததிற படைததனன. வசிட்ட முனிவர் அதனைப்பாாதது, தன் வேலைககாரனைக கொணடு நரமாமிசம படைககும்படி இவ்வரசன் செய்விததன னென

றெண்ணிக் கண்கள் சிவந்து தீப்பொறி பறக்கக் கோபித்து, அரசனை விளித்து நீ அழகை யொழித்துக் கருநிறங் கொண்ட இராக்கத வடிவம்பெறக் கடவாயெனச் சபித்தனர். அதனைக் கேட்ட மித்திரசகனன் மனங்கலங்கிப் பின்னர் ஒருவாறு தெளிந்து கோபமதிகரித்தவனும், மனவாக்குக் காயங்களால் யாதொரு தீங்கு மிழைத்தறியாத என்னைச் சபித்தனை யாதலின் உனக்கு நான் எதிர்ச்சாபங் கொடுப்பேன் என்று கையில் நீரை யெடுத்து மந்திர மோதினன். அப்பொழுது அவனது தேவி யாகிய மதயந்தி அதனைக்கேட்டு நடுநடுங்கிக் கணவனருகில் ஓடி வந்து வணங்கி நாயகா! தேசிகனே தெய்வமென்று வேதங்கள் கூறுகின்றன. ஆதலின் அக்குரவர் நியாயமின்றி ஒறுக்கினும் தணிந்து நடப்பதே சீடன் கடமையாமெனபதை உணர்ந்தும் உணராது போல நீ இங்ஙனஞ் சபித்தல் தகாதென்று உரைத்துத் தடுத்தனள். மித்திரசகனன அதனைக் கேட்டவுடன் கோபந்தணிந்து சாபமிடுதற்குக் கையிலெடுத்து மந்திரித்த நீரைத் தனது பாதத்தில் விட்டனன். அந்த நீர் விழுந்த இடம் உளுந்துபோற் கறுப்பெய்திற்று. களங்கமற்ற பாதத்தில் கறுப்பாகிய கல்மஷம் ஏற்பட்ட காரணத்தால் அவ்வரசனுக்குக் கலமாஷபாதனென உலகமெங்கும் பெயர் விளங்கிற்று. (அல்லது கல்லைப்போன்ற வலிமையும் உளுந்து என்னும் மாஷம்போன்ற வடிவமும் நிறமும் பொருந்திய காரணத்தால், கல்மாஷபாதனெனப் பெயர் விளங்கிற் றெனினுமாம்.)

பின்னர் அரசன பலவாறு சிந்தித்து நிற்க, வசிட்ட முனிவர் அங்ஙனமே கோபமடக்கி,அரசன் தனக்கு யாதொரு தீங்கு மிழைத்தானில்லை யென்றும், மாறுவேடம்பூண்ட அரக்கன் செய்த பிழை யீதென்றும் யோகதிருஷ்டியினாலுணர்ந்து மித்திரசகனனை நோக்கி மன்னனே! யானிட்ட சாபப்படி அரக்க வுருவந்தாங்கிக் காட்டை யடைந்து பனிரண்டு வருடஞ் சஞ்சரித்த பின்னர், அவ்வுருவம் நீங்கி இச்சரீரம் பெற்று வாழ்வாயாக வென்று மறுசாபமுந் தந்தனர் சூததாடுவோர

ஓர் வேடத்தை யொழித்து மற்றொரு வேடம் பூண்டு தோன் றுவதுபோல ஊழ்வினை வயத்தால் உடனே கன்மாட பாதன் அரசவுருவம் ஒழித்து பிறைபோலும் வளைந்த பற்களையுடைய இராக்கத வடிவமுற்றனன். அதனைக்கண்டு அவ்வரசன் மனை வி முதலிய மங்கையர்களெல்லாம் பயந்து ஓடி யொளிந்தனர். அரக்கவுருவந் தாங்கிய கன்மாடபாதன உடனே நாட்டை யகன்று காட்டையடைந்து எதிர்ப்பட்ட மிருகங்களைக் கொ ன்று கொன்று அருந்தித் திரிந்துக காலங்கழித்திருந்தனன.

இங்ஙன மிருக்கையில பிரம்ம குலத்திலுதித்த ஓர் முனி வன புதல்வனும் அவன புதுமணம்புரிந்த மனைவியும் அக்காட் டின்வழியே போய்க் கொண்டிருந்தனர். இவ்வரக்கன் அவர் களைக் கண்டு சநதோஷித்து உண்டு பசியகற்றுமாறு அம்முனி வனைப் பிடித்துக் கொல்ல எத்தனித்தனன. அப்பொழுது அம் முனிவனது மனைவி கண்டு நடுநடுங்கி அரசனே! நீ இராக்கதர் குலத்திற் பிறந்தவனல்லை யென்பதும் இருடி சாபத்தால் இடும்பனுயினை யென்பதும உணர்ந்திலைபோலும். நீ இப்பொழுது எனது கணவனைக் கொல்வையாயின் யானும் தீயில் விழுந்து உயிர் துறப்பேன். இவ்விரண்டு ஹத்தியும் உன்னையே சாரும். அதனால நீ பல துன்பத்திற்குள்ளாகி நெ டுங்காலம் வருந்த நேரிடுமென்பதை யுணர்ந்து உயிர்ப்பிச்சை தரக்கடவா யென்று கண்ணீர் பெருக அழுது இரந்தனள். செவிடனருகிற் றடவுமவீணைபோல் அம்மாது கூறியனவெல் லாம் அவ்வரக்கன செவிப்புலம எற்கப் பெறுதவனாய் அம் முனிவனைக் கொன்று இரத்தத்தையும் மாமிசத்தையு முண்டு எலும்புகளை யெல்லாம் அவள் முன் உமிழ்ந்தனன. அந்தமாது தீயில் விழுந்த புழுப்போற்றுடித்து வருந்தி அவ்வெலும்புகளை யெல்லாம் மடியில் வாரிக்கொண்டு சென்று பெருந தீயை மூட்டி, அதில் எலும்புகளை யிட்டு அத்தீயை வலம்வந்து; அநி யாயமாய் எனது நாயகனைக் கொன்ற வேந்தன தன் நகர டைந்து மங்கையர் போகந் துய்ப்பனேல் உடனே இறக்கக் கடவன் என்று சபித்து அத்தீயில் விழுந்து இறந்தனள்.

பின்னர் கன்மாடபாதன பன்னிரு வருடங்கழித்துப் பயின்முனிசாப மொழித்து அரக்க வுருவம் நீங்கி அரசவுருவந் தாங்கி ஆரணியத்தைக் கடந்து அயோத்தி நகரை யடைந்து தனதரண மனையிற் புகுந்து தாபமகற்றி யிருந்து நெடுநாட் பிரிந்திருந்த தன் மனைவியாகிய மதயந்தியி னிருப்பிடஞ் சென்று அவளுடன் மருவ முயன்றனன் முன் காட்டில் நடந்த விருத்தாந்தங்களைக் கேட்டிருந்த மதயந்தி நாயகா! நீ இராக்கதனாயிருந்த காலத்து காட்டில் ஓர்முனிவனைக் கொன்று தின்றனை. அதனால் அம்முனிவனது மனைவி, உன் மனைவி முதலிய மாதர்களைத் தழுவில் இறக்கக் கடவாயெனச் சாபமிட்டுத் தீயில் வீழ்ந்திறந்தனள் ஆனதால் நீ என்னையணைதற்கடாதென்னக் கூறினள். அதனைக்கேட்ட கன்மாடபாதன் பொறகலது தில அமுதம்பெறறும அதனை அருந்தககடனிலான போலிருந்து மனத்துயரமுற்று நாம மனைவியுடன் கூடிவாழாவிடின் புத்திரப்பேற்றை யடைவதில்லை. புத்திரப்பேறடையாவிடில் புத்தென்னும் நரகத்தைக் கடப்பதில்லை. இதற்கென்செய்வோமென யோசித்துத் துன்பத்தழுந்தியிருந்தனன்.

இங்ஙன மிருக்கையில், அகன்றவாயும் அழற்பெய் கண்ணும் நீண்டநகமும் நெருப்பெனரோமமும் வக்கிர தந்தமும் விகாரவடிவமும் பொருந்திய அலகையொன்று தோன்றிவந்து வெந்த புண்ணில் வேலநுழைத்ததுபோல அவ்வரசனைப் பற்றி வருத்திற்று. அதனைக்கண்ட அரசன் பயந்து நடுநடுங்கி மனதில் ஒன்றுந்தோன்றாதவனாய், அந்நகரின் புறத்துள்ள காட்டினிடத்துப் பஞ்சாக்கினி மத்தியிலிருந்து தவம் புரியும் பெரியோர்களை யடுத்துப் பணிந்து சுவாமிகாள்! என்னைவருத்தும் அலகை எங்குள்ளது, ஏனிங்ஙனம் வருத்துகின்றது, என்செய்தாலிஃதொழியும் என்று கேட்க, பரமேசுவரனைச் சதாமனத்திருத்துந்தபசிகள் அரசனைப்பார்த்து நீ அரக்கனாகிக் காட்டிற் றிரிந்த காலத்து,பிரம்ம குலத்து முனிவனைக் கொன்றனை அந்தப் பிரமஹத்தி இப்படி அலகையாய்த்தோன்றி உன்னை வருத்துகின்றது. நீ பல புண்ணியத் தீர்த்தங்க

ளிற் படிந்து ஆங்காங்குத திருவுருக்கொண்டிருக்கும் இறைவனைப் பூசிப்பையாயின் இஃது ஒழியும எனறனர்.

கன்மாடபாதன் உடனே புறப்பட்டுசென்று சேது முதலிய தீாததங்களிற் படிந்து ஆஙகாஙகுள்ள ஆலயஙகளை யடைந்து பணிநது இறைவனையருசசிதது வந்தனன். இஙஙனஞ் செய்தும் அநதப் பிரம்மஹததி நீஙகாதிருநததால் கவலைக் கடலிலாழ்நதவனாய மிதுலைமாநகரின பக்கததிலே சின்னாள் வசிததிருநதனன.

இப்படியிருககையில் கவுதமரெனனும முனி புஙகவர் மிதுலைமா நகரினுககுச செலலு மாறு சஞ்சாரகள் சூழப் புறப்பட்டுக் கனமாடபாதனிருககு மிடததினுங்குவரலும், அம்முனிவரை அரசன கணடு எதிர சென்று பணிநது அழைததுவநது ஆசனததிருததி யுபசரிததனன. கவுதமமுனிவர் ஆசிகூறிப் பீடததிருநது அரசனைப்பாாதது மனன ! நின் முகததின காந்தி குனறிய காரணம் யாதோ அதனை யெனக்கறைதியெனறனா. கனமாடபாதன, வசிட்டமுனிவா அநியாயமாய்ச் சாபமிட்டதும, அதனால அரககனுகிக காட்டிற் றிரிநததும், பனனிரு வருடஞ்சென்று பழையவுருவம் பெற்று நாட்டையடைநததும் விசிதமாகக கூறி, காட்டில் முனிவனைக்கொனற பாவம அலகையாய்த்தோனறி எனனை வருததுகின்றதால அதனை யொழிப்பான பலதீாததஙகளிற படிநது ஆஙகாஙகுத திருககோயில கொணடெழுநதருளி யிரானினற இறைவனை யாசசிதது அநேக தானதருமஞ்செய்தேன், அநேக மநதிரம் ஜபிததேன, அநேக வேள்விகள் செயதேன் இவ்வளவு செய்தும் அவ்வலகை யொழிநததில்லை. அதனால அளவிலாத் துனபமடைகின்றனன். இததுன்பமொழிய இன்னும் எவ்வகைப் பிராயசசிததஞ் செயயவேணடுமோ அதனைத் தேவரீர் திருவாய் மலாந்தருளவேணடு மெனறு இரநதனன்.

கவுதமமுனிவா, மனனவ ! பரமேசுவரனுக்குரிய விரதஙகளில் மேலானது ஒனறுள்ளது. அஃது மாசி மாதததுத் தேய்பிறைச சதுர்த்தசி கூடிய சிவராததிரி விரதயாம். அவ்விரத

தினத்தில் மேலாகிய ஓர் சிவத்தலத்தை யடைந்து ஊணுறக்க மகற்றி விதிப்படி அன்றிரவின் நான்கு சாமமும் பரமேசுவரனை யருச்சிக்கில் தப்பாது நின் துன்பங்களெல்லாமொழியும் அஞ்ச ற்க அஞ்சற்கவென்றனர். கன்மாடபாதன் அவ்விரதமனுட்டி ப்பதற்கு, மேலாகிய சிவத்தலம் யாதோ அதனையும் அநுக்கிர கிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க, கவுதமமுனிவர் பரமேசு வரருறையுந் தலங்களில் மேலானது கோகன்னமென்னுந்தல மாம். பிரம்மாதிதேவர்களும், சித்தர் வித்தியாதரர் முதலின ரும், அத்தலத்தில் வந்து தவம்புரிந்து இஷ்டசித்திகளைப் பெ ற்றிருக்கின்றனர், பெறுகின்றனர். ஆதலின் அத்தலமே நீ செ ன்று சிவராத்திரி தினத்தில் இறைவனைப்பூசிப்பதற்குத் தகுந்த தாகும் என்று தீர்மானித்து அத்தலத்தின் வரலாற்றினைக் கூறுவேன் கேட்பாயாகவென்று சொல்லத்தொடங்கினர்.

முன்னோர் ஞான்று இலங்கைக்கிறைவனாகிய இராவண ன் ஓர்சிவலிங்கத்தினைப் பெற்று தன் நகரிற்றாபித்துப் பூசிப் பான் கயிலையங்கிரியை யடைந்து அரியதவஞ்செய்தனன். அவனது தவத்திற் கிரங்கிப் பரமபதி அவன் முன் தோன்றி ஓர் சிவலிங்கத்தினை யெடுத்து இவ்விலிங்கத்தினைப் பூமியில் வைக்கில் எடுக்கமுடியாமல் வேரிறங்கி விடுமாகையால் பூமி யில்வைக்காமல் கரத்திற் றாங்கியவண்ணமே நின் நகரடை ந்து எங்குப்பிரதிஷ்டை செய்யவேண்டுமோ அங்கு வைப்பா யாக. அன்றியும் இதனைத்தாபித்து நீ பூசிப்பையேல் எவரா லும் நின்னை வெல்லப்படாத தன்மையை யடைவாய் என்று சொல்லிக் கொடுத்தனர். இராவணன் அமலநாதன்பால் அரு ள்விடைபெற்றுக் கயிலையினின்று புறப்பட்டுப் பூமியில் வந்து இலங்கையைநோக்கிச் சென்றனன்.

இதனை யுணர்ந்த தேவர்கள் பயந்து ஒருங்கு கூடி இரா வணன் சிவலிங்கத்தினைப் பூசித்து எவராலுந் தன்னை வெல்லு தற்கரிய தன்மையைப் பெறுவனேல், குரங்கின்கையிற் கொ ள்ளி யகப்பட்டதுபோல் தன்னிஷ்டப்படி நம்மைக் கொடுந் துன்பத்திற் குள்ளாக்குவான். ஆகையால் அவன் இலிங்கத்

தைக கொண்டுபோய் இலஙகையிற பிரதிஷ்டை செய்யாத வகை தேடுவதே தகுதியாமெனத தீாமானிதது, அததேவாக ளெல்லாம் விநாயகப் பெருமானிடததுச சென்று, தஙகள் கருததை வெளியிட்டு யாதேனும ஓா தந்திரஞ்செய்து, அா ககன் இலிஙகததினை இலஙகைக்குக் கொண்டு போகாத வகை செயயவேணடு மெனப் பிராாததிததனா.

தேவர்களது வேணடுகோளுக் கிரஙகிய கணேசப்பெரு மான் தசமுகன் வயிறறிற் றணணீா பெருக்கு மாறு வருணனு க்குக கட்டளையிட்டு ஓா பாாப்பனச சிறுவன வடிவம் பூணடு அவ்வரக்கன் செலலும் வழியில் நினறனா இலஙகையா கோன் கணடு பிராமணசசிறுவ ! நான ஜலவிஸாஜனஞ் செ ய்து வருகிற வரையில இவ்விலிஙகததைப பூமியில் வைக காமல கையிற்றாஙகியிருப்பாயோ வென்ன, சிறுவ னுருக்கொ டுதோன்றிய ஒற்றைக்கொம்பன நான நெடுநேர மிஙகிருக்க முடியாதாகையால மும்முறை யழைப்பேன அதற்குள நீ வ ராவிடின பூமியில் வைதது விடுவேன என்றனா. வயிற்றின் நீருபாதையால தசமுகன அதறகிசைநது கொடுததுப்போயி னன். உடனே பிராமணசசிறுவர், இராவண ! இலஙகைவே நத !! அரக்கரிறைவ !!! எனறு மும்முறையழைக்க அவன வராமையால இதுதான றருணமெனறு இலிஙகததைப் பூமி யில் வைததனா. பினபு இராவணன வநது பாாததுக் கயிலை நாதன் கடைக்கணித்தருளிய வாறு இலிஙகததின அடியில் வேரோடியதுபோலு மெனறெணணி நடுஙகித் தனது வலி மை முற்றுஞ் செலுததி இருபது கரததாலும் பற்றியெடுகக, அவ்விலிஙகம குழைநது பசுவின காதுபோ லாயிற்றேயன றிப் பூமியினின்றும எடுகக முடியவிலலை. அஙஙனம் எடு க்க முடியாத தால் அவ்விலிஙகததினுக்கு மாபல லிஙகமென வும் பசுவின் காது போற குழைநததால் கோகாணேசுவர ரெனவும், அவ்வீசுவர ரெழுந்தருளிய காரணத்தால் அந் நகரினுக்குக் கோகானமெனவும பெயாகள் வழஙகி வருகின றன.

௩௩

சிவலிங்கத்தினை யெடுக்க முயன்று வலியிழந்த இராவணன் கோபமுற்றுத் தனது இருபது கரங்களாலும்பிராமணச சிறுவர் தலையிற் குட்டினன். உடனே ஐங்கரப்பெருமான் ஆகாயம் வரையிலுளாவிய விசுவரூபங்கொண்டுத் தனது நீண்ட கரங்களால் இராவணனைப் பிடித்து அம்மனைபோல் ஆகாயத்தெறிந் தெறிந்து பிடித்தனர். அப்பொழுது இராவணன் பிராமணருருவங்கொண்டு எதிரில் நின்றவர் விநாயகப்பெருமானே யென்றுணர்ந்து, 'பிறையோங்கு மணிமகுடப் பெருங்களிற்றின் முகத்தோனே அறியாது பிழை செய்தேன் ஆதரித்துன் னருள் புரிவாய். என்று பெருங்கூச்சலிட்டுத் துதித்தனன். உடனே மூஷிகவாகனர் தசமுகனைப் பூமியில் விடுத்து அரக்கரிறைவ! நினது பிழையைப் பொறுத்தருளுமாறு நின்னிருபது கரங்களாலும் பத்துத் தலைகளிலும் குட்டிக்கொள் என்றனர். அரக்கர்கோன் அங்ஙனமே குருதி யொழுகுமாறு குட்டிக்கொண்டு குதித்தாடி யுவப்பித்தனன். கஜமுகக் கடவுள் அதனைக் கண்டு மகிழ்ந்து இன்றுமுதல் உன்னைப்போற் சென்னியிற் குட்டிக்கொண்டு எமமைத்துதிப்பவர்க்கு எமதருள வழங்குவோம் எனத் திருவாய்மலர்ந்து விண்ணில மறைந்தனர். அரக்கன இவ்விலிங்கம எடுக்கப்படாததெனத் தேர்ந்து இலங்கைக்குச் சென்றனன். அவ்விலிங்கம் அநாதி முத்தனாகிய பரமபதியின திருக்கரத்தா லெடுத்துக் கொடுக்கப்பட்டுப் பின்னா விநாயகப்பெருமான் திருக்கரத்தாற் பூமியிற்றாபிக்கப் பட்டதால், அக்கோகர்னமெனனுந்தலம் சிவலோகமென விளங்குகின்றது. இத்தகைய கோகர்னத்தில நேற்று இருகணணுமிழந்த ஓர் புலைச்சி, பிச்சை கிடைக்காததால பட்டினியிருந்து சிவராத்திரி யென்பதும சிவலிங்கமிருக்கிற தென்பதுமுணராது வில்வத்தளங்களைச் சிவலிங்கத்தின்மீது எறிந்திருந்து மறுநாள் பசிப்பிணிதாளாது இறந்தனள். அதனால் அவள் உடனே கயிலைநாதன் கழலடி யடைந்தனள். ஆதலின் கன்மாடபாதனே! நீ அந்தக் கோகர்னத்தை யடைந்து சிவராத்திரி விரத மிழைத்து இறைவனை யருச்சிப்பாயாக எனக் கூறி விடைபெற்றுக் கவுதமமுனிவர் மிதிலை நகரடைந்தனர்.

கன்மாடபாதன், தாகமுற்று வருந்தினோர் உண்ணீரைக் கண்டதுபோற் றன் பொழிந்து அக் கோகர்ண மென்னுந் தலத்தை யடைந்து ஆங்குள்ள தீர்த்தங்களில் மூழ்கி மாபல லிங்கத்தினைப் பூசித்திருந்து மாகமாதத்து மகா சிவராத்திரி தினத்தில் வேதாகம விதிப்படி விரதமிழைத்து அச்சிவலிங்க நாயகனைப் பூசித்து, துன்புறுத்தும் பிரம்மஹத்தியையும் வினைகளின் தொடர்பையும் ஒழித்துச் சுகித்திருந்து பரமபதியின் றிருவடி நீழலடைந்தனன்; என்று சூதமாமுனிவர் சொல்லி முடித்தனர்.

## கன்மாடபாதச்சருக்கம் முற்றிற்று.

---

# விபரிசச்சருக்கம்.

எண்டரு மறையுண ரிருடி காடிரி
புண்டர நுதலர னிரவிற் பூசனை
கண்டவன் கதையினைக கழறுக கேணமினென்
றெண்டவச் சூதனு முரைபப தாயினான். (க)

பாரினிற் புராதலப பதிபு ரபபவன்
போரினிற் றெவ்வரமெய்ப புலவு காரியு
மோரியு மருநதவே ளுறைக ழித்திடும
வீரியன் விபரிச னென்னும் வேநதனே. (உ)

---

(க) கண்டவன்=செய்தவன்; ஒண்தவம்=அழகியதவத்தாற் சிறந்த.

(உ) புராதலப்பதி=புராதலமென்னும் நகர்; தெவ்வர்=பகைவர்; காரி=காக்கை; ஓரி=நரி.

தன்றடஞ் சிலைகொடு தானுஞ் சேனையுங்
குன்றருங் கானிடைக் குறுகி நாடொறும்
வன்றலைக் கேழன்மான் மரைபுல் வாய்களின்
மென்றசை யருந்திட வேட்ட மாடுவான். (௩)

புலந்தரு பூசுரா புலைஞர் மற்றுள
குலந்தனி லுதித்தெழில் குலவு மாதரை
நிலந்தனி லவாவுட னேடி நித்தமுங்
கலந்துளந் தருக்கொடு களிக்கு நீர்மையான. (௪)

வேறு.

மதிவளா பக்கங் கலைக்குறை பக்க மதிதொறு மருவுபன் ஞன்காந், திதிகளிற றுயிலுண டுறந்துதன்னடியாா சிந்தனைப்படி முடிவிலலாக், கதிதரும பரனை யானினைந் தாட்டிக் கடி மலா கூவிளஞ் சாத்தி, விதிமுறைவழுவா துள்ளன்கெக் குருகி விருப்புட னருச்சனை புரிவான்.

மற்றவன் மனைவி யாகிய குமுத வதியவன் மலரடி வணங்கிக, கற்றடந் திணிதோட் புரவல விரவுங் கலியிற் றிறலினை லிலலாய, பொற்றரு விழுது விட்டெனக் கிடந்த புரிசடைப் புனிதனை ரிரவி, லுற்றருந் திடுமூண் டுயிலொழிந் துளத்தி னுவப்புடன பூசனை புரிவாய்.

கூனருஞ் சிலைக்கை வேடுவரென்னக் குலவிலங் கனைத்தையுங் கொலைசெய், தூனருந் திடுத லொழிந்

---

(௩) தடஞ்சிலை = பெரியவில்; குன்று = மலைகளையுடைய; புல் வாய் = கருமான்.

(௪) புலந்தரு = அறிவுள்ள; பூசுரர் = பிராமணர்.

(௬) விரவும் = பொருந்தும்; திறலில் = வலிமையில்; பொன் தரு = கற்பகவிருக்ஷம், இல்பொருளுவமை.

திலே நிலத்தி னுயர்குலத் திழிகுலத் துதித்த, தேனரு
ங் கனிபா னிகர்த்தசொற் கணிகைச சேயிழையார்மு
லேப் போகந், தானருந நிடுத றவிாநிலே யிநதத் தன்
மையென் சாற்றுதி யென்றாள். (எ)

என றவண மொழிநத மொழிசெவிப படலுமிள
நகை கோட்டிமேவ லிறைவன், முனறவப பயனு லிறப
பெதிா நிகழ்வா மூன றுகாலஙகளு முணாவேன், துன
றளிக குலமபாட டயாமலாக் கோதைச சுரிகுழால
கேட்டியான முன்னாங், குனறெனு மிருசிப பமமைபமா
நகாிற குரைமுக ஞாமலியா வுதிதமேனை. (அ)

பாலேவென றமுதை யடுமொழிக கவுரி பஙகில்
வாழ் பமமைநா யகனற, ஞலேயங குறங்கிப பலிககிடு
படிசி லருநதுவான வருநதியங கடையுங, காலேயிற
கோயிற கைவிஜே யாளா கடிதெனேக கடிநதிடககரு
தி, வேலேயில விடமபோற கதைகஜே குனிதத வில
லொடுங கல்லொடுந தொடாநதாா. (கூ)

ஓடினேன வெருவி யாலயம வலமா யுயிாபிழைத்
துய்குவா னெறிக, பீடினேன் காணேன பலிசொாி
பீடத தினையற சென்றுழிச-சுருதி, பாடிநாள மறை

---

(அ) துன்று=நெருங்கிய; சுரிகுழால்=வளைந்துக்கட்டியகூந்
தலேயுடையவளே!

(கூ) அமுதை அடு=அமுதத்தை ஜயித்த; கைவிஜேயாளர்=
சிற்றூட்கள்; கடிநதிட=கொல்ல; வேலேயில்=சமுத்
திரத்தின்.

(க0) வெருவி=பயந்து; சென்றுழி=போனகாலத்து; பீடி
னல்=பெருமையோடு; பணிமாறினர்=தீபாராதனே
செய்தனர்.

யோர் பழிச்சிட நெய்த்தீ பச்சுடர்த்தட் டெடுத்தேந் திப், பீடிறுற் பணிமா றினர்தரி சித்தேன் பிறைமு டிப் பிஞ்ஞகன் றன்னை. (க0)

அக்கணத் தொருவன் சரநதொட வீந்தே னன் றிராச சிவபிசி யதனின, மிக்கவா லயததை வலமதாய் வநது விமலனைத தரிசனை புரிநது, நக்கனா திருமுன னுவிநீத் திட்ட நனமையாற காலமுன றுணாநது, தககவாழ் வுடனு னிலமபுராந தருளுந தலைவனுத தரைதனி லுதிததேன. (கக)

இநதநற் பலததைத தநதது பரம னிரவெனக கருதியா னெதிாநது, வநதநற றினங்க டொறுஙகலை நிறைநது வருபிறை குறைபிறை யதனிற, றநதபன னுன்காம பக்கமென் றுரைகருஞ சதுாததசி களிற்றவ ருமம, லநதிவா னதிசசெஞ சடிலவா னவனை யகததில வைதத தருசசனை புரிவேன. (கஉ)

புரிநதபூ சனையாற பிரிநதுவெம பாவம போகு மோ வெனபபுகன றனையேல, விரிநதபைப் பணிபபூ ணணிநதருண் முககண் விமலனை வழிபடி லினன்முன, சொரிநதவெம பனிபோற கொடுஞ்சிகைத தழன்முன்

---

(கக) வீந்தேன் = செத்தேன்; மிக்க = பெருமை மிகுந்த; நானிலம் புரந்தருளும் = முல்லைமுதலிய நான்கு நிலங்களையும் காக்கும்; தரை = பூமியில்.

(கஉ) எதிர்நதுவந்த = தோன்றிவந்த; பக்கம் = திதி; சடிலம் = சடை.

(கங) பணிப்பூண் = சர்ப்பாபரணம்; கொடுஞ்சிகைத்தழல் = வெப்பமுள்ள சுவாலையினையுடைய நெருப்பு; தொக்குற = கும்பலாக; இந்தனம் = விறகு.

றுகசுறக் குவிததவிந தனம்போற், கரிநதுநீ ருகும
பரமனை நீயும வழிபடக கருதுகா ரிகையே. (கங)

எனவெடுத திறைவ னியமபலுங் கதிகாள் றெ
றின்மணிக் கலன்கிடந திமைக்கும், கனதனக குமுத
வதியெனு மணஙகு கைதொழு தெனதுமுற பவமு, ம
னமுறறத தெளிநது சொலலுநீ யெனலுமம வளாநதரு
மலிகாாச கனததிற், சினகரத திருககு மென்சிறைப
புறவாச் சென்றுதித திருநதனை முனனுள் (கச)

இறநதமுற பவததிற செருநிறத தசையொன் றெ
டுதது வாயக கவவிநீ வரலுஞ, சிறநதவெங கழுகொன்
றனைத தொடாநதிடவச சிவாலயந தனை வலஞ சூழ்ந
து, பறநதனை வநதுவிடைவரை கொடிககம பததி
டைப பயநதொளித திருபப, மறநதரு கங்கங் கொத
திவாயலகால வதைததிட வாஙகுயிா மடிநதாய் (கரு)

சொலலுமக கஙகம புறவதா நினனைத தொடாந
துகொன றிடுஞ செயல சொலலில, வலலினில விழை
வி னீகொடுவநத வசைபடு தசையினை வவவிச, செல
லுவ னென்று வநதுனை வலிதிற் செருதது நின் வாய்
பபடுந தசையைக, கல்லெறி விரைவி னபபுறங் கொண்
டு போனதக கடுஞசிறைக கஙகம. (கசு)

---

(கச) இறைவன் = அரசன்; கதிகான்று = கிரணஙகளை வீசி; இமைக்கும் = பிரகாசிக்கும், முறபவம் = முற்பிறப்பு; சினகரம் = கோவில்; புறவு = புறு

(கரு) இறந்த = கடந்த; கஙகம் = கழுகு; அலகால் = மூக்கினால்.

(கசு) வல்லினில் = வலிமையோடு; விழைவில் = விருப்பத்தோடு; வசைபடு = இழிவாகிய.

திவிழி யெருவை தொடர்ந்திட வந்தச் சிவாலய
ந்தனைவலம வரலா, லாய்பிழிக கொனறைத தொடை
புனை சடிலத தண்ணன் முனனுவிநத ததனுற், பாய்தி
ரை யுடுதத நெடுநிலப பரபபுப பரித்திடும பாரதி
வன் மகளாத, ஆயசெங் கமலத திருமக ளென்னத
தோன்றியென றுணைவியு மானுய் (கஎ)

வேறு.

எனறிவை கூறக கேட்ட வேநதிழை யெழுநது
போறறி, நன்றிதென றிறும்பூ தெயதி நலனுடை நியு
நானு, மொன்றிமுன் னெடுதத காயத துற்பவ முறை
ததா யாஙகள, ளெனறினிப பிறககுந தனமை செப
புதி தெரிய வெனறுள் (கஅ)

மெனனடை யனன மன்னுய வேறினி யிரண்டா
ஞ சன்மன, பனனக வேநத னேநதும பாரமிசைச
சிநது நாடடின, மனனவ னுவன பானி சஞசயன மக
ளாத தோனறிக, கனனலந தருமென றேளிற கலந
துறக் களிதது வாழுவாய (கக)

படியிலோா மூன்ருஞ சனமம பகாசவு ராட்ட
நாட்டில, வடி யயிற சுடாவே லேநது மனனவ னுவன

(கஎ) எருவை=கழுகு; ஆய=வணடுகள் ஆராயும்; பிழி=தே
னையுடைய; பாய்திரை=தாவுகின்ற அலையினையுடை
ய சமுததிரததை, அனமொழிததொகை, நெடுநிலப்
பரப்பு=அகனற உலகம், இருபெயரொட்டு; பாரதி
வன=அரசன்.

(கஅ) இறும்பூது எய்தி=ஆசசரியமடைநது; ஒனறி=பொரு
நதி.

(கக) வேறுஇனி=இனிமேல் வரும்வேருகிய.

யானீ, கடிமதிற் கலிங்க நாட்டிற் கலிங்கர்கோன் மக ளாகத் தோன்றி, யிடிமுரச் சதிரும வாயி லென்மனைக் கிழத்தி யானவை. (உ0)

மருவொரு நான்காஞ் சன்மம் வளங்கொள்காந் தார நாட்டிற், றிருவளர் ரரச ஞாயகோல செலுத்து வன் யானீ சீறிப, பொருதரி யலரை வெலலு மகதா கோன புதலவி யாகிச, சுருதிவணை டிமிரும பைந்தார் சூட்டியென றுணைவி யானவை. (உக)

சிறந்ததோ ரைந்தாந தோற்றந திகழிய லவந்தி நாட்டிற, பிறந்தர சளிப்பன யான் பேருல கனைத்தும போற்று, மறந்தரு வடிவேற் றுணைத் தாருணன மக ளா வநதென, னறந்தரு மனைவி யாகி யிருப்பையங களவில காலம (உஉ)

முருந்துறழ முறுவன மானே மூவிரண டாமபி றப்பிற, பெருந்தமி ழருத்த நாட்டிற் பேரர சளிப்ப ன யானீ, யிருந்தவப பலனால விஞ்சும யாதிதன மக ளாகத் தோன்றி, யருந்தவத திருமா தொதத னமப்ய மதனிற் சேவை (உ௩)

---

(உக) மகதர்கோன்=மகததேசத்தரசன்.

(உஉ) தோற்றம்= பிறப்பு; இயல்திகழ் = புகழ்விளங்கும்; மறம் = வீரம்; தாருணன=தாருணன் என்னும் அரசன்.

(உ௩) முறுவல்=பல்; பெருந் தமிழ் அருத்தம்=உயர்ந்த தமிழ்ச் செல்வம்; இருந்தவம்=பெரியதவம்; விஞ்சும்= மேம்பட்ட; யாதி=யாதி எனனும் பெயரையுடைய அரசன்.

கழிதரு மேழாஞ் சன்மங் கைதவன் குலத்திற் றோன்றி, யெழில்பெறு பதும வன்ன னெனும்பெயர் பெற்று வாசம், பொழிமலர்ப் பைந்தார் வேம்பின் பூந் தொடை புனைந்து நாளும், பழிபவம் பயிலா வண்ணம் பாண்டிநா டளிப்பன் யானே. (உச)

நீயும்ப் பவத்திற் செல்வ நிறைந்திடும் விந்த நாட் டிற், காயும்வெங் கதிர்வேன் மன்னன் கண்ணெனக் கதிர்கொண் முத்த, மேயும்வேய் மருட்டு மென்றோள் வசுமதி யென்னு நாமந், தோயுமோ ரணங்காய் வந்து தோன்றிநீ வளர்வா யுன்னை. (உரு)

மங்கல முரச மார்ப்ப மன்றலசெய் தளிப்பா னு ன்னிச், செங்கதிர் மணிகள் வேய்ந்த செம்பொன்மண் டபஞ்சோ டித்துத், துங்கவேற் கரனுன் றுதை தூதரி லோலை போக்க, வங்கணவந் தெய்தும் வைவே லரச ரை யறையக் கேட்டி. (உசா)

கொண்டலகண் படுக்குஞ் சோலை குலவயோத் தியர்தங் கோமான், வண்டலம் வருந்தண் பைந்தார்

(உச) கழிதரும்=நீங்கும்; கைதவன்=பாண்டியன்; பதும வன்னன்=பதமவர்னன; வாசம்பொழிவேம்பின் = வாசனைவீசும் வேப்பமரத்தினது; மலர்ப்பைந்தார்= மலருந்தன்மையினையுடைய பசியஅரும்புகளாலாகிய; பூந்தொடை=அழகியமாலை.

(உரு) காயும் வெங்கதிர்வேல்=கொல்லுந் தன்மையுடையதும் கிரணங்களை யுடையதுமாகிய வேலாயுதம்; முத்தம் எயும்=முத்துக்கள் பொருந்தும்;வேய்=மூங்கில்; மருட்டும்=மயங்கச்செய்யும்; தோயும்=பொருந்திய.

(உஎ) கொண்டல் கண்படுக்கும்=மேகங்கள் உறங்கும்; வண்டு அலம் வரும்=வண்டுகள் உலாவுகின்ற.

வனையுங்காந் தார மன்ன, னெண்டலத் தரசர் போற்று மிருபதன் றுருப தேயன், விண்டலத் தமரர் போற்றும் விறலுடை யவந்தி வேந்தன் (உஎ)

பல்லவ தேய மாளும் பார்த்திவன் பன்னுந் தொன்னூ
வலலவன் யானைத் தானை வாரண வாசி மன்னன் [ல்
விலலவ னாரின மாலை மிலைந்திடு நேரி வெறபன்
நலலொளி முடிசோ மனனா நன மணச சாலை நண்ண•

யானுமங கெயத நீயன றிசையளி முரன்று பாடு, தேனுமிழ மலாபபைந தாரென் றிணடிறற றோ ளிற சூட்டப, பானுவின் குலதம்தா முனனும பார்த்திவ ரனைக ரீணடி,யூனுமிழ படைக ளோந்தி யுருதெ ன்னோ டியுததரு செய்வார. (உகூ)

அஙகவா தம்மை யெலலா மாடல்வெங் கரிக்கூட்டததோா, சிஙகம தென்ன வென்று சேயிழை யுனை யான் கொண்டு, சஙகமா முரசு பமபை தழங்கிட வானில் வாழும், புஙகவா பரவுங கூடற புரிதனிற புகுநத பினனா. (௩0)

அளபபருங காலம் மன்போ டாயிழை நீயு நானு, முளபபடும போகந துய்ததிட லெகொரு குடைககீழா

---

(உஅ) யானைததானை = யானைப்படையினையுடைய; வாரணவாசி = காசி; வில்லவன் = வில்லையுடைய; ஆர் இன் = ஆததியினது; மிலைந்திடு = தரிததிடும்; நேரிவெற்பன் = நேரிமலைக்குரிய சோழவேந்தன்.

(உகூ) அன்று = அப்பொழுது; அளி இசை முரன்று பாடும் = வண்டுகள் இரைந்து இராகததைப்பாடும; ஊன் உமிழ்படை = மாமிசஙகளைச் சிதறுவிக்கும் ஆயுதம்.

(௩0) ஆடல் = சண்டைசெய்கிற; கூடற்புரி = மதுரைநகர்.

(௩க) உளப்படும் = விரும்பும்; களப்படும் = கணடத்துப்பொருட...

ண்டு, வளப்படு மகங்க ளாற்றி வளநிதி மறையோர்க்
கீந்து, களப்படுங் கறையி னான்றன் கனைகழல் பூசை
செய்து (நூக)

வள்ளைவார் குழைதோய் கண்ணாய் மழகளி றெ
ன்ன வாங்கோர், பிள்ளையாம பெறுவ மனனேன் பெ
ருங்கலை யுணாநது துமபி, கள்ளையாா கடுககை மாலைக
கடவுளுக கடிமை பூண்டு, வெள்ளைவான் மதியம் போ
ல வளாந்துபோ விளங்கு நாளில் (நூஉ)

அணிகெழு செழுமபொற சோதி யவிரமணி மு
டியுஞ சூட்டி, மணிமுடி யநநத னைநது மாநில மவன்
பா னல்கித, தணிவருஞ சனன மெனனுந தழலினுங
கொடிய வெய்ய, பிணிகெட வேட்கை யோடும பெ
ருநதவ மியற்ற வெண்ணி (நூங)

தெனறலங கனறு சநதச சிலைமலா வாசம வீசுங்
குன்றமாந தினிது வைகுங குறுமுனி குறுக நமபான
மன்றலங கோதை நீயும யானுமாய் மருடசி நீஙகி
யன்றவன் றனனை நோககி யருநதவ முழுபப நின்றே.

அரியநற றவஞசெய் காலை யகததிய னெமககு ஞானத
துரியநற சிவயோ கததை யுவநதுப தேசஞ செய்வா
னெரிசுடாப் பிழம்பா மேனி யெந்தையைச சிந்தை தன்னிற்
றெரியுமவ் வியோகநினறு சிததியா முததி சோவேம.

(நூஉ) வள்ளை = வள்ளைக்கொடிபோலும்; வார்குழை = நீண்ட காதை; தோய் = பொருந்தும்; மழகளிறு = இளம் யானை; தும்பி = வணடு.

(நூங) கெழு = பொருந்திய; தணிவு அரும் = தணியாத.

(நூச) தெனறல் அம் கன்று = இளந்தென்றல்; உழப்பம் = வருந்திச் செய்வோம.

நவமிகு பம்பை நாட்டி ஞயுரு வெடுததது முன்னாட்
சிவநிசி தன்னி லீசன் றெரிசனங் கிடைதத பேற்றாற்
பவமகன றுய்ய நன்மை பலிததது பாவை நீயுந
தவமதிவ் விரதந் தானே தவறிடா திழைததி யென்றான.(நசு)

ஒருவருந திங்க டோறு முபபபக கததிலுற்று
வருசதுாத தசிக டோறு மழுவலான் றனனைவாசந
தருமலா கொடபூ சிததுத தணநதெழு பிறபபு நீங்கி
யிருவரும் பொருவி லாப்பே ரினபவீ டெய்தி னால.    (நஎ)

சிவனறிருக கோயினை மேவிச சிவநிசி விரதந தனை
னிற, சிவனறனை த தெரிசித தோருஞ சேருவா முத்தி
யென்றே, சிவனறனை யுணா்நது நாளுஞ சிநதைசெய்
முனிவா கேடபச, சிவனறனக கடிமை பூணட சூதனை
முன செபபினனே    (நஅ)

---

(நகூ) ஞானததது உரிய நற்சிவயோகம் = சிவஞானத்தை யடை
விக்கும் சிவயோகம்; தெரியும் = அறிகிற

(நசு) நவம் = புதுமை; தவமது இவவிரதந்தானே = இவ்விரத
மாகிய தவததையே.

(நஎ) ஒருவ அரும் = நீஙகாத; மழுவலான் = மழுவில் வல்ல
வன; தணந்து நீஙகி = விட்டு ஒழிநது.

# வசனம்.

முனிவர்காள்! இச்சிவராத்திரியின் சரிதம் இன்னுமொன்றுரைப்பேன் கேளுங்களென்று சூதமாமுனிவர் சொல்லலுற்றனர் இப்பூவுலகத்திலே புராதலம என்னும் பட்டினத்திலே விபரிசனென்னும் வேந்தனொருவனிருந்தனன். அவ்வேந்தன் தன் சேனைகளோடு நாள்தோறுங் காட்டிற் சென்று மான், மரை முதலிய மிருகங்களை வேட்டையிற் கொன்று வந்து காலங்கழித்து வந்தனன. அரசாகட்குரிய செய்கையின் படி இங்ஙனம் வேட்டை புரிபவனுயினும, அவன் ஒவ்வொரு மாதத்திலும் வரும் வளர்பிறை, தேய்பிறைச சதுர்த்தசிகளிற் றவறாது சிவராத்திரி விரதமிழைத்து அன்றிரவு நான்கு யாமத்தும் பரமேசுவரனை விதிப்படிப் பூசித்து வருவான். இங்ஙனமிருக்க ஒருநாள் அவனது மனைவியாகிய குமுதவதி யென்பாள் விபரிசனை வணங்கி நாயகா! காட்டில் வாழும் வேடர் போல விலங்குகளைக் கொல்வதை யொழிக்காது பரமேசுவரனுக்குரிய சிவராத்திரி விரதந் தவறாதிழைத்து அவ்வீசனைப் பூசித்து வருகின்றனை இஃதென்னையோ அதனைக் கூறுவாயாக வென்றனள். அதனைக் கேட்ட அரசன் புன்னகை செய்து முன் செய்த தவப்பயனுல யான திரிகால வர்த்தமானங்களும் அறிவேனுதலால் எனது முற்பிறவியின் சரித்திரத்தினைக் கூறுவேன் கேளென்று சொல்லலுற்றனன.

பம்பைமாநகரில் நாயாகப் பிறந்திருந்தேன். அப்பொழுது ஒருநாள் பம்பைநாதன் ஆலயத்திற் பலியிடுஞ் சோற்றை யருந்தும்படி அங்குச்சென்ற காலத்து, கோயிற் காவலாளர்கள் கண்டு, என்னைக் கொல்லும்படி கல்லையும் அம்போடு கூடிய வில்லையு மெடுத்துக்கொண்டு ஓடி வந்தனர். அதனைக் கண்டயான், அங்குமிங்கும் ஆவியும் மிகவாடி, அகன்று பிழைக்கும் வகை தேடி, பிரியாத் துன்பக்கடலாடி, பிரகாரத்தின் வழியோடி, ஆலயத்தை வலமாய்சசுற்றி, வெளியிலோட வழியில்லாததால் மீட்டும் பலிபீடத்தினருகே வந்தனன். அன்று சிவராத்திரி

கூடிய சுபதினமாகையால், அப்பொழுது பிராமணர் பலர் தட்டேந்தித தீபாராதனை செயய; பிறைமுடிப் பெருமானைப் பேறெத தரிசிததது. நெறிகாணுது நின்று தயஙகினேன். பின் னாத தூரத்தி வநதவாகளி லொருவன் அம்பை யெய்து என் னைக் கொன்றனன. அசசுபதினததில் ஆலயத்தை வலம் வநது பமபைநாதரைப் பாாதது, அப்பெருமான சந்நிதியி லுயிாநீநத காரணததால முக்கால வாத்தமானஙகளு முண ருந தனமைபெறறு, அகிலததை யாளும் அரசனுகப் பிறந் தேன். இஙஙனமாய உயாவையளிநதது சிவராததிரி தினதது, தண்மதி முடியோன் றரிசன விசேடமே யெனத தோந்து ஒவ்வொரு சிவராததிரி தினததிலும் தவருது விரதமிழைத் துப் பிஞுகனைப் பூசிதது வருகின்றேன். இஙஙனஞ் செய் யின் எததகைய பாவமும் சூரியன முறபட்ட பனியெனவா கும். ஆதலால் நீயும் அஙஙனமே செய்வாயாக வென்றனன். குமுதவதி இஙஙனஞ் சொல்லிய விபரிசனை நோக்கி நாயகா! எனது முற்பிறப்பின வரலாறறினைக் கூறுவாயாக வென்ன, விபரிசன, நீ மல்லிகார்சுனததில கோயிலில வசிக்கும் புறு வாகப் பிறந்திருநதனே. அப்பொழுது ஒருநாள் நீ ஓர் மாமிசத் துணடை வாயிலே கவ்விக்கொணடு வாலும, கழுகு ஒன்று கணடு அந்த மாமிசததை யபகரிக்குமாறு உனனைத துரததி வந்தது. நீ அக்கழுகுக்குப் பயந்து ஆலயததைச் சுறறி வந்து துஜஸ்தமபததின் மத்தியில ஒளிநதிருந்தனை. அக்கழுகானது தொடர்ந்து வந்து மூக்கினுல் உன்னைக் கொததிக் கொன்று விட்டு அந்த மாமிசததுணடைக் கவவிச சென்றது. கழுகு தெருததக் கோயிலைச சுற்றிவநது அநாதி முததன் சநநிதி யில் ஆவிநீததிட்ட காரணத்தால், பார்ததிவராஜன் புதலவியா ய்ததோன்றி எனக்குப் பாரி யாயினை யென்றனன் அதனைக் கேட்ட குமுதவதி நாமிருவரும் இனிப் பிறக்குந் தன்மையை யுஞ் சாற்றுவாயாக வென்றனள்.

அனனமனையாய்! கேட்பாயாக இனி இரணடாஞ்சன்மத் தில் யான் சிந்து நாட்டரசன் சேயாய்த் தோன்றி அந்நாட்டை

யாள்வேன். நீ சஞ்சயவரசன் சிறுமியாய்த் தோன்றி என்னை மணந்து வாழ்வாய மூன்றாஞ் சன்மத்தில் சவுராட்ட நாட்டரசன் சேயாயத்தோன்றி அந்நாட்டை யரசளிப்பேன். நீ கலிங்கநாட்டரசன் காதலியாயத தோன்றி என்னை மணந்து வாழ்வாய். நானகாஞ் சன்மததில காந்தாரநாட்டரசன் கான்முளையாயத தோன்றி அந்நாட்டையரசளிபபேன நீ மகதராஜன் மகளாய்த தோன்றி எனனை மணந்து வாழ்வாய. ஐந்தாஞ்சன் மததில் அவந்திநாட்டரசன் அணிசுதனுகி அநநாட்டை யாள்வேன. நீ தாருணவேநதன் தையலாயத தோன்றி என்னை மணநது வாழ்வாய ஆறாஞ்சன்மததில தமிழ்சசெலவ நாட்டிற பிறந்து தனியரசளிப்பேன. நீ யாதி யென்னும் அரசன் மகளாய்த தோன்றி எனனை மணந்து வாழவாய். எழாஞ்சன மததில் பாணடிநாட்டரசன் புதல்வனுகப் பிறந்து பதமவானனென்னும் பெயா பெற்று அநநாட்டையாள்வேன். நீ விந்த நாட்டரசன மகளாய்ததோன்றி வசுமதியெனப்பெயர்பெற்று வளாவாய். அப்பொழுது நின தந்தையாகிய விநதர் கோமான், நின்னை மன்றல்செயதளிப்பான் சுயம்வரம நாட்டி மனனர்கட்கெல்லாம் மணவோலை யனுப்புவன அவ்வோலையைக் கண்ணுற்ற அயோததியரசன, காந்தாரமன்னன், துருவதேசாதிபன, அவந்திவேநதன, பல்லவபாாததிவன், காசியா கோமான், சோழ பூபதி முதலிய மன்னவாபலா அசசுயம்வர மணடபததினுக்கு விஜயஞ்செய்வா யானு மஙகுவருவேன. அககாலையில் நீயெணக்கு மாலைசூட்டிடுவாய. அதனுல் மற்றைய மன்னர்களெல்லாம் பொருமையுற்றவராய எனனோடு யுததஞ்செய்வர். அநதயுததததில், அநேகம் யானைக்கூட்டதது ஓா சிஙகம் நுழைந்தது போல நானசென்று அவ்வரசாகளைவெல்வேன. பினனர் நினனை வதுவை புரிந்து நினனொடுகூடி நெடுஙகாலம் வாழ்ந்து, மதுரைககுசசென்று மாநிலஙகாப்பேன. அன்றியும் அளவற்ற தானதருமஙகளையும், அசுவமேதாதி யாகஙகளையும் எஞ்ஞான்று மிழைததுவருவேன காலகாலனைக் காலநதவறாது கனிந்துபூசிப்பேன். அக்காலையில் நமக்குச சிஙகமனைய ஓா செல்வன் பிறப்பன். அவன் சந்திரன் கலைபோற் செழிதது வளர்

